# புதுவைப் புகழ் மணிகள்

தொகுப்பு நூல்



புதுவைப் புலவர்கள்,
அரசியல் மேதைகள்,
நூலாசிரியர்கள்,
இதழாசிரியர்கள்,
பல்துறை சான்றோரை
அறிமுகம் செய்யும்
முதல் நூல்.

தொகுப்பாசிரியர் : மன்னர் மன்னன்

முத்துப் பதிப்பகம்
வளவனூர்

# முன்னுரை

ஊற்று இறகின் கூர் முனையினின்று தெறித்து விழுந்த ஒரு மைத்துளி அளவே இந்திய நாட்டின் நிலப்படத்தில் இடம் பெற்றிருக்கிறது புதுவை மாநிலம்.

இதனால் இதன் புகழ் இத்தனையளவுதான் என்று மதிப்பிட்டு விடலாமா?

நிலப்பரப்பினைக் கொண்டு அதன் புகழை வரையறுத்து விடலாம் எனில், பரப்பு அடர்ந்துள்ள காடுகளையும்-அவற்றையும் விட மிகுதியாயுள்ள நீர்ப்பரப்பையும் பெருமைப்படுத்த வேண்டியவர்களாவோம்.

இதனை எண்ணியே

அறிவிற் சிறந்தோர், ஒரு நாட்டின் மதிப்பினை எடை போட அங்கே தோன்றிய சான்றோர்களைக் கொண்டு வரையறுக்க வேண்டும் என்கிறார்கள். இந்த உரைகல்லில் புதுவையை இட்டுப் பார்த்தால் புதுவையின் புகழ் மாணப் பெரிது என்று எவரும் துணிந்து கூறுவர். உரையரங்குகள், பட்டிமன்றங்கள், கவியரங்குகள் பல நூறு அமைப்பதைவிட சிறந்த நூல் ஒன்றைப் படைப்பதுதான் நாம் வாழுகின்ற இந்தத் தலைமுறைக்கும் வரவிருக்கும் தலைமுறைக்கும் பெரும் அளவு உதவும் பணியாகும் என்பார். புதுவைத் தமிழ்ச் சங்கத் தலைவரும், வரலாற்றுச் சங்கத் தலைவரும் ஆன பெருமகனார் திருமுடி சேதுராமன் அவர்கள். அவர்களும் இந்த வகையில் ஒல்லும் வகையிலெல்லாம் தொண்டாற்றி வருகின்றார். அவர் வழியில் ஏதேனும் நல்வினைவுகளை உருவாக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது.

புதுவையின் புகழினை நிலைநாட்டும் அரிய சான்றுகளை அள்ளித்தரும் முயற்சியில் புதுவை வானொலி சிறப்பான பணி புரிந்திருக்கிறது.

வானொலி பரப்பிய அந்த உரைகளைத் தொகுத்து இதோ உப்பிட்டு அளிக்கிறேன். உரைநிகழ்த்தியவர்கள் அரிதின் முயன்று தொடுத்த விவரங்களை மேலும் விரிவாக ஆய்ந்து பார்க்கும் வாய்ப்புள்ளவர்கள் அந்தப் பணியில் இறங்கிட இந்த நூல் வழிகாட்ட முடியும்.

புதுவை வரலாறு இங்கே தொண்டு புரிந்த புகழ்மணி ளிர் ]வரலாறு மேலும் மேலும் தோன்றுதற்கு கால்கோள் விழா நடத்த உதவிய பெருமகனார் திருமுடி சேதுராமனுக்கும் தோள் கொடுத்த முத்துப் பதிப்பக உரிமையாளர் எம். லட்சுமணன் அவர்களுக்கும் நன்றி.

தமிழ்ப் பணியிலும் தாயகப் பணியிலும் தளராது ஈடுபடுத்திக் கொண்டுள்ள வானொலிக்கும் உங்களின் நன்றியை உரித்தாக்குகிறேன்,

மன்னர் மன்னன்

# சாரம். பு. அ. பெரியசாமிப் பிள்ளை.

**சிவகண்ணப்பா.**

---

பூமணக்கும் பொழில் புதுப்பாளையம் வாழும் பைந்தமிழ்ப் புலமை சான்ற நாமணக்கும் நாவலன் மகா வித்துவான் பு. அ. பெரியசாமிப் பிள்ளை. கற்றோர் மடுக்கும் கவிஞனுய் வாழ்ந்தவன், தமக்குப் பின் வாரிசுகளை உருவாக்கிய வண் டமிழ்க் கவிஞன்.

19-ம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும் இருபதாம் நூற்றுண் டின் தொடக்கத்திலும் மரபுவழிக் கவிதை மன்னராகப் பக் திப் பாடல்களை நினைத்த மாத்திரத்திலேயே இயற்றும் பாவலராகக் கொடிகட்டி வாழ்ந்தவர் பெரியசாமிப்பிள்ளை "புதுவைப் பெரியசாமி எனும் புலவரேறே!" எனப் புகழ். சிறந்த மகா வித்துவான் என்று மக்கள் தந்த பட்டத்தோடு எழுபத்திரண்டு ஆண்டுகள் வாழ்ந்தார் பெரியசாமிப் பிள்ளை.

செருப்புத் தைக்கும் தொழிலாளி ஒரு நாட்டின் சர்வாதி காரியாக முடிகிறது. சுவர்களுக்கு வண்ணம் பூசும் தொழி லாளி உலகத்தை ஆட்டிப் படைக்கும் அறிஞனுக வாழ முடிகிறது. சுருட்டுத் தொழிலாளி கவிஞரேறுய் வாழ முடியும், என வாழ்ந்து காட்டியவர் பெரியசாமிப்பிள்ளை,

சுருட்டுத் தொழிலாளியாயிற்றே என்று எவரும் கவிஞரை அலட்சியப்படுத்தியதில்லை. புதுவைச் செந்தமிழ்ப் பிரகாச

சபை என்று ஓர் இலக்கிய அமைப்பு இருந்தது. அதற்குக் கௌரவத் தலைவர் திருவுடைச் சீமானல்ல. ஆட்சி அதிகாரம் படைத்த அதிகாரியுமல்ல. சுருட்டுத் தொழிலாளியாகப் பணியாற்றி வந்த கல்விக் கடல் பெரியசாமிப்பிள்ளைதான் கௌரவ அக்கிராசனாதிபதியாக ஏற்றுக் கொள்ளப்பட்டார். தொழிலைவிட அறிவை மதித்தார்கள் (அன்றைய) மக்கள்.

புதுப்பாளையம் பாவலரிடம் பயின்று ஒவ்வொருவரும் கல்வி கற்றரோடு அமையவில்லை. கவிதை தீட்டுவதில் வல்லவர்களாகவும் திகழ்ந்தார்கள். அவர்கள் தீட்டிய கவிதைகள் அனைத்தும் யாப்பமைதியிலிருந்து வழுவாத கவிதைகளாகவே விளங்கின. இராமானுஜ செட்டியார், வீ. துரைசாமி முதலியார், சுப்புராயபத்தர், பங்காரு பத்தர், பாவேந்தர் பாரதிதாசன் என்று இன்று போற்றப்படும் கனகசுப்புரத்தினம், சேவு. சடகோப ஐயர், வேங்கடாசல நாயகர், ஜெயினுலாபதீன் சாயுபு முதலியோர் குறிப்பிடத்தக்க அவருடைய மாணவர்கள். மகாவித்துவான் மகன் வைத்திலிங்கமும் சிறந்த கவிஞராகவே வாழ்ந்தார். பாவேந்தர் பாரதிதாசன் நீங்கலாக மற்ற மாணவர் அனைவரும் சமய வழிப்பட்ட பாடல்களே இயற்றினர். பாவேந்தர் பாரதிதாசன் அவர்களும் தொடக்கத்தில் தமது குருவைப் பின்பற்றிச் சுப்பிரமணியர் துதியமுது பாடினர் என்பதையும் மறப்பதற்கில்லை.

கவிஞர் பெரியசாமி, பிறப்பால் சைவர், எப்பொழுதும் திருநீற்றோடு காட்சி தருபவர். அவர் சிவநெறிச் செல்வர், என்பதை அவர் தம் மனைவியார் மறைவின்போது அவர் அனுப்பிய நீத்தார் இறுதிச் சடங்கு அழைப்பிதழ் எடுத்துக் காட்டும்.

திருநீற்றுச் சின்னத்தோடு எப்பொழுதும் காட்சி தரும் சிவநெறியாளராயிருந்தாலும், அவர் மதக் காழ்ப்பற்றவராக இருந்தார் என்பதை அவர் இயற்றிய நூல்கள் சான்று பகர்கின்றன. புதுவைக் கலம்பகம், புதுவை வெண்பா, ஸ்ரீமத்

இராமாயண சங்கிரகம் மூன்றும் முழுக்க முழுக்க வைணவ நூல்கள். இந்நூற்களில் வைணவச் சம்பிரதாயம் முற்றும் கடைப்பிடிக்கப்பட்டுள்ளது. முருகன் விஷ்ணுவின் மருகன் என்பது போன்ற கருத்துக்கள் அவர் இயற்றிய சைவ நூலில் காணப்படுகின்றன. ஆனால் அவர் இயற்றிய வைணவ நூற்களில் சைவ சமயத்திற்குரிய ஒரு சொல்லும் இடம் பெறவில்லை. வைணவ இலக்கிய மரபை ஒட்டி நம்மாழ்வார்க்கு ஆஞ்சநேயர் துதி முதலியன இடம் பெற்றிருப்பதைப் பார்க்கிறோம். இளங்கோவடிகளைப் பின்பற்றி சமய நெறிப் பண்போடு இவர் கவிதைகள் நடைபோடுகின்றன.

இன்று புதிய கவிதைகள் அதிகம் தோன்றுகின்றன. ஆங்கிலச் சொற்கள் விரவி வருவதைக் காண்கிறோம். இது பற்றிக் கருத்து வேறுபாடுகள் எங்கும் உள்ளன. இப்படிப் புதிது புதிதாகத் தோன்றுவதை தொல்காப்பியர் குறித்த விருந்து என்ற வனப்பினுள் அடக்குவர். புதிய கவிதையை ஆதரிப்போர். இப்படி மேனாட்டுச் சொல்லைப் புகுத்திப் பாவியற்றும் சந்தர்ப்பம் மகாவித்துவான் பெரியசாமிப்பிள்ளை அவர்கட்கும் ஏற்பட்டுவிட்டது. அவருடைய கவிதைகள் அனைத்தையும் படிப்போர் இலக்கண மரபில் எவ்வளவு கண்டிப்புடையவராக இருந்திருக்கிறார் என்பது புரியும். அப்படியிருக்கப் பிறமொழிச் சொற்களைப் பெய்து பாவியற்றக் காரணம் என்ன?

மயிலாசல கீர்த்தனம் 1901 இல் வெளிவந்த பக்திப் பாடல்கள். இதன் ஆசிரியர் பெ. நாராயணசாமி நாயுடு. இவர் தொழில் இறைவரி மன்றத்தில் மணியம் வேலை அந்த நாளில் இந்த வேலைக்குப் பிரஞ்சு மொழியில் (Receveur-Adjoint) என்பது. தமிழில் மணியக்காரர் என்று மொழி பெயர்த்தாலே போதும். மணியம் நாராயணசாமி நாயுடு என்றே அன்று அழைக்கப்பட்டு வந்தார்.

இவர் நூலுக்குச் சிறப்புரை வழங்குகிறார் மகா வித்துவான் அவர்கள். சிறப்புப் பாயிரத்தில் அவர் எழுதியுள்ள பாங்கைப் பார்ப்போம்.

''சவுரிய மிகுந்த கவுரி குலத்தினன்
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
சோமனை வத்திரமாக் கொளும் தூயோன்
காமனை நிகர்த்த கட்டழ குடையான்
பிசகா தொழுகும் பிராஞ்சிறை வரிகொளும்
ரெசெவேர் அத்முவே னெனுமுத் தியோகன்''

என்பது பாட்டு. என்னதான் மணியம் நாராயணசாமி என்று அழைக்கப்பட்டிருந்தாலும் Receveur adjoint என்று பிரெஞ்சுச் சொல்லைப் பெய்தால்தான் அந்தக் காலத்தில் அதற்கு மதிப்பு என்று கருதிப் பிரஞ்சுச் சொல்லைப் புகுத்திப் பாடியிருக்கிறார், என்பதை நாம் உணர்தல் வேண்டும்.

மகாவித்துவான் அவர்கள் ஆண்டவன் மீது பாடியதோடு அமையவில்லை. தனிமனிதனின் சிறப்பைப் பற்றியும் பாடியிருக்கிறார். கல்வியாலும் ஈகையாலும் சிறந்து விளங்கியவர் புதுவை, கா. ரா. அ. சபாபதி கிராமணியார். இவர் மீது 1912 இல் இயற்றமிழ்ப் பாமாலை பாடினார் புலவர். குறட்பாவிற்கு இலக்கியமாக வாழ்ந்தவர்; சபாபதி கிராமணியார் என்னும் வகையில் பாக்களை அமைத்திருக்கின்றார்.

''வறியார்க் களிப்பதே ஈகை மற்றோர்க்கு வழங்குவது
குறியெதிர்ப்பைத் தன்மையொ க்கும்என
நல்குரவினர்க்கே
யறிவோ டளிக்கும் நினக்'கொப்பு எவர்உண்டு
அவனிமிசை
மறியாத கீர்த்திப் புதுவைச் சபாபதி மன்னனே.''

இப்படிக் குறப்பாக்களை இணைத்தே பாடிய பாக்கள் பல.

இவரியற்றிய நூற்கள் பல. அனைத்தும் கிடைத்தில. கிடைத்தவை சில.

மயிலைச் சிலேடை வெண்பா, மயிலைக் கலம்பகம், மயிலத் தந்தாதி. இதில் ஒரு சிறப்பு. இந்நூலை எழுதியதோடமைத்யாது இதற்கு ஓர் உரையும் தாமே எழுதிவைத்தார். புதுவை வெண்பா, புதுவைக் கலம்பகம், ஸ்ரீமத் இராமாயணம். இவை மூன்றும் வைணவ நூற்கள் இவரியற்றிய நூற்கள் அனைத்தும் சோடை போகாதவை.

அந்தாதி பாடுவது எளிதான காரியமல்ல. கவிதைத் தீட்டும் ஆற்றலோடு இலக்கிய அறிவு வளம் பெற்றிருக்க வேண்டும். எடுத்துக்காட்டுக்கு ஓர் பாட்டு.

“காக்கைக்கு மாறுவிழி யொன்றளித்தவன் காசினியைக்
காக்கைக்கு மாறுவிடாஅய னுற்கற்கும் காண்பல
காக்கைக்கு மாறுவிளையாத வேலகரி அரவக்

காக்கைக்கு மாறுவிறப் புறுஞ்சீர்மயிற் கல்லினனே”

இது அந்தாதிப்பாட்டு. காக்கைக்குமாறு காக்கைக்குமாறு என நான்கு முறை வந்துள்ளது. பிரித்துப் பார்க்கும்போது வேறுபட்ட பொருள் தெரிகின்றது.

காக்காசுரனுக்கு மாறிப் பார்க்கும்படி விழி ஒன்று அளித்தவன் விஷ்ணு என்பது பொருள். காக்கைக்கு மாறுவிழி ஒன்று அளித்தவன் என்ற அடிக்கு, உலகத்தைக் காப்பதற்கும் என்பதை உணர்த்துவது. “காசினியைக் காக்கைக்கும்” என்ற சொற்றொடர்.

நல்லொழுக்கம் விடாத பிரமதேவன் என்பதை ஆறு விடா அயன் என்பது உணர்த்தும்.

“கா கைக்கு மாறுவிளையாத வேல” என்று பிரித்தால் கற்பகத்தருவைப் போன்ற திருக்கரத்தில் தவிர்த்தலை உண்டாகாத வேலாயுதத்தையுடையவரே என்ற பொருள் வெளிப்படும்.

மலைப்பாம்பு வாய் திறந்தலுக்குத் தயிரியத்தை விடுத்து அச்சத்தை அடையும் என்ற பொருளை அரவு அங்காக்கைக்கு மாறு விறப்புறம், என்ற ஈற்றடி விளக்கும்.

இவ்வாறே நூல் முழுதும் அறிவு மணம் வீசும் வண்ணம் புலமைக்கோர் எடுத்துக்காட்டாய் மயிலத்தந்தாதியை இயற்றியிருக்கிறார்.

இவரியற்றிய ''புதுவைக் கலம்பகம்'' கல்விக்கிருப்பிடம் புதுவை என்ற பாவலரும் நாவலரும் பாராட்டும் வண்ணம் அமைந்துள்ள ஓர் அற்புத நூல்.

அம்மானை ஊசல் முதலிய உறுப்புக்கள், ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா முதலிய பாவினங்கள் அகம் புறம் அகப் புறம் முதலிய பொருட்கள், நகை பெருமிதம் உவகை முதலிய சுவைகள், சிலேடை மடக்கு முதலிய அணிகள் எனப் பலவும் கலந்து வரும் அந்தாதி அமைப்புடைய கலவை இலக்கியமே கலம்பகம், இந்த இலக்கணத்துக்குச் சிறிதும் மாறுபடாது. மகாவித்துவான் எழுதிய புதுவைக் கலம்பகம் நடை போடுவதைப் பார்க்கலாம்.

ஒரு பெண் காதலால் வேதனைப்படுகிறாள். அந்த வேதனையை மேலும் மேலும் வளர்த்து நடுங்க வைக்கிறான் மன்மதன். அவள் படும் காதல் வேதனை புதுவைக் கோவிலில் எழுந்தருளியிருக்கும் வரதராஜப் பெருமாள் மீதுதான்.

அந்த வேதனையைத் தவிர்ப்பதற்கு ஒரே வழிதான் உண்டு. வரதன் மீது போர்த்தப்பட்டிருக்கும் மாலையை வாங்கிவந்து கொடுத்தால் போதும். அவரிடமிருந்து அதை வாங்குவது யார்? அதற்குறிய தகுதி யாருக்கு உண்டு? சிந்தித்தாள் பெண்...மேகத்துக்கு மட்டும்தான் இருக்கிறது. என்று முடிவு கட்டுகிறாள். ஏன்? பெண் எப்படி காதல் வெப்பத்தால் துடிக்கிறாளோ அப்படியே பயிர்கள் எல்லாம் சூரியனின் வெப்பத்தால் கருகுகின்றன. அப்படிக் கருகிச் சாகாமல் அப்பயிர்களைப் பாதுகாப்பது எது? மேகமல்லவா? பயிர்

களுக்குத் தேவையான நீர் கடலில் இருக்கிறது. அந்தக் கட லிருந்து நீரை வாங்கிப் பயிர்களுக்குக் கொடுத்து அவைகளை வாழவைப்பது மேகம். விஷ்ணு பள்ளிகொண்டிருக்கும் கடலி லிருந்து நீரை வாங்கும் மேகத்துக்கு அவ்விஷ்ணுவின் அம்ச மாக இருக்கும் புதுவை வரதனிடம் மாலைகளை வாங்கிக் கொடுப்பது எளிதான காரியம் என்று அந்த ஏந்திழையாள் எண்ணுவதில் தவறில்லையல்லவா?

அந்தக் கவிதைப் பெண் பேசுவதைக் கேட்போம்.

“நெடுங்கடல் உண்ட நீரினைப் பெய்து
நிலவரையினில் அழல் காலும்
கொடுங்கதிர்க் குடைந்த பயிரெலாம் வளர்க்கும்
குளிர்மிகும் கொண்டல்காள் கேண்மின்
கடுங்கலை மின்செய் புதுவைவாழ் வரதன்
காலணி அரங்கவேள் எனைச்செய்
நடுங்கலைத் தீர்ப்பாள் அலங்கலை வாங்கி
நல்குவீர் நான் பணிந்தேனே.”

அழகிய உயிரோவியமாக இந்தக் கவிதையைத் தந்த பு. அ. பெரியசாமி அவர்கள் உண்மையிலேயே பெரிய ஆசாமிதான்.

கவிதைகளில் மரபைப் பின் பற்றியதைப் போல் வாழ்க்கை முறையிலும் பழமையைப் பின்பற்றியவராகவே இருந்து வந்திருக்கிறார். அவர் காலத்தில் புதுவையில் வீதியின் பெயர்கள் சாதியின் பேரால் அமைந்திருந்தன. நால் வருணப் பகுப்பைஆதரிப்பவர் போல் அவர்கவிதைகள் அமைந்திருக்கின்றன. அவ்வீதிகளைச் சுட்டும் பொழுது, பாணர்களை ஆற்றுப் படுத்துவது போல் வரதன் வாழ் புது வைக்கு வழிகாட்டுகிறார் கவிஞர். புதுவைக்குச் சென்றால் அங்குக் காணப் படுபவை யாவை என்பதையும் எடுத்துரைக் கிறார்.

"அந்தணர் தெருவை அரசர்கள் மறுகைச்
செந்திரு மிகுந்த வைசியர்கள் வாழ் வீதியைத்
தாளாள ராகும் வேளாளர் ஞெள்ளலை......"
கழிபெருவகையின் விழிகளான் கண்டுமே"

என்று பாடுகிறார். அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற தமிழ் மரபை ஒட்டிப் பாடலை அமைக்கிறார். ஸ்ரீமத் இராமாயணச் சங்கிரகம் என்ற நூலில் 'வாழி' என்ற பகுதியில் பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்ற மரபைப் பின் பற்றி வேதியர் மண்ணோர் மன்னர் நீதியாம் வைசியர் சூத் திரர்......... பல்லாண்டே எய்தி 'வாழ்ந்துறுக' என்று பாடுகிறார்.

இவ்வாறு சாதிப் பாகுபாடுகளைக் கண்டு சாதியினர் பண்பு வழி வாழத் தவறினால் அச்சாதிக்குரிய பெருமை அவர் களைச் சாராது என்று சுட்டிக்காட்டத் தவறவில்லை. "தாழ் வான குலத்துதித்த சழக்கரேனும் சகிக்கரிய நோயுடலை சார்ந்தாரேனும், ஆழ்வார்கள் புகழ் பெருந்தேவித்தாய் நாதற்கு அடியவர் நாட்டு அன்பினரேல் அவரே தேவர், தொழுதலத்தில் வந்தாரேனும் மறை நான்கும் ஓதி வைத்த குலத்தாரேனும் புதுவை வரதா! கா என்று ஏத்தாதார் இழி ஞரினும் இழிஞர்காமே" மேற்குலம் நல்லரசா நம் வித்தை களுற்றோம் என்னும் ஆற்றல் கொண்டு தீநாகில் ஆழாதீர் என்று பிறப்பு வழிச் சாதியைச் சாடுவதில் தமக்குப் பின்வரும் கவிஞர் சந்ததிக்கு முன்னோடியாக நிற்கிறார்.

புதுவையின் பெருமையைச் சித்தரிப்பது அவரியற்றிய புதுவை வெண்பா நூறுபாடல்கள் கொண்டது புதுவை வெண்பா. நூறு பாடல்களிலும் நூறு வகையான பெருமைகள் எடுத்துச் சொல்லப்படுகின்றன, அவைகள் பெருமைகள் என்று சொல்வதைவிட வாழ விரும்புவோர்க்கு ஒரு வழிகாட்டி (guide) நூல் என்று சொல்லலாம்.

புதுவையில் அன்று எத்தனை மொழி கற்பிக்கப்பட்டது. என்ற ஆராய்ச்சி மக்களிடம் எழலாம். தமிழ், சமஸ்கிருதம்,

பிரஞ்சு, இல்த்தீன், கிரேக்கம், உருது, தெலுங்கு, முதலிய பலமொழிகள் அன்று கற்பிக்கப்பட்டன என்பதை அறியும் போது இன்று நமக்கு ஆச்சரியமாக இருக்குமல்லவா? அனைத்தும் ஒரே இடத்திலா கற்பிக்கப்பட்டன. இல்லை என்கிறார் மகாவித்துவான். "பற்பல பாடையின் கழகம் எம் மருங்கும் பொற்பு அமரத்துன்னும் புதுவையே" என்று அவர் பாடுவதைக் கேட்கும்போது இத்துணைப்பீடுடன் புதுவை இருந்ததா? என்று பெருமூச்சு விடாமல் இருக்க முடியாது. புதுவை வெண்பாவைப் புரட்டினால் 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புதுவை இருந்த உயர்நிலையை நாம் அகங் குளிரப் பார்க்கலாம்.

ஆன்மீகம், புராணம், சமூகம், மரபு முதலிய அனைத்தையும் பாடியவர். பு. அ. பெரியசாமிப் பிள்ளை தமிழ் இலக்கியத்திற்குள் புகழாரம் சேர்த்தவர் என்று கூறுவது சாலப் பொருந்துங்கே.



# தமிழ்ப்புலவர் சி. பங்காருபத்தர்

N. அப்பர்

---

"நாவிருக்கும் செந்தமிழோடு இசை இருக்கும், நவின்றிருக்கும் தொடர்மொழியால் பொருள் செறிந்த, பாவிருக்கும் நெஞ்சில் எல்லாம் அன்பிருக்கும், பல்லோர் வாழ் எம் புதுவை நல்ல ஊரில்," என்று பாவேந்தர் பாரதிதாசனால் சிறப்பித்துப் பாடப்பெற்ற செந்தமிழ் மணமும்; இசையின் இனிமையும் கவிதைப் பாங்கும் ஒருங்கேயமைந்த புதுமைமா நகரில் அறிஞர்கள் பலர் தோன்றித் தமிழுக்குத் தொண்டாற்றி மறைந்து வரலாற்றால் மறையாத இடம் பெற்றுள்ளனர். அவர்களுள் தலை சிறந்து விளங்கியவராகிய புரட்சிக் கவிஞருக்கே ஆசானாக இருந்து ஐயந்திரிபற இலக்கண இலக்கியங்களைக் கற்பித்தவர் புதுவை வாழ் செல்வங்களுள் ஒருவராகத் திகழ்ந்தவர், தமிழ்ப்பெரும் புலவர் சி. பங்காருபத்தர் ஆவர்.

இவர் 3—2—1871இல் பிறந்தார். தந்தை சின்னத்தம்பி பத்தர். புதுவை காமாட்சியம்மன் கோயிலுக்குக் கிழக்கேயமைந்த செஞ்சிசாலைக்கப்பால் உள்ள தெருவில் வாழ்ந்தார். புதுவை மகாவித்துவான். பு. அ. பெரியசாமிப் பிள்ளையின் தலை சிறந்த மாணவராகத் திகழ்ந்தார். நல்ல உயரமுடையவர். செம்மை நிறங்கொண்டவர். முழுக் கைகளையுடைய கழுத்து மூடிய கோட்டு அணிந்தவர். வெண்ணிற வேட்டி

யைக் கீழ்ப் பாய்ச்சுடன் கட்டுவார். முப்புரி அணிந்தது போல் வெண்துண்டினைக் கோட்டின்மேல் குறுக்காகப் போட்டுக் கொள்வார். கால் கட்டை அணிவது இவரது வழக்கம்.

நம் பங்காரு பத்தர் தெலுங்கு மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர். பொற்கொல்லர் இனத்தைச்சேர்ந்தவர். இலக்கண இலக்கியங்களிற் சிறந்த புலமை பெற்றவர். புதுவைக் கலவைக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர்; திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையைப் போல் மாணவர்கட்குப் பாடங்களைத் தெளிவாகப் போதித்துப் புகழ் பெற்றவர்.

இத்தகையவரிடம் தமிழ் பயின்று பெருமையடைந்தவர்கள் பலர். அவர்களுள் முதன்மையாகத் திகழ்ந்தவர் கனகசுப்புரத்தினம் என்ற பெயர் கொண்ட புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் ஆவர். தந்தை அறிவு மகனறிவு ஆசிரியர் அறிவு பிள்ளைகள் அறிவு என்பதற்கேற்ப பங்காருபத்தர் சிறந்த அறிஞராகவும், கவிஞராகவும் விளங்கிய காரணத்தால்தான் புரட்சிப்பாவலரை நாம் பெற முடிந்தது.

வழிவழியாக வரும் புலவர்களைப் பற்றி வறுமைப்பிணி பத்தரையும் விடாமற் பற்றியது. அதனால் வறுமையில் வாழ்ந்து வந்தார். கம்பரைப் புதுவை சடையப்ப வள்ளல் ஆதரித்ததுபோல, புதுவை வழக்கறிஞர் தானப்ப ஆசாரி, வள்ளல் ஆரோக்கியசாமி இவர்கள இருவரும் அவரை ஆதரித்து வந்தார்கள். பங்காருபத்தர் கலவைக் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராக இருந்தபோது பாரதிதாசன் அக் கல்லூரியில் சேர்ந்து தமிழ் பயின்றார்.

பாரதிதாசன் கல்லூரியில் சேர்ந்த பொழுதே ஆசிரியருடைய நன் மதிப்பைப் பெற்றார். ஔவை அருளிய ஆத்திச்சூடியில் உள்ள ''நப்போல் வளை'' என்ற சொற்றொடருக்குப் பொருள் கூறுமாறு மாணவர்களைக் கேட்டார். ஒருவரும்

விடை கூறவில்லை. பாரதிதாசன் உடனே எழுந்து விடையளித்தார்.

"சுட்டு யா எகரம் வினவழி அவ்வை ஒட்டி ஙவ்வும் முதலாகும்மே" என்ற நன்னூல் இலக்கண விதியை அடிப்படையாகக் கொண்டு அதனை விளக்கினார். ஙகரம் தான் பயன்படுவதோடு தன் இனத்தையும் தழுவுகின்றது. அது போல நாம் பயன்படுபவராக இருந்து நம் உறவினத்தாரையும் தழுவி வாழ வேண்டும். ஙகரம் மொழிக்கு முதலில் வாராது. ஆயினும், அ, இ, உ மூன்று சுட்டெழுத்துக்களையும் யா, எ என்ற வினவெழுத்துக்களையும் முதன்மையாகப் பெற்று முடவன் கொம்பூன்றி வந்தாற்போல, அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம், எங்ஙனம் என்று சொல்லுக்கு முதலில் வரும், அதன் இனமாகிய ஙா, ஙி, ஙீ, ஙூ, முதலிய பதினொரு எழுத்துக்களும் சொற்களுள் வாரா. எனினும் ஙகரத்தின் பொருட்டு அவ்வெழுத்துக்களையும் இலக்கண ஆசிரியர்கள் தமிழ் எழுத்துக்களின் வரிசையில் சேர்த்துக் கொண்டுள்ளனர். அதுபோல நாம் பிறருக்கு உதவி செய்து வாழ்ந்தால் அவர்கள் நம்மைத் தழுவுவதோடு, நம் உறவினரையும் தழுவி வாழ்வர் என்று விளக்கமாக விடை பகர்ந்தார். இவ்வரிய இலக்கண ஆய்வுரையைக் கேட்ட பங்காரு பத்தர் பாரதிதாசனது பெரும்புலமையைக் கண்டு பெருமகிழ்வு கொண்டார்.

கனக சுப்புரத்தினம் இளமையில் மிகவும் துடுக்குத்தனத்துடன் காணப்பட்டார். ஒருமுறை மகாவித்துவான் பெரியசாமிப்பிள்ளை என்பவர் பத்தரைப் பார்த்து பையன் சுப்புரத்தினம் எப்படியிருக்கிறான் என்று வினவினார். அதற்கு அவர், பையன் எந்த அளவுக்குக் குறும்புக்காரனோ, அந்த அளவு கல்வி கேள்விகளில் புத்திசாலியாக விளங்கி வருகிறான் என்றார்.

புரட்சிக்கவிஞர் பாரதிதாசனைத் தனது மாணவராகக் கொண்டது பற்றிப் பலமுறை பெருமிதம் அடைந்திருக்கிறார்.

ஒரு முறை கல்லூரியில் பங்காரு பத்தர் மேல்வகுப்பிற்குப் பாடம் நடத்திக் கொண்டிருந்தபோது, பாரதிதாசன் அப்பொழுது இளம்புலவர் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார். எனினும், அப்பாடத்தினைக் கவனித்துக் கொண்டிருந்தார். ஆசிரியர் பாடம் நடத்திக் கொண்டிருந்தபோது, இடையில் மாணவர் மத்தியில் வினவைக் கேட்டார். சீதையைப் பிரிந்து துன்புறும் இராமன் குளத்தில் மலர்ந்து காட்சி யளிக்கும் மலர்களையும், உலவுகின்ற அன்னங்களையும் கண்டு வருந்தினான் அதற்குக் காரணம் என்ன? என்றார்.

மாணவர்கள் ஒருவரும் விடையளிக்கவில்லை பாரதிதாசன் மட்டும் நான் விடையளிக்கலாமா? என முகக்குறிப்பால் கேட்டார். அதனையுணர்ந்த ஆசிரியர் சுப்புவினால் விடைகூற முடியுமா? என்றார். முடியும் ஐயா! என்று தயக்கத்துடன் கூறினார். மாணவர் சுப்புரத்தினம் பயப்படாமல் சொல் என்றார். பத்தர். சீதையின் உறுப்புக்களாகிய கைகள், முகம், கண்கள் தாமரை மலர்கட்கு ஒப்பானது போல், நடை அன்னப் பறவைக்கு ஒப்பானது. ஆகவே, அத்தகைய தாமரை மலர்களையும் அன்னப் பறவைகளையும் கண்டதும் பிரிந்திருந்த இராமனுக்கு மனைவியின் நினைவு உண்டாகி, மிகவும் வருந்தினான். இதுவே இராமன் வருத்தத்திற்குக் காரணம் என்றார். இதனைக்கேட்ட பங்காரு பத்தர் சுப்புரத்தினத்தைப் பாராட்டினார்.

பாரதிதாசனுக்கு ஆசிரியராக விளங்கியவர்கள் திரு. பங்காரு பத்தர், திருப்புளிசாமி ஐயா, பெரியசாமிப் பிள்ளை என்போராவர்,

“தமிழ் இலக்கணம்—தமிழ் இலக்கியம்
எனக்குச் சொல்லிக் கொடுத்தவர் புதுவைத்
திருப்புளிசாமி ஐயா செந்தமிழ்
இருப்பே என்னும் பங்காருபததர்
புலவர்க்குப் புலமை ஈந்து நிலவு
பெரும் புகழ்ப் பெரிய சாமிப்பிள்ளை”

என்பவர் ஆவர், என அவரே கூறியுள்ளார்,

பங்காரு பத்தர் அவர்கள் புதுவை வெள்ளாழத் தெருவில் நாடு. சண்முகம் அவர்கள் சமாதியமைந்துள்ள கோயிலில் 'கலைமகள் வாசகசாலை' அமைத்துச் சிறப்புற நடத்தினர். அக்காலத்தில் இவர் புதுவையிலிருந்தபடியே 1918இலிருந்து 'கலைமகள்' என்ற திங்கள் இதழைச் சிறப்புற நடத்தி வந்தார். சில ஆண்டுகள்தொடர்ந்து நடத்தி இலக்கியசேவை செய்துள்ளார். தமது காலத்தில் வாழ்ந்த பல நூலாசிரியர்கள் எழுதி வெளியிட்ட நூல்கட்குச் சாற்றுக் கவிகள் வழங்கியுள்ளார். தம் ஆசிரியரான புதுவைப்புலவர் பு. அ. பெரியசாமிப் பிள்ளை அவர்கள் எழுதி வெளியிட்ட 'புதுவைக்கலம்பகம்' என்ற நூலுக்குச் சிறபுப்பாயிரம் அளித்துச் சிறப்பித்துள்ளார்.

பங்காரு பத்தர் வாழ்ந்த காலத்தில் புதுவைக்கலவைக் கல்லூரியின் தலைவராக விளங்கியவர், சாமி. புருஷோத்தமன் என்பவர். இவர் அக்காலத்தில், காரைக்கால் அம்மையார் புராணம் என்ற நூலைப்பதிப்பித்தார். பெரியபுராணப் பாடலுக்கு ஒப்பான கருத்துள்ள பிற நூல்களிலமைந்த பாடல்களை ஆங்காங்கே மேற்கோள் பாடல்களாகப் போட்டு தொகுத்தவர். அந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் அளித்தவர்கள். திரு. பு. அ. பெரியசாமிப் பிள்ளை, திரு. சி. பங்காரு பத்தர் ஆவார்கள்.

தில்லைநகரில் பொன்னம்பலத்துள் இறைவன் உலகெலாம்உணர்ந்து ஓதற்கு அரியவன்', என அடியெடுத்துக் கொடுக்க, அதனைக் கடவுள் வாழ்த்தாகக் கொண்டு சேக்கிழார் பெருமான் அடியார்கள் வரலாற்றைப் பெரியபுராணமாகப் பாடியருளினர். அதனை நினைவிற் கொண்டு,

உலகெலாம் என்ன ஒருவன் அடியெடுத்து
உதவிடப் பெற்ற அவ்வுத்தமன் அருளால்
சேக்கிழார் பெருமான் திருவாய் மலர்ந்த
புரைதபு பெரியர் புராணத்து ஒன்று

மிக்குஎழில் பெறுகா ரைக்கால் அம்மையார்
புராணந் தனக்குப் பொருந்தும் இடந்தொறும்
சொற்சுவை பொருட்சுவை துதைந்து அழகுற்றுப்
பன்னூல் அதனுள் பரவிக் கிடக்கும்
அருஞ்செயுள் பற்பல ஆங்காங்கு எடுத்தே
உவமை கொடுத்தும் உரைக்குறிப்பு எழுதியும்
அணுகா ரைக்கால் அம்மையார் புராணம்
அரும்பொருள் உவமையைச் செய்யுள் திரட்டுஎன
ஒருநூல் தொகுத்துஅதை உளக்கனி அதனால்
அச்சிட்டு உலகினுக்கு அருளினன் அல்ல!

மேலும் அச்சிறப்புப் பாயிரத்துள் அவர் புதுவையின் பெருமைக்குக் காரணமாக விளங்கும் வீதியின் ஒழுங்கைப் பற்றிக் குறிப்பிடுகையில் கல்லென்ற ஓசையையுடைய கடலை உடுத்து விளங்கும் பரந்த வயல்கள் சூழ்ந்து அலங்கரிக்கப் பெற்ற தேரைப்போல நிமிர்ந்து ஓங்கிய பூவரச மரங்கள் இரண்டு பக்கங்களிலும் காட்சியளிக்க பெருமை பொருந்திய மாடமாளிகைகள் நிறைந்த அழகிய வீதியையுடைய சோலைகள் சூழ்ந்த புதுவை மாநகர் என்பதை,

கடல்ஒரு புடையினில் கல்லெனக் கறங்கத்
தடம்பணை ஒருபுடை இடம்பட வகுத்துப்
பொன்தேர் புனைந்துஎன உற்ற பூவரசு
வளர்ந்து இருமருங்கும் மலர்ந்து வயங்கப்
பீடுபெற வகுந்த மாடமலி மறுகின்
எழில்மிகப் படைத்த மொழில்சூழ் புதுவைப்

பதி' ' என்று இந்நகரைச் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

பங்காருபத்தர் அவர்கள் சில நூல்கள் எழுதியுள்ளார். யசோதர காவியம் என்ற நூலினைக் கவிதை நடையில் எழுதி யருளினர். திருக்குறளிலமைந்துள்ள ஒவ்வொரு தலைப்பினை யும் உரைநடைக் கட்டுரையாக எழுதி வெளியிட்டு வந்தார். புதுவை சட்டப்பேரவை உறுப்பினராகவும் அமைச்சராகவும்

விளங்கிய திரு, வ. சுப்பையா அவர்கள் பங்காரு பத்தரிடம் தமிழ் பயின்றவர். சொல்லாக்கச் செல்வர், மறைந்த இரா. தேசிகம்பிள்ளை அவர்களும், அசோகன் இழந்த அருந்தனம் என்ற நூலாசிரியர் வீரப்பன் அவர்களும், வேறு சிலரும், இவரிடம் கம்பராமாயணப் பாடங்கேட்டவர்கள்.

கலைமகள் வாசகசாலையின் ஆண்டு விழாவினைத் தொடர்ந்து திருப்பாதிரிப்புலியூர், தவத்திரு ஞானியார் அடிகள் தலைமையில் பத்தாண்டுகள் வரை பற்றுடன் நடத்தினார். இவ்விழாவிற்குத் திரு ந. மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு திரு. வேங்கடாசலம் பிள்ளை, கரப்பாக்கம் மடாதிபதிகள் போன்ற பெரும்புலவர்களை அன்புடன் அழைத்துச் சொற்பெருக்கு ஆற்றச் செய்தார் பத்தர். இவர் சைவராயிருந்தாலும் வைணவ நூல்களை நன்குகற்றுப்புலமை பெற்று மாணவர்கட்குப் பாடம் போதித்துச் சொற்பொழிவும் செய்தார். இவருக்கு மகனும் மகளும் இருந்தனர். இவர் இறந்த பிறகு மகனும் மகளும் சிதம்பரத்திலுள்ள தம் அத்தையின் ஆதரவில் வாழ்ந்தனர். மகன் பி. ஏ. வரை படித்தவர்.

பங்காரு பத்தர் அவர்கள் 1801 ஆம் ஆண்டு மயிலம் திருமுருகப் பெருமான் மேல் சிவசுப்பிரமணியம்கீர்த்தனங்கள் என்ற எட்டுப் பாடல்களைக் கொண்ட ஒரு நூலைப் புதுவையில் அச்சிட்டு வெளியிட்டார். அந்த ஆண்டில்தான் பங்காரு பத்தரின் மாணவராகத் திகழ்ந்த புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், கனக சுப்புரத்தினமாகப் பிறந்தார். முதன் முதலில் பாவேந்தர் அவர்கள் பக்தி மார்க்கத்தில் திளைத்து மயிலம் சுப்பிரமணியர் துதியமுது பாடுவதற்கு வழிகாட்டியவராக இருந்தவர். தமது ஆசிரியர் பங்காரு பத்தரே என்று சொன்னால் அது மிகையாகாது. பத்தர் பாடிய கீர்த்தன நூலுக்கு மகாவித்துவான் பெரியசாமிப்பிள்ளை அவர்களின் மாணவர்கள் சிலர் சிறப்புப்பாயிரம் அளித்துச் சிறப்பித்தனர். பத்தர் இயற்றிய கீர்த்தனங்களுள் ஒன்று சாமா இராகத்தில் ஆதி, தாளம் அமைத்துப் பாடிய பாடல்.

விண்ணவர் பணியும் வடி — வேலனே
வண்ணம் உறு மயிலவரை யமருஞ் சீலனே
(விண்ணவர்)
அயிலணி கையனே அடியார்க் கருள் மெய்யனே
அரியநான் மறை புகழ் துய்யனே!
(விண்ணவர்)
பாவியேன் முனம்வாராய் — பங்கயப் பதம் தாராய்!
பன்னிரு கண்களினுல் பாராய்! (விண்ணவர்)
சந்ததம் உனைத்தேடி - சார்த்தேன் புகழைப்பாடி
சஞ்சலம் தீரும் சரண்—கோடி (விண்ணவர்)

இவ்வாறு பக்தி மார்க்கத்தில் திளைத்துத் தமிழ்த் தொண்டு ஆற்றி வந்த பங்காரு பத்தர் அவர்கள், 20-2-1925 இல் தன் 54 ஆம் வயதில் இயற்கை எய்தினுர். அதுபோழ்து புதுவை கல்வித்துறைத் தலைவராயிருந்த பிரஞ்சுக்காரர் வால் மரி துரை (Valmary) அவர்கள், இவருக்கு இரங்கற்பா எழுதிப் படித்தளித்தார். இவர் இறப்புக்குப் பிறகுதான், புதுவை. வீ. துரைசாமி முதலியார் அவர்கள் கலவைக் கல்லூரியில் பணியாற்றினுர்.

இவர் பால் பேரன்பு கொண்டு ஒழுகி வாழ்ந்த அறிஞர் களும், சான்றோர்களும் நன்றி மறப்பது நன்றன்று என்பதனை யுணர்ந்து, புதுவை சப்பான் இராம சாமி ஆசாரி அவர்கள் இல்லத்தில் பங்காரு பத்தர் வாசக சாலையை நிறுவி இனிதே நடத்தி தமிழ்ப் பெரும் புலவரின் நினைவைப் போற்றி வந்ததும் நினைவு கூரத்தக்கது.

# பண்டித. வீ. துரைசாமி முதலியார்

## இராதாகிருஷ்ணன் "சித்தன்"

---

ஆடுகொடிப் புதுவை நீடுநகர் வாழ்ந்த புலவர்கள் தம்முள் எண்டிசைக்கு மொருவரென விளங்கிய தண்டமிழ்ச் செல்வர் பண்டித. வீ. துரைசாமி, முதலியார் அவர்கள்.

இவர், தாம் எழுதி வெளியிட்ட நூல்களில் தம் பெயரைத் "துரைவடிவேலனர்" என்று குறிப்பிடுவது வழக்கம்.

சூடாமணி நிகண்டில், "முருகன் வேள், சாமி, ஆறுமுகன், முகன், குழகன்" என்றுவரும் தெய்வப்பெயர்த்தொகுதியில் 'சாமி' என்னும் பெயர் முருகனைக்குறிக்கும் எனவருதலின் துரைசாமி என்னும் தம் பெயரில் உள்ள 'சாமி' என்னும் வடசொல்லை 'வடிவேலன்' எனத் தமிழ்ப் பெயராக மாற்றித் 'துரை வடிவேலன்' எனத் தம் பெயரை அமைத்துக் கொண்டார்கள்.

இவர் தோற்றப் பொலிவு கம்பீரமானது. மாநிறம்; நல்ல உயரம்; உயரத்திற்கேற்ற பருமன்; எடுப்பான தோற்றம்; நிமிர்ந்த நடை, நேர் கொண்ட பார்வை; புன்முறுவல் தவழும் முகம்; நீறணிந்த நெற்றி; கற்றோர்க்கே அன்றி மற்றோர்க்கு வணங்காத் தலை, கழுத்தில் உருத்திராக்க மணி, நீண்ட கோட்டு, வெள்ளை வேட்டி மேலே ஒரு பச்சைச்

சால்வை; கையில் குடை; காலில் கட்டை இவைகளுடன் தோற்றமளிப்பார் இந்தப் புலவர் பிரான்.

செங்குந்தர் மரபிற்றேன்றி எங்குந்தம் இசை விளங்க வாழ்ந்த இவர் புதுவைக் கலவைக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வந்தார்.

அக்காலத்தில் பண்டிதர் என்றலே அவர் துரைசாமி முதலியார்தாம், என்பதை நற்றமிழ்ப் புதுவை நன்கறிந் திருந்தது.

புதுவைப் புகழ் மணிகளுக்குள்ளே இவருக்கோர் தனி யிடமுண்டு.

பாவலர் தமக்கொரு பாவலராகவும், நாவலர் தமக் கொரு நாவலராகவும், ஆசிரியர் கட்கெலாம் இவரோர் ஆசானகவும் திகழ்ந்தார்.

தமிழ் நன்னூல் துறைகள் ஐந்திலும் வல்ல விந்தைப் புலவரிவர். பாடஞ் சொல்லும்போது பல்வேறிலக்கியங் களிலுமிருந்து பற்பல மேற்கோள்களைக் காட்டுவார். கேட் போர் இவரது வித்தகம் கண்டு வியப்பர்.

ஒரு நாள் "பத்தாயிரம் பாடல்களுக்கு மேல் எனக்கு மனப்பாடமாக வரும் என்றார். கேட்டுக் கிறுகிறுத்தோம். இவர் ஒரு நடமாடும் நூலகமாக விளங்கினர் என்பதில் ஐயமில்லை.

திருக்குறளைப் பாடஞ் சொல்லச் சொன்னேம். ஒத்துக் கொண்டு அதற்கோர் நிபந்தனை விதித்தார். அது: "பாடங் கேட்ட குறளையும் அதற்குப் பரிமேலழகர் அருளியுள்ள உரை யையும் மனப்பாடம் செய்ய வேண்டும்" என்பது.

சரி என்றேம். 2 மாதத்திற்குமேல் எங்களால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. காரணம் நாங்கள் பல்வேறு பணி

களில் ஈடு பட்டிருந்ததால் நாடோறும் குறளையும் அதன் உரையையும் மனப்பாடம் செய்ய இயலவில்லை எனவே பாடம் நின்று போயிற்று. குறளுக்குரிய பெருமை அதன் உரைக்கும் உண்டல்லவா?

"வள்ளுவர் சீர் அன்பர் மொழிவாசகம் தொல்காப்பியமே
தெள்ளு பரி மேலழகர் செய்தவுரை — ஒள்ளிய சீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி யோராறும்
தண்டமிழின் மேலாம் தரம்"

என்ற உமாபதி சிவத்தின் உள்ளக் கிடக்கையை உணர்ந்து வரன்றோ இப்புலவர்பிரான்!

இவர் சமயம் சைவம். இவர் நூல்களில் பல இடங்களில் இவரின் சமயம் பற்றைப் புலப்படுத்தியுள்ளார். கண்ணப்பர் கலம்பகத்தில் புலனை வென்ற ஞானியர்களுக்கே சிவபெருமான் உரியவன் என்பதை "அரிய புலன் வென்றவர்க்கு உரிய சிவன்" என்றும் அப்பெருமான் பெருமையை உணர்த்த வந்த விடத்து "மின்னார் சடையன் - விடையான் தளராத பூதப்படையான்" என்றும் சித்தரிப்பார்.

உமையம்மை தமிழின் இனிய சாயலை உடையவள் என்பதை "மேய தமிழ்ச் சாயலுமை என்ற சொற்றொடரிற் காட்டுவார்.

திருநீறும் ஐந்தெழுத்தும் இவர் வாக்கில் வரும் அழகே அழகு;

"தீயவினை தீர்க்கும் திருநீறும் ஐந்தெழுத்தும் மாயவினை தீர்க்கும் மருந்து."

என்ற அடிகளால் இவரது சிவபக்தி புலனாகும்!

ஆயினும், புதுவை அருள்மிகு வரதராஜப் பெருமாள் மேல் 'மாலை' யொன்று பாடித் தமது நேரிய சமைய நோக்கைப் புலப்படுத்தியுள்ளார்.

புதுவை மகாவித்துவான், பு. அ. பெரிய சாமிப் பிள்ளையின் சிறந்த மாணவர் மூவர். அவர்களுள் முதல் மர்ணவர் கோ. இராமாநுஜ செட்டியார், அடுத்தவர், சி. பங்காரு பத்தர் மூன்ருமவர் நம் பண்டித வீ. துரைசாமி முதலியார் அவர்கள்.

புதுவையில், புகழ்மிக்க மும்மணிகளாக இவர்கள் விளங்கினர். இவர்கள் தோற்றுவித்ததே புதுவைத் "தமிழ்த்தளிர்" என்னும் கழகமாகும்.

அக்காலத்தில், மதுரை, புதுவை, சென்னை, ஆகிய மூன்று நகரங்களிலும் மூன்று தமிழ்ச்சங்கங்கள் இருந்தன. இவைகள் இணைந்து செயல் புரிந்தன. தமிழிலக்கண இலக்கிய நூற்களோடு மருத்துவம் சோதிடம் முதலிய நூற்களையும் இச்சங்கங்கள் வெளியிட்டு அருந்தொண்டாற்றின.

புதுவைத் தமிழ்ச்சங்கம் புராதனமானது. இச்சங்கத்திற்குத் தலைமை தாங்கியவர்கள் அனைவரும் முத்தமிழ் வித்தகர்கள்.

அந்தகக்கவி வீரராகவ முதலியார், களத்தூர் வேதகிரி முதலியார், நாகலிங்க சுவாமிகள், அருணாசலக் குருக்கள், வெண்பாப்புலி கோவிந்தராசுப் பிள்ளை, வேலாயுத சாமி என வழங்கும் வேதானந்த சுவாமிகள் முதலியோர்.

வேதாந்தம், தர்க்கம், வடமொழி தமிழிலக்கிய இலக்கிய இலக்கணங்கள் இவைகளில் வல்லவரான வேலாயுத சாமிகளுக்குப் பிறகும் புதுவைத் தமிழ்ச் சங்கத்தைத் தலைமை ஏற்றுச் சிறப்புற நடத்தியவர் பண்டித வீ. துரைசாமி முதலியார் அவர்களே!

திரு. வேலாயுத சாமிகள் தலைவராக இருந்த போது, முதலியாரவர்கள் தமிழ்ச் சங்கத்தின் செயலாளராக இருந்தார்.

தமிழ்ச்சங்கத்தின் தலைவராக இவரிருந்த போது, அதன் செயலாளராக இருந்தவர்-பாவேந்தர் பாரதிதாசனாரவர்கள்!

அக்காலத்தில் துரைசாமி முதலியாரவர்கள் தமிழ்மகவு, பொன் மலர் என்னுமிரு இலக்கிய இதழ்களை நடத்தித் தமிழ் விருந்தளித்தார்.

''புதுவையும் தமிழும்,'' ''மறந்த வாழ்வு'', ''மனிதர் மதிப்பு'' முதலிய உரைநடை நூல்கள் இவர் எழுதியவை.

''கண்ணப்பர் கலம்பகம்'', ''கண்ணப்பர் பதிகம்'' ''வல்லாள மகாராஜன் சரிதம் என்ற நூற்களைப்பாடியவரிவர். இவைகள் அக்காலப் புலவர் பெருமக்களால் பெரிதும் பாராட்டப்பட்டன. இவைகளையன்றி ''வேதபுரீசர் பதிகம்'', 'வரதராசப் பெருமாள் மாலை' மயிலம் முருகன்மேல் பல பாடல்கள் இவர் பாடியனவாம்.

இவர், அறிஞர் ஞான தியாகுவின் நீதி நூற்களுக்கு உரை எழுதினர். அவைகள் பிரஞ்சு மொழியில் மொழி பெயர்க்கப்பட்டன.

தமிழிலக்கிய இலக்கணங்களுக்கும் பிழையாகப் பொருள் சொல்லி யாரும் இவரிடமிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது. அவையிலேயே அவர்களை விளக்கம் கேட்பார்; அரை குறைகள் தங்களை எல்லாமுணர்ந்தவர்களாகக் காட்டிக் கொள்வதை இவர் விரும்பார். ஆனால், அறிவுடையாரைப் புகழ்வதற்கும் இவர் தயங்கியதில்லை.

ஒரு சமயம் திருப்பாதிரிப்புலியூர், தவத்திரு ஞானியார் அடிகள் 'பிராலிங்க லீலையில் ''மாரன் எடுத்து வளைத்த ஒரு

கரும்பை'' என்று தொடங்கும் பாடலுக்கு விரிவுரையாற்றிக் கொண்டிருந்தபோது ''தும்பிக்கை'' என்பதைவிடத் ''துதிக்கை'' எனும் பிரயோகமே நன்றென்று கூற அப்போது அவையிலிருந்த இராமானுஜ செட்டியாரவர்கள்முதலியாரைப் பார்க்கக் குறிப்பினல் உணரும் கொள்கையுடையவரான முதலியாரவர்கள் துண்டுக் கடிதமொன்றில், ''தும்பிக்கையான் பாதம் தப்பாமற் சார்வார் தமக்கு'' என்ற பிரயோகம் தவறுடையதோ? என எழுதி அருகிலிருந்த பாவேந்தர், கனக சுப்புரத்தினத்திடம் கொடுக்க, அதை அவர் ஞானியாரிடம் கொடுத்தனர்!.

அதைக் கண்ட ஞானியாரடிகள் ''சிந்திக்கலாம்'' என்று கூறிப் புன்முறுவலுடன் உரையைத் தொடர்ந்தார்.

மற்ருெரு சமயம், திருக்கோவையாரில் ''மீண்டாரென உவந்தேம்'', என்று தொடங்கும் பாடலுக்குக் கூறிய உரை பேராசிரியர் உரைக்கும் புறம்பானதாயிருக்கக் கேட்டு அவ்வளவிலேயே இளவழகனுரை எதிர்த்த செயலைப் புதுவை அறியும்.

1939இல், ஆசிரியர் S. A. பாலகிருஷ்ண நாயுடு அவர்கள் ஆசிரியர்கட்காகப் ''போதனு முறை'' என்ருெரு நூலை எழுதினுர்கள். அந்நூலில் உள்ள பிழைகளை எல்லாம் தொகுத்து ஒரு சிறு நூலாக அச்சிட்டுத்தாம் அரசுப் பணியில் இருந்த காரணத்தால் தம்முடைய நண்பர், ச, அ பழனி உபாத்தியாயரைக் கையொப்ப மிடச்செய்து அதை வெளியிட்டார்கள்.

அதற்கு அவர் கூறிய காரணம் ''போதனு முறை'' யிலேயே பிழைமலிந்திருக்கலாமா? என்பதே!

இப்படிப் பல நிகழ்ச்சிகள்''

பிழையாகத்தமிழ் எழுதியவர்களைக்

"குட்டுவதற்கோ பிள்ளைப் பாண்டியனிங் கில்லை!
குறும்பியளவாய்க் காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை!
இரண்டொன்ருய் முடிந்து தலையிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவி ஒட்டக் கூத்த னில்லை" என்பார்கள்

ஆம், இந்தப் பரம்பரை பண்டித வீ. துரைசாமி முதலியாரவர்களோடு முடிந்து விட்டதென்றே சொல்ல வேண்டும்!

முதலியாரவர்கள் ஆசிரியர் பணியிலிருந்த போது ஒவ்வொரு விடுமுறைக் காலங்களிலும் வெளியூர் சென்று ஆங்காங்குள்ள தமிழ்ப் பெரும் புலவர்களுடன் அளவளாவித் தமிழ் நயங்கண்டு வருதல் வழக்கம்.

இனி, தமதாசிரியர் முன்னமிவர் அமர்ந்ததேயில்லை. அவ்வளவோ? தமதாசிரியரிடம் பயின்ற மூத்த மாணவரான இராமானுஜ செட்டியார் வீற்றிருக்கும்போதும் இவர் நின்று கொண்டேயிருந்து தமது பணிவுடைமையைப் புலப்படுத்துவார்!

இவரிடம் கல்வி பயின்ற மாணவர்கள் பலராவர். இவருடைய முதல் மாணவர் முத்தியால்பேட்டை சுந்தரம் பிள்ளையவர்கள். மற்ருெருவர், "இலக்கணச் செம்மல்". சு. குமாரசாமி செட்டியார் அவர்கள். மற்றும் பலருமுளர்.

"சொன்னலமும், பொருள் நலமும் சுவையோர்ந்து பல நூல்கள் சூழ்ந்து கற்றேன்." என்று இவரைப் பாராட்டுகிருர் கவிராஜ பண்டிதர் ஜெகவீர பாண்டியனுர்.

இவரது கவிதை நடை கம்பீரமானது! இவருடைய வல்லாள மகாராஜன் சரிதம் நல்லாரெல்லாம் கண்டு சொல்லாழமுடையதெனப் பாராட்டிய நூல். வெண்பாவாலான இந்நூலைப் படித்துப் பெரிதுள மகிழ்ந்த எஸ், நவநீத கிருஷ்ண பாரதியார்; "புகழேந்திதாரணியிற் பின்னும் வந்

தானே!'' என்று வியக்கினர். வல்லாள மன்னன் வரலாற்றைச் செந்தமிழில் வல்லாளன் சொன்னன்''—என்று புகழ்கிறர் சுத்தானந்த பாரதியார்.

கண்ணப்பர் மேல்

உயர் செய்யுள் வனப்பெலாம் மிளிர்ந்து துதைந்திரு கலம்பகம் தன்னைப் புதுவையில் வதியு நற்றுரைசாமிப் புலவன் செய்துய்ந்தனன்'' என்று பாராட்டுகிறர் தவத்திரு ஞானியாரடிகள்!

வல்லாள மகாராஜன் சரிதத்தில், சிவநேயச் செல்வரான முதலியார், தவநேயச் செல்வனை வல்லாளன் சிவபத்தியைப் புலப்படுத்துமிடம்;

அருணை மலைவாழ் கருணை மலையான சிவபெருமான் ஆதியந்த மில்லாச் சோதிவடிவானவன் அல்லவா? அவனைச் சொல்லின்பம் மிளிர,

எல்லொளியே! எங்கும் இலகொளியே! எண்ணிறந்தே
நல்லொளியே! மெய்யன்பர் நாடொளியே!-தொல்கைலை
வாழொளியே! என்றன் மனக்கவலை நீக்கொளியே!
சூழொளியே! நின்ருள் துணை!

எனப்படுவர்.

இவ்வெண்பாவில், 7 முறை ஒளியென்னும் சொல்வந்து ஒளிதரக் காணலாம். இப்படி எத்தனையோ பாடல்கள்!

கண்ணப்பன் வேடனல்லவா? அவன் கரிய நிறமுடையவன். கையில் வில்லுடன் வருகிறன். எப்படி?

"அரிய முகில் வில்லேந்தி நடந்தாலன்ன
அணி யுருவக் கண்ணப்பர்.'' வருகிறாராம்!
இனி புலவர் பெருமான் கற்பனைக்கோர் இடம்.

குளத்தில் தாமரை பூத்திருக்கிறது. அத் தாமரையில் குளக்கரையிலிருக்கும் மரங்களிலிருந்து வெண் மலர்கள் உதிர்கின்றன. தேன் சிந்துகிறது. இக் காட்சி வேள்வித் தீயில் வெண் பொரியும் நெய்யுமிடல் போலிருக்கிறதாம்!

சிவந்த தாமரை வேள்வித் தீயையும், வெண் மலர்கள் வெண்பொரியையும் தேன் வேள்வித் தீயில் விடப்படுகிற நெய்யையும் நினைவு படுத்துகின்றன, புலவருக்கு!

இவர் தம் உரை நடைக்கோர் எடுத்துக்காட்டு! "நாம் தினந்தினம் உண்டுடுத் துறங்கிப் பெண்டிரோடு பிறங்கிக் கண்டவின்பமே காதலித் திறங்கி, என்று மிவ்வாறு இருப் போமென்றெண்ணி விழுப்பேறெய்த வேண்டிய நாளை யெல்லாம் வழுப்போழ்தாகப் போக்கிவிடுகின்றோம்.'' என்பது. இந்தத் துள்ளுநடை நம் நெஞ்சை அள்ளுகிறதல்லவா?

பழமையிற் பற்றுடையவரேனும், புதுமையிலும் இவர் நாட்ட முடையவர்.

மனிதர் மதிப்பு என்கிற இவரது உரை நடை நூலில் பெண்ணின் பெருமையைப் பேசுகிற இடம்.

"ஆணுக்கும் பெண்ணுக்கும் சம மதிப்புக் காட்டவே கண்ணுதற் கடவுளும், அர்த்தநாரீசுரராய்க் கோலங் கொண்டனர் என்பதறிக!''......"கற்புக்காகவே, கல்வி முதலியவற்றிற் பெண்ணைப் பழக விடாது, அடக்கி வைத்து வந்த பாவமே, அந்நியராட்சியின் கீழ் இத்தேசம் வருந்த வேண்டியதாக வந்து விட்டது. பொது நிலையில் நின்று ஆராய்ந்தறிக'' என்கிறார்.

இவர்தம் கடைசி நாட்களில் நீல கண்டத்து நெடுந் தகையால் சாலவும் பக்தி கொண்ட சீலராய் விளங்கினார்.

பெத்துசெட்டிப் பேட்டையில், "கண்ணப்பர் ஆசிரமம்" என்றொரு குடிலை அமைத்து அதில் மெய்யெல்லாம் வெண்ணீறு சண்ணித்த மேனியராய்" இடையறாத சிவ சிந்தனையுடன் வாழ்ந்து வந்த திரு. முதலியார் அவர்கள் 1944 ஆம் ஆண்டில் தமிழுலகம் ஏங்கத் தமிழன்பர்கள் செவிகளையெல்லாம் வறுமையில் வாடவிட்டுச் சிவபாதம் நண்ணினர்.

1944 வைகாசி 13 இல் இவருக்கோர் அஞ்சலி நிகழ்ச் சியைப் புதுவையிலிருந்த சங்கங்கள் நடத்தின. அதற்குத் தலைமை வகித்த புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் அவர்கள்:

"இன்றைய புலவர்களின் கையிருப்பை நானறிவேன், தமிழுலகில், பண்டித. வீ. துரைசாமி முதலியாருக்குக்கிணை யாகச் செய்யக்கூடிய செந்தமிழ்ப் புலவர் நிச்சயமாக வேறொருவர் இல்லை! இது உண்மை!" என்றார். ஒரு பெரும் புலவரை மற்றொரு பெரும் புலவரால் தானே உணர முடியும்.?

# பேராசிரியர் .சு. குமாரசாமி செட்டியார்.

**புலவர். தமிழ்வேள்.**

---

பதினேழாம் நூற்றுண்டின் இறுதியில் பிரெஞ்சுக்காரரால் தோற்றுவிக்கப்பட்ட புதுச்சேரி அவர்களது ஆட்சியிலேயே தொடர்ந்து இரண்டரை நூற்றுண்டுக் காலம் இருந்து வந்தது. அப்போது இங்கே பிரெஞ்சு ஆட்சி மொழியாக இருந்தால் பள்ளிகளிலும் அம்மொழிக்கே முதலிடம் தரப்பட்டது. எனினும், புதுவை மக்களின் தாய்மொழியாகிய தமிழ் புறக்கணிக்கப்படவில்லை. கல்வித்துறை ஆண்டு தோறும் தமிழில் இரு பொதுத் தேர்வுகளை நடத்தியது. அவற்றில் வெற்றி பெற்றவரே அரசினர் பள்ளித் தமிழாசிரியராகும் தகுதி பெற்றனர். புதுவை மாநிலத்தில் தமிழாசிரியர் பணியேற்றிருந்தவருட்பலர் புலமை சான்ற பெருமக்களிடம் முறையாகத் தமிழ் பயின்று முத்தமிழ் வித்தகராய் விளங்கினர். அத்தகையாருள் ஒருவரே நம் குமாரசாமி செட்டியார்.

'சுந்தர குமரன்' என்னும் புனைப்பெயர் கொண்ட இவரை பலரும் "செட்டியார்" என்றே சிறப்பாகக் குறிப்பிடுவர். புதுவை நகரைப் புலவர் நகராக்கிய செட்டியார், சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வில் வெற்றி பெற்றும் புதுவையின் முதல் தமிழ் வித்துவானுகவும் திகழ்ந்தார். பட்டம் பெறுவதற்காகவே இவர் தமிழ் பயின்றவரல்லர்.

தமிழால் வாழலாம் என்ற எண்ணமும் இவரிடம் இருந்த தில்லை. இயல்பாக எழுந்த ஆர்வத்தால் தமிழ்ப் பயிலத் தொடங்கினார். பின்னர், அதன் சுவையில் ஈடுபட்டு விடுதல றியா விரும்பினர் ஆனார்.

புதுவையை யடுத்த இலாசுப் பேட்டையில் தேவாங்கர் மரபைச் சேர்ந்த சுந்தர செட்டியார் என்பவர்க்கு 24-7-1906 இல் இரண்டாம் மைந்தராகப் பிறந்தார் குமாரசாமி செட்டியார். இந்நாளில் தாகூர் கலைக் கல்லூரி முதலிய பல்வேறு கல்வி நிலையங்களைக் கொண்டுள்ள இலாசுப் பேட்டையில். அந்நாளில் ஒரே ஒரு தொடக்கப்பள்ளிதான் இருந்தது, திண்ணைப் பள்ளியில் எழுத்தறிவு பெற்ற செட்டியார் அத் தொடக்கப் பள்ளியில் படித்து முடித்த பின், குலத் தொழி லாகிய நெசவுத் தொழிலை மேற்கொண்டார். அக்காலத்தில் புதுவை அரசினர் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராய் விளங்கிய வீ. துரைசாமி முதலியார் என்னும் புலவர் பெருமான் இலாசுப் பேட்டையில் வாழ்ந்து வந்தார். அவருடைய தொடர்பு நம் செட்டியாருக்குக் கிட்டியது. ஓய்வு நேரங் களில் இவர் முதலியாரிடம் சென்று அவர் இட்ட வேலை களின் இயல்பையோ எண்ணிக்கையையோ நோக்காமல் அவற்றை உரியமுறையில் ஆர்வத்தோடு செய்து அவருடைய அன்புக்குரிய மாணக்கரானார். அந்நிலையிலும் நெசவுத் தொழிலை விட்டாரல்லர்; இவருடைய கைகள் தறியில் பாவோடும் நூலோடும் உறவாடிக் கொண்டிருந்த நேரத்தி லும் வாய் நற்றமிழ்ப்பாவோடும் நன்னூலோடும் உறவாடிக் கொண்டிருந்தது. விடா முயற்சியுடன் ஆசிரியர் குறிப்பின் வழி நின்று படித்து வந்த செட்டியார், அரசினர் தமிழ்த் தேர்வுகளில் வெற்றி பெற்றுத் தமது இருபத்திரண்டாம் வயதில் தமிழாசிரியரானார்.

புதுவையிலும், காரைக்காலிலும் பள்ளிகள் பலவற்றில் சீரிய முறையில் பணியாற்றிய செட்டியார் நேரம் கிடைத்த போதெல்லாம் நற்றமிழ்ச் சோலையின் நலங்கண்டு களித்தார்.

சங்க இலக்கியப் பண்பினை ஆய்ந்தார். காவியங் காட்டிய ஓவியங் கண்டார். பத்திப்பனுவலின் பாங்கினை யுணர்ந்தார். இலக்கியக்கடலின் நிலைகாண விழைந்தார். 1940 இல் வித்துவான் பட்டம் பெற்ற பின், நாடி வந்தோர்க்கெல்லாம் பாடம் சொல்லி வந்தார். இக்கிளையிலும் வித்துவான் பட்டம்பெருத தம் ஆசிரியர் துரைசாமி முதலியாரிடம் வழக்கமான அடக்கத்துடன் நடந்து கொண்டதோடன்றி அவர் கருத்துக்கு மாருன எதையும் செய்யத் தயங்கினர். செட்டியாரின் இப் பண்பு முதலியாரைப் பெரிதும் கவர்ந்தது. எனவே, அவர் தாம் இயற்றிய 'வல்லாள மகாராஜன் சரித்திரம் முதலிய நூல்களில் செட்டியாரின் சாற்றுக் கவிகளையும் விரும்பிச்சேர்த்து வெளியிட்டார். இவர் பெற்றிருந்த பெரும் புலமையை முதலியார் நன்குணர்ந்தார். என்பதனை ஓர் எடுத்துக் காட்டின் மூலம் காண்போம்.

அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராய் இருந்த இரா. இராகவையங்கார் ஒருநாள் துரைசாமி முதலியாருடன் உரையாடிக் கொண்டிருந்தபோது, "தங்கள் கண்ணப்பர் கலம்பகத்தில் காணப்படும் 'கிளைவிட்டு என்ற சொற்றெடர் கிளைகளைத் தோற்றுவித்து என்று பொருள் படுமா? உலக நடையில், மக்களால் 'கிளைவிட்டு இருக்கிறது' 'பூ விட்டிருக்கிறது' என்று சொல்லப் படுகிறதே தவிர, இலக்கியத்தில் எங்கேனும் நீர் கண்டதுண்டா" எனக் கேட்டார். அதற்கு, முதலியார் இலக்கியத்தில் வந்துளது. இப்பொழுது நினைவிற்கு வரவில்லை. ஊருக்குப் போய் எழுதுகிறேன் என்று சொல்லிவிட்டு வந்துவிட்டார்.

புதுவை மீண்டதும் தம்மைக் காணவந்த செட்டியாரை நோக்கிக் கிளைவிட்டு என்பது கிளைகளைத் தோற்றுவித்து என்னும் பொருள்பட இலக்கியத்தில் எங்காவது நீ கண்டதுண்டா என்று கேட்டார். உடனே, இவர் சீவகசிந்தாமணியில் பதுமையாரிலம்பகச் செய்யுளொன்றில் தாங்கள் கூறும் பொருளில் கவடு விட்டு என்ற சொற்றெடர் வந்துள்ளது

என்றார். முதலியார் அதனைக் கேட்டதும் பெருமகிழ்ச்சி அடைந்து செட்டியாரின் புலமையை வியந்து இவர் குறித்த செய்யுளை நினைவுக்குக் கொண்டுவந்தார்.

"பேதமை யென்னும் வித்திற் பிறந்து பின் கிளைகளென்னும்
வேதனை மரங்கள் நாறி வேட்கை வேர்வீழ்த்து முற்றிக்
காதலுங் களிப்பு மென்னுங் கவடுவிட் டவலம் பூத்து
மாதுய ரிடும்பை காய்த்து மரணமே கனிந்து நிற்கும்."

என்பதே அச்செய்யுள்.

இராமன் சுக்ரீவனை நண்பனாய் ஏற்றுக் கொண்டபோது மற்றினி உரைப்பது என்னே வானிடை மண்ணில் நின்னைச் செற்றவர் என்னைச் செற்றார். தீயரே எனினும் உன்னோடு உற்றவர் எனக்கும் உற்றார், என்றான். இம்முறையிலேயே செட்டியார் தம் ஆசிரியருக்கு வேண்டியவரிடம் அன்பாகவும், வேண்டாதவரிடம் பராமுகமாகவும் நடந்து கொண்டார். இக்காரணத்தால்தான், பாவேந்தர் பாரதிதாசனுடன் இவர் நெடுங்காலம் தொடர்பு கொள்ளாதிருந்தார். எனினும், விஞ்சிய புலமையுடையாரை நெஞ்சாரப் புகழும் இயல்புடைய பாவேந்தர் செட்டியாரின் "சிலப்பதிகாரச் செய்யுள் நலம்" என்னும் சீரிய கட்டுரையைப் படித்துவிட்டு இவரது நுண்மாண் நுழைபுலத்தை வியந்ததோடன்றி 1959 இல் இவருக்குப் பாராட்டுவிழா நடத்த அன்பர்கள் முன்வந்த போது அதற்குத் தாமே தலைமை தாங்கவும் இசைந்தார். அப்போது தமிழகத்தின் முதலமைச்சராய் விளங்கிய திரு. கு. காமராசரைக் கொண்டு நம்புலவர் பெருமானுக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். இந்நிகழ்ச்சி பேராசிரியர் குமாரசாமி செட்டியார். வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்கதாகும்.

பழந்தமிழ் நூல்களைப் படித்தபோதெல்லாம் செட்டியார் அவற்றிற்கமைந்த பழைய உரைகளையும் விடாது படித்தார்.

நச்சினார்க்கினியர். பரிமேலழகர் முதலியோர் உரைகளில் காணப்படும் பொருட்சிறப்பு, இலக்கிய நயம், இலக்கணக் குறிப்பு முதலியவை இவரை இன்பத்துள் ஆழ்த்தின. எனவே; இவர் அவற்றைப் பொன்னேபோல் போற்றித் தம் சொற்பொழிவுகளில் எடுத்துக்கூறி மகிழ்ந்தார். தம் கட்டுரை களில் அவற்றின் நலத்தை விரித்தெழுதி வியந்தார். பண் டைய உரையாசிரியர்களிடம் இவர் கொண்டிருந்த மதிப்பிற் கோர் எல்லையே இல்லை. செங்கரும்பைக் கடித்துச் சுவைப் பதுபோல் செட்டியார். செந்தமிழ் இலக்கண நூல்களைப் படித்துச் சுவைத்தார். அச்சேறி வெளிவந்தவற்றுள் இவர் கண்படாத இலக்கண நூல்களே இல்லை எனலாம். இவர் எழுதிய குறிப்பு வினை, குறிப்புப் பெயரெச்ச வினையெச்சங்கள் பற்றிய மறுப்புக் கட்டுரைகள் இவர் பெற்றிருந்த இலக்கணப் பெரும்புலமைக்குப் போதிய சான்றாகும். இலக்கணப் பாடம் சொல்வதிலும் இவர் இணையற்று விளங்கினார். இதனை நன்கு ணர்ந்தே புதுவைத தமிழ்ச் சங்கம் இவருக்கு 1968 இல் "இலக்கணச் செம்மல்" என்னும் மிகப் பொருத்தமான பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தது.

சைவ சமயத்தில் அழுந்திய பற்றுடைய செட்டியார் சைவத்திருமுறைகளைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதும் பழக்கமுடையவராயிருந்தார். திருநெல்வேலியில் 1952 இல் நடந்த சிவஞான போத வகுப்பிற் சேர்ந்து பேரார்வத்துடன் பயின்று ஆசிரியரின் பாராட்டுதலுக்குரியவ ரானார். அது முதல் இவர் பல்வேறிடங்களில் சிவஞான போத வகுப்பு நடத்திச் சைவ சித்தாந்தக் கருத்துக்களைப் பலரும் அறியச் செய்தார். இவரது சமயப்பற்றையும் தமிழ்ப் பெரும் புலமையையும் அறிந்த திருவாவடுதுறை ஆதீனம் இவரை ஆதீன விழாக்களில் பேசச் செய்ததோடன்றி இவருக்கும் பாராட்டு விழா நடந்தபோது ஆதீனப் பெரும் புலவர்களை அனுப்பி வாழ்த்துரை வழங்கியும் விலையுயர்ந்த பொன்னுடை அளித்தும் விழாவின் மாண்பினை உயர்த்தியது குறிப்பிடத்

திருந்தது. சமயச் சான்றோர் கூறியவற்றை அப்படியே ஏற்றுக்கொள்ளும் இயல்புடைய செட்டியார் பெரிய புராணத்தின் தோற்றம் பற்றிய கதையை மட்டும் ஏற்றுக் கொண்டதில்லை. சோழன் அநபாயன் சைனப் பெருங் காப்பியமாகிய சீவகசிந்தாமணியைப் படிக்கக்கூடாது என்ற நோக்கத்துடன். சேக்கிழார் பெரிய புராணத்தை இயற்றினார் என்று கூறுதல் இவருக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. சுவை சொட்டும் சிந்தாமணியைச் சேக்கிழார் வெறுத்திருக்க மாட்டார் என்பதே இவர் கருத்து. ஒருமுறை தமிழ்ப்பெரியார் திரு. வி. க. தலைமையில் இவர் சிந்தாமணியைப் பற்றிப் பேசியபோது தம் கருத்தினை வெளியிட்டார். திரு. வி. க. தமது முடிவுரையில் அக்கருத்தினை ஏற்றுக்கொண்டதோடன்றி இவர் ஆற்றிய நயமிக்க சொற்பொழிவினைப்பாராட்டும் முறையில் இவரைச் 'சிந்தாமணிச் செட்டியார்' என்று குறிப்பிட்டார்.

போலிக் கருத்துக்களைச் செட்டியார் என்றுமே ஏற்றுக் கொண்டதில்லை. ஒருசமயம் புலவர் ஒருவர் கம்பராமாணத்தைப் பற்றிப் பேசியபோது பேராண்மை படைத்த இராவணன் பிறன்மனை நோக்காத பேராண்மை இல்லாததால் அப்பேராண்மைப் படைத்த இராமனிடம் தோற்றான். எனவே, பேராண்மையைப் பேராண்மை வென்று விட்டது என்றார். அதனைக் கேட்ட செட்டியார் அருகிலிருந்த என்னை நோக்கி அப்படியானால் இராமன் போராண்மை இல்லாதவனா? என்றார்.

மற்றொரு சமயம் பேச்சாளர் ஒருவர் திருஞான சம்பந்தர் பற்றிப் பேசியபோது பிள்ளையார் சீர்காழி பிரமதீர்த்தக் கரையில் மூன்று முறை அழுதார் என்றார். இதற்கு ஆதாரமாக,

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க
பூத பரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத

சீதவள வயல்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்"

என்ற பெரியபுராணச் செய்யுளைக்கூறி வேதநெறி தழைத்தோங்க ஒருமுறையும், மிகு சைவத்துறை விளங்க ஒருமுறையும், பூத பரம்பரை பொலிய ஒருமுறையும் சம்பந்தர் அழுதார் என்றார். செட்டியார் இக்கருத்தினை ஏற்றுக் கொள்ளாமல், இது சரியா? சரியாயின் இருள் நீங்க மக்கள் உவகையுறத் தாமரை மலர ஞாயிறு எழுந்தான் என்றால், ஞாயிறு மூன்று முறை எழுந்தான் என்றன்றோ பொருள்பட வேண்டுமென்றார்.

இயற்றமிழ் புலமை சான்ற செட்டியார் செய்யுள் இயற்றுவதிலும் வல்லவராயிருந்தார். சில கவியரங்குகளில் தலைமை ஏற்றுச் சொற்சுவையும் பொருட் சுவையும் தோய்ந்த கவிதைகளை வழங்கி அவையோரை உவகைக் கடலுள் ஆழ்த்தினர். இசையறிவும் பெற்றிருந்த செட்டியார் இசையைக் குறித்துப் பாடிய இனிக்கும் பாக்களுள் ஒன்று இது.

"விதங்கொண்ட மரங்கள் சூழ்ந்த வியன்பெருங் காட்டில் வாழும்
மதங்கொண்ட யானையேனும் மகரயாழ் இசையைக் கேட்டால்
இதங்கொண்ட குரவன்தாளை இறைஞ்சுறும் மாணவன்போல்
பதங்கொண்டு பணியுமென்னில் யாழ்நலம் பகரலாமோ?"

இது சிந்தாமணிச் செய்யுளோ என்று ஐயுறும் வகையில் அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

புதுவையில் புலவர் மணியாய், இலக்கணச் செம்மலாய், கவிஞரேறுய்ச், சித்தாத்த வித்தகராய்ப் புகழேந்தி வாழ்ந்து 5-4-1974-இல் தம் அறுபத்தெட்டாம் வயதில் இயற்கை எய்திய பேராசிரியர்: குமாரசாமி செட்டியார் எழுதிய கட்டுரைகள் அதிகமில்லை என்றாலும் எழுதியவை அனைத்தும் சுருங்கச் சொல்லில் விளங்க வைத்தல் முதலிய அழகோடு ஆழ்ந்த கருத்துடையன. வாய் நவில்தோறும் நயம் பயப் பனவாய் உள்ளன. இலக்கியப் பரிசு, சுந்தரகுமரன் செந் தமிழ் என்னும் இரு நூல்களிலும் இடம்பெற்றுள்ள அக் கட்டுரை மணிகள் முதுபெரும் புலவர் மே. வீ. வேணு கோபால பிள்ளை அவர்கள் கூறியதுபோல், யாப்பறி புலவர்க்கு நீப்பரு விருந்தாய் இன்பம் பயக்கும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று.



# சைகோன் சின்னையா

-மு. த. வேலாயுதனர்

புதுச்சேரியில் இருபதாம் நூற்ருண்டுத் தொடக்கத்தில், பிறந்த மண்ணுக்குப் பெரும்பணி புரிய வேண்டும் என்றும், அது விடுதலையடைய வேண்டுமென்றும் எண்ணிச் செயலில் ஈடுபட்டார் ஒருவர். அவரே சைகோன் சின்னையா என்னும் தன்னிகரில்லாத் தலைமையாளர். அச்சுக்கூடம் ஒன்று நிறுவி சுதந்திரக் கருத்தை மக்கள், மிகுதியாக உணர வேண்டும் என்ற விழுமிய நோக்கத்துடன் கருத்தால் ஒரு வாரஏட்டை அவர் தோற்றுவித்தார். அவ்வேட்டிற்குத் 'தேச சேவகன்' என்னும் பெயர் தந்தார். 'தேச சேவகன்' என்றுல் பிரான்சு மொழியில் 'லெபத்ரியோத்' எனச் சொல்வர். இப்பெயரையும் ஏட்டின் ஒருபுறம் குறிப்பிட்டார். பிரான்சு மொழியிலும் தமிழ் மொழியிலும் பத்திரிகை வெளி வந்தது.

புதுச்சேரி அக்காலத்தில் சுதந்திரம், சமத்துவம், சகோ தரத்துவம் என்ற முப்பெரும் கொள்கை கொண்ட பிரான்சு ஆட்சிக்குட்பட்டிருந்த போதிலும், நம் பாரத நாடு சுதந்திரம் அடையவேண்டும் என முன்னின்ருர்.

சைகோன் சின்னையா "தேசசேவகன்" என்ற ஏட்டில் சுதந்திரக் கருத்தை உற்சாகத்துடன் மக்களுக்கு எடுத்துக்

காட்டினர். இந்த ஏட்டைத் தொடங்குவதற்கு முன் 'சந்திரோதயம்' என்ற இதழைத் தொடர்ந்து நடத்த முடியாமல் நிறுத்திவிட்டார். அக்காலத்தில் அரவிந்தரும் பாரதியாரும் ஆங்கிலேயர்களின் மிரட்டல்களையும் அவர்கள் ஏவிய ஒற்றர்களையும் பொருட்படுத்தாமல் தங்கள் கடமைகளைச் செய்தனர். கல்வே சங்கர செட்டியார், பொன்னு முருகேசப்பிள்ளை, முதலியோர் செல்வாக்குப் பெற்றவர்கள். அவர்கள் அச் செல்வாக்கினல் நன்மைகள் பல செய்தனர். பாரதியார் 'இந்தியா' பத்திரிகையைப் புதுச்சேரியில் நடத்திவந்த போது பல இடையூறுகள் ஏற்பட்டன.

இந்தியா பத்திரிகை ஆங்கில ஆட்சிப்பகுதிக்கு வரக் கூடாதென்று தடுத்தனர். அக்காலத்தில், சைகோன் சின்னையா இரவொடு இரவாகப் பத்திரிகை அச்சடித்துப் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு அனுப்ப உதவினர். மூன்று நான்கு தொண்டர்கள் அச்சுக் கூடத்தில் இருந்து கொண்டு கட்டுரைகள் எழுதித்தந்தனர். ஒற்றர்கள் எவ்வளவோ விழிப்புடன் இருந்தும் இதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. சைகோன் சின்னையா எவ்வித பயமுமின்றி நாட்டுப் பணி ஒன்றையே தம் குறிக்கோளாகக்கொண்டு வீரச்செயல் புரிந்து வந்தார். அச்சடித்த வெளியீட்டைக் கொண்டு வந்து கொடுத்தால் ரூபாய் 150 இனமாகக் கொடுப்பதாய்க் கரந்துறை காவலர் தெரிவித்திருந்தனர். சைகோன் சின்னையா இந்த மிரட்டலுக்கெல்லாம் பயப்படவில்லை. இரவில் அச்சடிக்கும் சேதி எட்டாமல் இருக்க ஒவ்வொருவரும் பொறுப் பேற்றனர். பாரதியார் அந்தக் காலத்தில் சுதந்தரப் பெருமை, சுதந்திரதாகம், சுதந்திர தேவியின் துதி, சுதந்திரப் பள்ளு எனப் பாடல்கள் எழுதினர்.

சைகோன் சின்னையா தாம் நடத்தி வந்த தேசசேவகன் பத்திரிகையில் விடுதலை முக்கியம் என்பதை எடுத்துக் காட்டினர். இக்கருத்துக்களெல்லாம் அக்காலத் தொண்

டர்களுக்கு மேல்வரிச் சட்டமாய் அமைந்திருந்தன. 1922-1924 இல் நடத்திவந்த தேசசேவகன் வார ஏட்டில் அவர் முழுப் பெயர் பழனி சின்னையா இரத்தினசாமி நாயுடு என்று எழுதியிருக்கிறார். அவர், உசியே என்று சொல்லும் அமீனாவாகச் சைகோனில் இருந்தார். இப்பதவி வகிப்பதற்கு முன் சைகோன் பேரங்காடிக் குத்தகைதாரராகவும் இருந்தார். பின்பு புதுவையில் ஆனந்தரங்கப் பிள்ளை வீதியில் அச்சுக் கூடம் வைத்திருந்தார். பத்திரிகையின் குறிக்கோளாகச் "சத்தியமே விரதம்", "நாடெங்கும் வாழக்கேடொன்றுமில்லை", என்று வெளியீடுகளில் குறிப்பிட்டிருந்தார்.

செவ்வாய்க் கிழமை தோறும் பத்திரிகை வெளிவந்தது. தனிப்பிரதி அணா நான்கு.

சென்னை, திருச்சி, மதுரை முதலிய இடங்களிலிருந்து அச்சடிக்கக் கோரிக்கைகள் வந்தன. ஆசிரியர் சின்னையா தம் வார ஏட்டில் நாடு விடுதலையடைய வேண்டுமென்ற கருத்தை அவ்வப்போதும் வலியுறுந்தி வந்தார். அந்தப் பகுதிக்குத் தலைப்பு 'சுயராஜ்ய எக்காளம்' எனப் பெயரிட்டார். கதரையே மக்கள் உடுத்த வேண்டுமென்று முழக்கம் செய்தார். எடுத்துக் காட்டாகத் தாமும் கதரையே உடுத்தி வந்தார். மகாத்மா காந்தி சிறைவாசம் செய்து ஓராண்டு நிறைவுற்ற போது அதாவது மார்ச் மாதம் 18ஆம் தேதி காந்தி திருநாள் கொண்டாடப்பட்டது. அப்போது, "ஒவ்வொருவரும் தங்கள் கடமையைச் செய்ய வேண்டும். கதரை அணிய வேண்டும்" என்ற தவண்டுகோளை விடுத்தார்.

1922 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 11ஆம் தேதி வெளிவந்த இதழில் சில நெறிமுறைகள் வெளியிட்டார்: "எக்காலத்திலும் அதிகாரம் பெற்றவர்களில் சிலர் தங்களுக்குக் கிடைத்துள்ள அதிகார மமதையினால் தருமம் ஈதென்றும் அதர்மம் ஈதென்றும் சற்றும் கவனிக்காமல் தங்கள் மனம் போன போக்காய் சகல கிருத்தியங்களையும் செய்து வரு

கிறர்கள். இந்த அக்கிரமக்காரர்களுக்கு கடவுள் என்று ஒன்று இருப்பதகேக் கூட ஞாபகத்தில் வரவில்லை,'' என்று அதிகார மமதை என்ற தலைப்பில் எழுதினர். இராவணன், துரியோதனன், சராசந்தன், சிசுபாலன் இப்போது எங்கே? எனக் கேட்டிருந்தார்.

புரட்சிக்கவிஞர் அக்காலத்தில் தேசீயக் கீர்த்தனைக்கள் என்ற தலைப்பில் பாடல்கள் எழுதிவந்தார். K. S. பாரதி தாசன் என்ற பெயரில் அவர் பல பாடல்கள் இயற்றினர். பாரததேவி வாழ்த்தொன்றும் எழுதியிருக்கிறர்.

''பொன்னிற்க் கதிர்வினை நன்செயிற் புத்தொளி
வடிவமர் அன்னய் நின்னெழில் வாழ்க!
கனுவல் கரும்பின் இனியர் சாறும்
கதலியும் செந்நெலும் உடைய நீ வாழ்க!
தென்றலின் குளிரும் தேன்சுவைப் பழமும்
நன்றியல் சோலை நலத்தினய் வாழ்க!
வானுயர் பனிமலை வண்டினம் கங்கையென்
றுலகெலாம் உரைக்கும் பெரும்புகழ் உடைய நீ
முப்பதுகோ டிப்பேர் முனிவராய் வீரராய்
பெற்றிடும் தேவி நீ வீறுகொள் பெற்றியாய்
கலிப்பகை வென்றே தலைநிமிர் குன்றனய்
கடையுகம் முற்றிடும் திறல்கெடாக் காளி நீ
அறமெனும் வயிரக் குலிசத் தோளிட
அன்னை நீ வாழ்க! அன்னை நீ வாழ்கவே

இத்தகைய வீரமிக்க பாடல்களை எல்லாம் எழுதச் செய்து மக்களுக்கு மேலும் உணர்ச்சி பெருகச் செய்தார் நம் சைகோன் சின்னையா, மேலும் இப்பாடலைத் தமிழ்த் தெரியாத பிரான்சுக்காரர்கள் முதலியோருக்கும் பிரான்சில் மொழி பெயர்த்துக் கூறிமகிழ்ந்தாராம். சைகோன் சின்னையாவைப்

புதுவைச் சிங்கம் என்றழைத்தனர். சேலம் பூபதி என்பவர் சைகோன் சின்னையாவுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதில் சின்னையாவைத் தமிழர்கள் தெரிந்து கொள்ளச் சமயம் நேர்ந்தது, கடவுளின் செயலென்றும் அவர் சிறை சென்றதைப் பற்றி நாம் விசனப்படத் தேவையில்லை யென்றும், அவர் பிரஞ்சிந்தியாவில் ஒரு சிங்கமென்றும் வருணித்தார். 'தமிழ்நாடு' ஆசிரியர் திரு. வரதராசலு நாயுடு சைகோன் சின்னையாவின் வீரத்தைப் பாராட்டிப் பேசினதாக சேலம் நண்பர் பூபதி கடிதம் எழுதியிருந்தார்.

சைகோன் சின்னையா குற்றம் கண்டபோது கவர்னராய் இருந்தாலும் விடமாட்டார். 1919ஆம் ஆண்டு பிரஞ்சிந்திய ஆட்சியில், புதுவை மாநிலத்துக்குக் கவர்னராய் இருந்தவர் ழெர்பினிஸ் என்பவர். அவர் பிரயாணப் படியை அதிகம் வாங்கி வந்தார் என்பதைத் தமது பத்திரிகையில் குறிப்பிட்டிருக்கிறார். ழெர்பினிஸ் கவர்னர் புதுச்சேரியிலிருந்து காரைக்காலுக்குச் செல்வதாயிருந்தால், கடலூர் வரையில் தம் வண்டியிலும் அதற்கு மேல் வேறு தாமியங்கி வண்டியிலும் சென்று வேலை முடிந்தபின் இதே முறையில் திரும்பி வருவார். பிராயாணப்படியோ அதிகம் போட்டு வாங்குவார். இது எப்படி தெரிந்ததென்றால், ழெர்பினிஸ் கவர்னருக்குப் பதிலாக லப்பாலுய்து என்பவர் கவர்னராய் வந்தார். அவர் காரைக்காலுக்குச் சென்று வந்த போது பிரயாணப்படி கொடுப்பதற்குக் கணக்கிட்டு அலுவலர், முன் இருந்த கவர்னருக்குச் செய்தது போல் கணக்கிட்டுக் கையெழுத்துக்கு அனுப்பினார். தமக்கு வரவேண்டியதற்கு மேல் அதிகமான தொகை இருப்பதைக் கண்டு இச்செயல் தம்மை இழிவு படுத்துகிறதென்று சொல்லிக் கையெழுத்துப் போடாமல் திருப்பி அனுப்பி விட்டார். சரியாய் கணக்கிட்டு அனுப்பிய பின் தான் கையெழுத்திட்டார்.

இந்தச் செய்தியைச் சைகோன் சின்னையா தம் பத்திரிகையில் எழுதியபின் சில நீதி மொழிகளையும் குறிப்பிட்டார்.

"தொண்டைமான் இந்த விதமாக அக்கிரமங்கள் செய்திருந் தால், தோட்டி எப்படி நடந்து நடந்து கொண்டிருப்பான்?" "ராசன் திருடினுல், தாசன் திருடமாட்டானு? கைப்புண் ணுக்குக் கண்ணுடிவேண்டுமோ? இவ்வாருகக் குறிப்பிட் டார்.

சின்னையா அவர்கள் நாட்டுப்பற்றைப் பெருக்கிக் கொள்ளச் சிறுகதை களடங்கிய நூல்களையும் எழுதிவெளி யிட்டார்.

சின்னையா சைகோனில் இருந்த காலத்திலும் கூட சுதந் திரமனிதனுகவே வாழ்ந்தார். பிரெஞ்சு மொழி நன்கு கற்றவர். இலத்தீன் மொழியும் அவருக்கு நன்கு தெரியும். முதுமொழிகள் அறநெறிகள் மேல் நாட்டறிஞர்கள் எழுதிய இலக்கியங்கள், வரலாறு ஆகிய இவற்றை ஆதாரமாகக் கொண்டு கட்டுரைகள் எழுதினுர். இலத்தீன் பழமொழிக ளான 'சட்டம்' கடுமைதான். ஆனுல், 'சட்டம் சட்டமே' (Dura lex seol lex) என்றும் 'உலகில் நூதனமான பறவை (Rara alvis interris) என்றும் பல மேற்கோள்களை எடுத்துக்காட்டி எழுதியிருக்கிருர். இன்னும் விக்தோர் உய்கோ, லஃபோந்தேன் ஆகிய புலவர்கள் கூறிய நெறி களையும் வேண்டுமிடத்தில் பயன்படுத்தி இருக்கிருர்.

ஆசிரியர், தமிழ் இலக்கியத்தில் ஒரு புதிய சேதியைத் தெரிவித்திருக்கிருர். முற்காலத்தில் கணேச மூர்த்தி, பரம சிவனுக்குச் சுருக்கெழுத்தெடுப்பவராக இருந்தார் என்றும் மகாபாரத யுத்தத்தில் சஞ்சயன் போர் நிருபராயிருந்த ரென்றும், நக்கீரர் தமிழ்ச் சங்கத் தலைவராயிருந்த போது 49 சிருக்கெழுத்தாளர்கள் அவரிடமிருந்தனரென்றும் எழுதி யிருக்கிருர். யாரேனும் புதிய கவிதை எழுதிக்கொண்டு வந்தால், அதைப் புலவர் அவையில் படிக்கச் சொல்லிக் கேட்டபின், புதியது அல்லவென்று தள்ளிவிடுவது வழக்கம்.

கவிதையைச் சொல்லும் போது மறைவில் ஒருவர் இருந்து சுருக்கெழுத்தில் குறித்துக்கொண்டு பின் சரியான பாட்டாய்க் காட்டுவார். பாடினவரிடம் அந்தப் பாட்டைக் காட்டி ஏமாற் றினார்கள். இந்தச் சேதி அறிந்த 'இடைக்காடர்' என்ற புலவர் கவியில் பறவைகள் ஒலிப்பது போல் ஒலித்து ஊசி முறியென்ற புதுவகையில் பாடல் அமைத்து அவர்களைக் தோல்வி யுறச் செய்தார். என்று குறிப்பிட்டுள்ளார்.

வித்துவான் பழனி சின்னையா இரத்தினசாமி பிரஞ்சு தமிழ் கற்ற அறிஞராயும், சிறந்த பத்திராதிபர் ஆகவும் விழுமிய தேசத்தொண்டராகவும் பிறருக்கு உதவி புரியும் பெருந்தன்மை உடையவராகவும் விளங்கினர்.



# ஓர்லயான்பேட்டை வேங்கடாசலநாயகர்

**R. வைத்திலிங்கம்**

---

புதுவைப் பொதுவாழ்வுப் பிரமுகர் உருளையாம் பேட்டையில் ஜாகை அமைத்துக் கொண்டு திரு வேங்கடாசலநாயகர் சுகாபிவிருத்தனி பத்திரிகை நடத்தி வந்தார். அப்பக்திரிகை புதுவையில் பரபரப்பைக் கொடுத்து வரும்.

அவரை, நான் 17 ஆம் ஆண்டு கடலூரில் பாரதி கூட்டத்தில் சந்திக்க, அவர் என்னை ஊர் விசாரிக்க, நான் முதலியார் பேட்டை என்று சொல்லி இருவருமாக நடந்தே ஊருக்கு வந்தோம். எனக்கு வரும் வழியில், ஊர் விஷயங்களையும் பக்தி மார்க்கம் மனிதத் தொண்டு இவைகளைப் பற்றி கதையாகச் சொல்லிவந்தார். நாங்கள் முதலியார், பேட்டையில் ஆனந்தாஸ்ரமசாது மகாசங்கம் என்று ஏற்படுத்தி நடத்திவந்தேம். அதில், அமாவாசைப் பருவத்தில்திருக்குறள் உபன்னியாசம், புதுவை ஜகநாத நாயடு அவர்களைக் கொண்டு பிரசங்கம் நடக்கும். அதன் ஆண்டு விழா 21 ஆம் ஆண்டு நடத்தியது. அதில் பிரசங்கம் செய்ய பல தலைவர்கள் கலந்து கொண்டார்கள். குறிப்பாக, சென்னை கரபாத்திர சுவாமிகள், வித்துவான் வடிவேல் செட்டியார், கடலூர் அசலாம்பிகா அம்மாள், பத்திராதிபர் வேங்கடாசலநாயகர் மற்றும் சிலர் இதை நடத்தி ஊக்கமும் உதவியும் செய்தவர்கள், குறிப்பாக கந்தசாமி படையாட்சி வித்துவான் தலைமை

ஆசிரியர், முதலியார் பேட்டை துரைசாமி முதலியார், காசி கடை வைத்திய-நாதம்பிள்ளை, முத்துக்குமாரசாமி பிள்ளை இவர் நண்பர் உபாத்தியாயர் சுப்புரத்தினம் (பாரதிதாசன்) வாசுதேவன் மற்றும்பலர் இவர்களுடைய ஊக்கமும் உழைப்பும் பெரும் அளவுக்கு, வாலிபர்களை நன்னடத்தையுடையவர்களாக உதவியது.

25 ஆம் ஆண்டில் விலட்சணாநந்த சுவாமிகள் என்ற பொருந்துறவி புதுவை வந்தார். அவரை அணுகி இங்கு கூட்டம் நடத்த வேண்டியது என்று சொன்னதும் ஏற்றுக் கொண்டு நடத்தியது. அதில்சுவாமிகள் பிரஞ்சு வெள்ளையர்களை இழிவாகப்போசினுர் என்று, உடனே அன்றைய அரசு வெளியேற்றியது. அதைக் கண்டித்து நாயகர் அவர் பத்திரிகையில் எழுதினுர். அதற்க்கு அன்றைய தனி நபர் கட்சிகள் அவருக்கு இன்னல்கள் பல கொடுத்ததும் அல்லாமல் தாக்குதலும் நடந்தது அதில் இருந்து நாயகர், தீவிரமாகப் பத்திரிகையில் கொடுமைகளையும் ஊழல்களையும் எடுத்துக்கூறுவார். அச்சமின்றி பேசுவார். நாங்கள் அடிக்கடி சந்திக்கப்போகும் போதெல்லாம் அறிவுரைகள்கூறிவார்.

அந்த சமயம் முதலியார் பேட்டையில் சமசரசன்மார்க்க சங்கம் வைத்து, அதன் மூலம் வடலூர் இராமலிங்க சுவாமிகள் அன்னதான நோக்கத்திற்கு வடலூர் சென்று தானப் செய்ய வசூலுக்கு இவரிடம் செல்லும் பொழுது இவர் ஒரு பாட்டு எழுதித்தந்தார். அந்தப் பாட்டு:-

"பசி எனும் புலிகள் வந்து ஏழைகள் உயிரைப்பாய்ந்து
சொல்லுகின்ற காலத்து.
நசி செவி கண்கள் இரண்டு நலிந்து நிற்கும் வேலையில்
அன்னம் படைக்க ஆதரவு தந்திடுவீரே"
என்று வெண்பா தந்தார் அடுத்து,

இதே சன்மார்க்க சங்கத்தின்மூலம் வருடா வருடம் ஜீவகாருண்ணிய பிாசாரம் வீராம்பட்டினத்தில் கோவிலில்

சாமி பேரால் பலிஇடக் கூடாது. ஆடு, கோழி சுவாமி கேட்க வில்லை, என்று நாங்கள் நோட்டீஸ் போட்டு பலி இடுவதை நிறுத்த வேண்டும் என்று பிரசங்கம் செய்வோம். அந்த சமயம் நாயகர் ஒரு பாட்டு எழுதித் தந்தார். அந்தப் பாட்டு,

"பலவுயிர் வடிவ தானப் பரம்பொரு ளதற்கு நாமோ
சில உயிர் தன்னைக் கொன்று செய்திடல் பூசை ஆகா
தல மதில் உயிர்கள் யாவும் தழைத்திடச் செய்யும் கொண்டே
நலமென உரைத்தார் நல்லோர் நாம்தினம் அதுவே செய்வோம்.

இந்தப் பாட்டை எங்கள் நோட்டீசில் போட்டு அந்த ஆண்டு வீராம்பட்டினத்தில் விழாவில் பெஞ்சு மேல் நின்று பிரசங்கம் செய்யும் பொழுது நாயகர் அங்கு வந்தார் அந்த சமயம் போலீஸ் எங்களை விரட்டியது. அது கண்டு அவர் தம் பத்திரிகையில் எழுதினர். எங்களுக்குத் திடமும் தெம்பும் ஏற்பட்டது.

அடுத்து மது விலக்குப் பிரசாரம் மில் எதிரில்செய்வதுண்டு. இவரிடம் இதைச் சொல்கிறோம். இதற்கும் ஒரு பாட்டு எழுதித் தந்தார்.

பாழான கள்ளைக் குடிக்காதே உந்தன்
வாழ்வான வாழ்வைக் கெடுக்காதே
கீழோரும் உன்னைக் கண்டு கேலி செய்ய
லாச்சுதடா. (பாழான)
நாற்றம் பிடித்திட்ட கள்ளையே
இரு நாட்டம் இருந்திட நொள்ளையே- (பாழான)
அட நலமே தரு குலமேவிய சொல்லுவேனதை.
நம்பினல் நீ எங்கள் பிள்ளையே (பாழான)

கட்குடி நம்பவர்க்கு ஆகுமா
கடவுளின் நின் மேல் கோபம் விட்டு
போகுமா கழுதை நாய் பழுதடா . உன் மனித சென்மம்
காய்ந்து தீய்ந்துயிர் சாகுமா (பாழான)
பெண்டு பிள்ளை நலிய பெற்றோர் மனம் வலிய
கண்டோரெல்லாம் பார்த்து காரி உமிழ லாச்சுதடா
பொடி சுருட்டு அபின் கஞ்சா கொடிய பீடி சிகரெட்டு
புகையிலையும் கூட்டுமல்லதே (பாழான)

இப்படி ஒரு பாட்டு எழுதித் தந்த துவரப் பிரசாதகமாக இருந்தது. மில்லில் பெரிய அளவுக்குக் குடிப்பழக்கம் அந்த நாளில் குறைய நேர்ந்தது. நாங்கள் நோட்டீஸ்களை வெளியிடபுதுவை வனசாம்பிகபிரசுக்குச் செல்வோம், அங்கு இவர் வரும்பொழுதும் பிரசுரத்தை எங்களுக்கு திருத்தித் தருவார்.

இவர் ஒரு சாதாரண எளிய வாழ்க்கையில் இருந்து கொண்டு பெரும் பொது நலத்தொண்டில் ஈடுபாடு கொண்டவராக எளிய நடை உடையவராக வாழ்ந்து காட்டினார். கடைசிவரை தனக்கு என்று ஏதும் இல்லாமல் காலமானார்.

இவர் மில் அருகில் குடி இருந்தார். 1935 இல் தொழிலாளர்களின் போராட்டம் நடந்தது. அதை ஆதரித்தும் ஏகாதிபத்தியம் 1936 இல் துப்பாக்கி சூடு நடத்தியது. அது சம்பந்தமாக இவருடைய பத்திரிகை பெரிய அளவுக்கு இந்தியாவில் தெரியும்படி எழுதினார்; அது முதற்கொண்டு தொழிலாளர்கள் ஸ்தாபன ரீதியாக ஒன்று திரண்டு கோரிக்கைக்கு வழிகாட்டினார், அது அன்னியில் மங்கள கான சபாவில் பாரதி கூட்டத்தில் இவருடைய பங்கு அதிகம். சாரம் மடத்தில் ஞானியார் பிரசங்கம் நடக்கும் பொழுது பிரபுலிங்க லீலை பாடம் நடக்கும். அதுபொழுது நானும் முதலியார் பேட்டை வாசுதேவன் இருவரும் செல்லும் பொழுது இவர்

கூடவருவார். பாடத்திற்கு விளக்கம் தருவார். ஞானியார் புறப்பட்டு திருப்பாப்புலியூர் போகும்பொழுது அவரை வழியில் இருவர் வரவேற்புத் தந்து உபசரிப்பார். இவர்பத்திரிகை நடத்த பல தடவை நெருக்கடிகள் வந்த பொழுதெல்லாம் நண்பர்கள் மூலம் நிதி திரட்டி நடத்துவார். இவருக்குப் பொருளாதார வசதி குறைவு. இருந்தும் பத்திகையை விடாமல் நடத்தி வந்தார். நாங்கள் வீட்டிற்குப் போகும்போதெல்லாம் தரையில் உட்கார்ந்து கொண்டு பத்திரிகைக் கட்டுரைகள் எழுதுவார். இவருக்கு எந்த வருவாயும் கிடையாது. நண்பர் உதவியுடன் நடத்தி வந்தார். மில் தொழிலாளிகள் சிலர் வசூல் பண்ணித் வருவார்கள். பிரஞ்சுக்காரர் அரசியலில் அடிக்கடி இவருக்குத் தொல்லை வந்தும் மனம் தளராதபடி கடைசிவரை பத்திரிகையை நடத்தினர். பிறப்பு 1867—இறப்பு 1940.



# சு. அரங்கசாமி நாயகர்

## (1884-1947)

K. சண்முக சுந்தரமூர்த்தி

---

நமது பாண்டிச்சேரி பிரதேசம் காரைக்கால் வட்டத்தில், திரு நள்ளாறு கொம்முய்ன் மக்களின் தந்தை என்றும் பிரஞ்சு இந்திய காந்தி என்றும் அன்புடனும் பசத்துடனும் அழைக்கப்பட்ட திருவாளர் சு.அரங்கசாமி அவர்கள் தனதுவாழ்நாள் நெடுகிலும். ஓர் ஆரோக்கிய மான, நேர்மையான சூது வாது களற்ற ஓர் அரசியல் நெறியைப் பின்பற்றியவர். அதனை உருவாக்கப் பெரிதும் பாடுபட்டவர்.

''எப்பதம்வாய் த்திடுமேனும் — நம்மில்
யாவர்க்கும் அந்தநிலை பொதுவாகும்
முப்பது கோடியும் வாழ்வோம் — வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்.''

என்று தேசியக்கவி பாரதியாரின் வழியைப் பின் பற்றி 1923 ஆம் ஆண்டிலிருந்து 'குடியரசு' என்ற வார இதழின் ஆசிரியராக இருந்து போலி அரசியல் வாதிகளின் ஏமாற்று அரசியலை விமர்சித்தும் அரசின் தவறுகளை அவ்வப்பொழுது கண்டித்தும் வந்துள்ளார். இதன் காரணமாக அன்றைய பிரஞ்சு அரசு பன்முறை ''குடியரசு'' ஏட்டின் மீது கடுமை

யான நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. அதன்வினியோகத்தையும், பிரசுரத்தையும் நிறுத்தியுள்ளது. திரு. சு. அரங்கசாமி அவர்கள் தமிழ்ப்புலமை வாய்ந்தவர். அவ்வப்பொழுது பல துண்டு பிரசுரங்கள், அரங்க அறிவு நூறு, திருவரங்க செவியறிவுறூஉ, உயர்ப்பலி, அரிசனம், சௌந்தர வில்லியம், என் கோள் போன்ற அரிய நூல்களை வெளியிட்டுள்ளார். அதுமட்டு மின்றி ''குடியரசு தமிழ் ஆரம்ப இலக்கணம்'' என்ற எளிமையான முறையில் இலக்கண விளக்க நூலையும் இயற்றியுள்ளார்.

திருவாளர், சு. அரங்கசாமி அவர்கள், 1884 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 6 ஆம் நாள் நன்கு வசதி படைத்த நிலச்சுவான்தாரர் குடும்பத்தில் பிறந்தவர். சிறு வயது முதலேயே சாதிமத வேறுபாடின்றி எல்லோருடனும் சரிசமமாகப் பழகி வந்தார். அதனுலே அவர் அரிசன சேவா சங்கத்தின் காரை மாகாணத் தலைவராகத் திகழ்ந்தவர்; தேசப் பிதா மகாத்மா காந்தி அவர்களை காரைக்காலில் உபசரித்து வரவேற்றுள்ளார்கள். அவர் தனது நினைவு தெரிந்த நாள் முதல் தீண்டாமையைப் புறக்கணித்தவர். இது அவர் சுபாவமாகவே அமைந்தது. அவர் இம்மாதிரி இருப்பதை உணர்ந்து அரிசனங்கள் அவருடன் சகசமாய்ப் பழகி விட்டார்கள். இதனுலேயே ''அரிசனங்கட்கு இடங்கொடுத்து கெடுத்து விட்டார்கள் எனப் பலர் அவர் மீது புகார் கூறி வந்தார்கள். அரிசன ஆலயப் பிரவேச இயக்கக் காலத்தில் அதனை ஆதரித்து ஒருமுறை திருநள்ளாறு ஸ்ரீ தெர்பாரண்ய ஸ்வாமி கோயிலில் மிக அருமையான சில அறிவுரைகள் வழங்கினுர். இன்றும் அவருடைய அரிசனம் ஆலயப் பிரவேசம் என்ற பிரசுரம் தீண்டாமையின் மகத்தான தீமையை விளங்கும். வசதி படைத்த நிலச்சுவான் குடும்பத்தில் பிறந்தும் ஏழ்மையின் கோரப் பிடியில் உழலும் தாழ்த்தப்பட்ட மக்கள் பால் பற்றுக் கொண்டார். அவர் வெறும் ஆலயப் பிரவேசம் செய்வதால் தீண்டாமைத்தீயை ஒழிக்க முடியாது

என்றும், தானே முன்னுதாரணமாக விருந்து அவர்களுடன் கூட்டு உணவு கொள்வது, தனது வீட்டு வேலேகட்கு அவர் கள் உதவிகொண்டும், வாழ்ந்தவர். தனது நண்பர்களேயும் தாழ்த்தப்பட்டவர்களுடன் தங்கள் வீட்டில் சமபந்தி போசனம் செய்யச் செய்தார். வீட்டு வேலேகட்கு அவர்களே உதவி கொள்ளச் செய்தார்.

தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்வினைக் குலேக்கும் மது அரக்கனின் கோரப் பிடியிலிருந்து அவர்கள் நல்வாழ்விற் காக பாடுபட்டார். கிராமக் கூட்டங்கள் நடத்தி மது விலக் குப் பிரச்சாரம் செய்துள்ளார். இதன் காரணமாகத் திருநள் ளாறு நகரமன்றத் தலேமையிலிருந்து தற்காலிகமாக பிரஞ்சு இந்திய அரசால் நீக்கப்பட்டுள்ளார்.

காரை மாகாண அரிசன சேவா சங்கத் தலேவராக விருந்த பொழுது தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் பகுதி களில் பொதுக் கிணறு வெட்டி நல்லகுடிநீர் கிடைக்க ஏற் பாடுகள் செய்துள்ளார். அவ்வப்பொழுது கிராமங்கட்குத் தனது நண்பர்களுடன் சென்று தீண்டாமை எதிர்ப்பு மது விலக்குப் பிரச்சாரங்கள் செய்து வந்தார்.

ஜீவகாருண்யத்தின் நன்மையை வலியுறுத்தி பிரசாரம் செய்துள்ளார். "உயிர்ப்பலி" என்ற தனது பிரசுரத்தில் கடவுள்கள் பெயரால் உயிர் இனங்களே பலியிடுவதைக் கடுமையாக எதிர்த்தார். கொலேயின்றிச் சாப்பிடுவதை ஏற்று வாழ்வைச் செம்மையாக அமைத்துக்கொள்ளப்பழக்கப் படுத்திக் கொள்ளும்படி மிகவும் விரிவாக எழுதியுள்ளார். இதில் தானே உதாரணமாகத் திகழ்ந்தவர். தனது போக்கு வரத்துச்சாதனமான வண்டியை இழுத்தமாடுகள் இறந்த பொழுது அவ்வுயிரினங்களேத் தனது வீட்டுத் தோட்டத்தில் புதைத்து அதற்கு அடையாளமிட்டுத்தனது அன்பினே வெளியிட்டார். இன்றும் அன்னருடைய சமாதிக்கருகில்

அவ்வுயிரினங்களின் புதை குழி மேடிடப் பட்டு அடையாளம் காட்டும்.

திருவாளர், சு. அரங்கசாமி அவர்கள் ஏழை விவசாயிகள் குத்தகைவார விவசாயிகளின் நீண்ட நாள் துன்பத்தைக் குறைக்க வாரஉயர்வு குத்தகைக் குறைப்பு போன்ற இயக் கங்கள் 'உழவரங்கம்' என்ற அமைப்பின் மூலமாகச் செயல் படுத்தியுள்ளார். நியாயமான இம்முறைகளை மீறிய நிலச்சு வான்களையும், விவசாயிகளையும் ஒன்று படுத்திச்சமாதானம் செய்துள்ளார். இதேபோன்று விவசாயத் தொழிலாளர்கள் கூலி நிர்ணயிப்பலும் "தஞ்சை பண்ணையாள் பாது காப்புச் சட்டம் போன்ற ஒன்று மில்லாத காலத்தில் அவர்களுக்கு நியாயக் கூலி கிடைக்கச் செய்ய வழிவகுத்தவர். பொது வாக, சமூக வளர்ச்சி, மறுமலர்ச்சி இயக்கத்தின் ஓர் உதாரண மனிதராகத் திகழ்ந்தவர்.

முன்னுள் பிரஞ்சிந்திய தேர்தல்களில் 'தடி எடுத்தவன் தண்டல்காரன்' என்றிருந்த நிலையில் மக்கள் சுதந்திரமாகத் தங்கள் வாக்குரிமையைச் செலுத்த வேண்டும் என்று விரும்பி யவர். உதாரணமாக 1938இல் நடைபெற்ற நகர மன்றத் தேர்தல்களில் முன்னுள் தேர்தல் விதிகளின் படி வாக்குப் பெட்டியை கோயிலார், திருநள்ளாறு நகரமன்றச் சாவடியில் தேர்தல் குழுவிடம் கொடுக்க மறுத்த பொழுது, பெரிய மண் பாணையில் துணிமுத்திரையிட்டு ஓட்டை செய்து தங்கள் வாக்குரிமையைச் செலுத்துவதற்கு ஏற்பாடு செய்து ஒரு புதிய மரபை ஏற்படுத்தினர். திருவாளர் சு. அரங்கசாமி அவர்கள் Conseil General என்ற அன்றைய பிரதிநிதி சபை உறுப்பினராக இருந்தவர். மிகவும் எளிமையான தோற்றத் துடன் பிரதிநிதி சபையில் கலந்து கொள்ளும் பொழுது 4 முழம் கதர் வேஷ்டியும், துண்டு மாத்திரம்தான் அணிவார். இம்மாதிரியே தான் தனது வாழ்நாள் நெடுகிலும் இருந்தவர். அன்னிய அதிகாரிகளைச் சந்திக்கும் பொழுதும் இதே சாதாரண உடையில்தான் இருப்பார்.

நமது பிரதேசத்தின் ஜனநாயக மக்கள் இயக்கங்கள் அனைத்திலும் திருவாளர் சு. அரங்கசாமி அவர்கள் அங்கம் வகித்துள்ளது. மஹா ஜனசபா "கொம்பா" "தேசிய ஜனநாயக முன்னணி"—"பிரஞ்சிந்திய தேசிய காங்கிரஸ்" போன்ற அமைப்புகளின் தொடக்கக் கால நிறுவனர்களில் ஒருவராக இருந்தார்.

நமது பிரதேச விடுதலைக்கு முன்னின்று உழைத்தவர். தேசப்பிதா காந்தியடிகள், ஜவஹர்லால்நேரு, திருமதி அருணா அசப் அலி, போன்ற தலைவர்களை காரைக்கால் வட்டத்தில் வரவேற்று உபசரித்துள்ளார். தான் தலைமை ஏற்று நடத்திய திருநள்ளாறு நகரமன்றத்தில் திருமதி அருணா அசப் அலி, அன்றைய தமிழக காங்கிரஸ் தலைவர்கள் L. S. கரையாளர், S. B. ஆதித்தண் போன்ற பெரியோர்களை வரவேற்று கொம்முய்ன் மக்கள் தேசிய விடுதலைப் போராட்டத்தில்ஈடுபட வழிகாட்டியவர்.

தேசிய விடுதலைப் போராட்ட காலத்தில் "Levaillant ole Pajanour"; Me Joseph xavery, Me Leon St Jean போன்ற மறைந்த அறிஞர்களுடன் நீண்ட நெடுகிலும் தொடர்பு கொண்டு முழு மூச்சுடன் செயல் பட்டவர். இந்திய விடுதலைப்போராட்ட காலத்தில் தலைமறைவாக உறைந்த பல தலைவர்கட்கு ஆதரவு நல்கியவர். சுதந்திரப் போராட்டத்திற்கு ஆக்கம் கொடுக்கும் பல பிரசுரங்களை அச்சிட்டு அரசு காணுவண்ணம் பொது மக்கள் மத்தியில் உலவிடச் செய்ய முன்னின்றவர். தடை செய்யப்பட்ட வீரசவர்க்கர் எழுதிய "எரிமலை" என்ற நூலை சென்னையில் நடைபெற்ற தேசிய காங்கிரஸ் மாநாட்டின் போது அச்சிட்டு விநியோகித்தார். சில பிரதிகள் விற்கப்படும் பொழுதே அரசு அத்தனை பிரதிகளையும் பறிமுதல் செய்தது. கயா காங்கிரஸ் மாநாட்டில் பார்வையாளராகக் கலந்து கொண்டவர்.

பிரஞ்சு அரசிற்கு இந்த நாட்டை விட்டு வெளியேற வேண்டிய அவசியத்தைப் பலமுறை பிரசுரங்களாகவும் கடித

மூலமாகவும் வற்புறுத்தி திருநள்ளாறு நகர மன்றத்தில் 1947 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15 ஆம் தேதி அன்று நமது இந்திய தேசியக் கொடியை ஏற்றி வைத்து இந்திய சுதந்திர தினத்தை ஒரு மாபெரும் விழாவாக நடத்தினர். இதன் காரணமாக நகர மன்றத் தலைமைப் பதவியிலிருந்து அன்றைய பிரஞ்சு இந்திய அரசால் நீக்கப்பட்டார். திருநள் ளாறு கொம்முய்னை விடுதலைப் போராட்டத்தனமாக அமைத் தார்.

தேர்தல் காலங்களில் பலாத்காரத்திற்கு எதிராக மக் களைத் திரட்டி அக்கிரமங்களை எதிர்த்தவர். இந்திய அரசும் பிரஞ்சு அரசும் ஏற்பாடு செய்தநகரமன்ற தேர்தல் காலத்தில் திருநள்ளாறு கொம்முய்னில் அரசு ஆதரவுடன் கலவரம் செய்த பொழுது அதைத் தடுத்துக் குற்றவாளிகளை அரசிடம் ஒப்படைத்து நடவடிக்கை எடுக்கச் செய்தவர். "கொம்பர்" இயக்கக் காலத்தில் திருநள்ளாறு கொம்முய்ன் மக்களை காரைக்கால் அரசியல்வாதிகள் மறைவாகத்தாக்கி துன் புறுத்திய காலையில், காரைக்கால் நிர்வாகிக்குக் கடுமையாக எச்சரிக்கை, அரசுக்கு எதிராககாரைக்காலுக்கு குடிதண்ணீர் கிடைப்பதைத் தடுப்பதாகக் கூறினர். அதன் பயனாக கலவரக்காரர்களின் நடவடிக்கை தடுத்து நிறுத்தப்பட்டது. திருநள்ளாறு கொம்முய்ன் நகரமன்றத் தலைவராகக் கால் நூற்றுண்டுக் காலத்திற்கு மேலாகப் பதவி வகித்த காலத்தில் பொதுவாக இளைஞர்கள் மத்தியில் நல்ல பண்புகளை வகித் தவர்.

ஏழை எளிய மாணவர்கள் கல்வி வளர்ச்சிக்கு நகர மன்ற நிதியிலிருந்து உதவித்தொகை வழங்கி ஊக்க மூட்டி யவர். ஊக்கமுள்ளமானவர் கட்குப் பரிசுகள் வழங்கி உற் சாக மூட்டியவர்.

இளைஞர்களை ஒன்று படுத்திச் சமூக நல ஊழியர் சங்கம் அமைத்து பேச்சு வன்மையை வளர்த்தவர்; கிராமங்களில்

தீண்டாமை ஒழிப்பு, மதுவிலக்கு, உயிர்ப்பலி தடுப்பு போன்ற சமூக ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் ஊக்கமளித்துப் பயிற்சி அளித்தவர். பகுத்தறிவு இயக்கத்தின் முன் மாதிரியாகத் திகழ்ந்தவர். தீபாவளி எதிர்ப்பு நடத்திய ஒரு பிரிவு இளைஞர்களின் பணிவினை வரவேற்று. அவர்களை அன்னிய ஆதிக்க எதிர்ப்பு இயக்கங்களை நடத்தும்படியும், ஊக்க மூட்டியவர்.

திருவாளர் சு. அரங்கசாமி அவர்கள் இயந்திரங்களைப் பழுது பார்த்தல், வார்ப்படப் பொருள் தயாரித்தல் போன்ற தொழில் நுணுக்கங்களை அறிந்தவர். அவர் தானே வடிவமைத்து ஓர் உழவக் கருவியையும் கண்டுபிடித்தார். இன்று டிராக்டர்கள் வயல்களில் நான்கு மூலைகளையும் ஒட்டி உழவு செய்வதில்லை. ஆனால் அன்னாருடைய கண்டு பிடிப்பு அப்பணியினைச் செவ்வனே செய்யும். இக்கண்டு பிடிப்பிற்குத் தேவையான உதிரி பாகங்கள் அனைத்தையும் தனது தொழிலகத்தில் தானே முன்னின்று தயாரித்தவர். வியாபார ரீதியாக உபயோகப்படுத்தப்பட முடியாத அவ்வுழு படை இயந்திரம் இன்றும் அவர்கள் இல்லத்தில் உள்ளது.

திருநள்ளாறு கொம்யூன் மக்களின் அரசியல் சமூக சமுதாய பொருளாதார மேம்பாட்டிற்கு இடையறுது செயல்பட்ட திருவாளர் சு. அரங்கசாமி அவர்கள் 1947 டிசம்பர் 24 ஆம் நாள் இயற்கை எய்தினர். பல ஆயிரக்கணக்கான மக்கள் துயரம் தோய்ந்த மனத்தினராய் அழுது கொண்டும் பிதற்றிக்கொண்டும் அன்னாரது பூத உடலின் பின் சென்றதை பார்க்கும் பொழுது அவர்கள் மீது மக்களின் அன்பு எவ்வாறுனது என்று தெரிந்தது.



# நா. ஜெகநாதக் கிராமணி

## —தே. இராமநாதன்

---

பழமை படிந்து பெருமை சுரந்து புதுமை தவழ்ந்த நம் புதுவை மாநகர் பல புகழ் மணிகளைப் பெற்றெடுத்துள்ளது. அப்புகழ் மணிகளுள் குறிப்பிடத் தக்கோராய்த் திகழ்ந்தவர் நா. ஜெகநாத கிராமணி,

பொலித்த நுதலுல் மலிந்த திருநீறு செந்தமிழ்ச் செவியில் சேர்ந்த அணி, காற்றில் அசைந்து களிநடம் செய்திடும் கதர் ஆடை, காலில்செருப்பு, கையகலாத பைந்தமிழ்ப் பத்திரிகைகள். பதுங்கிய பையொன்று. இதுவே, அன்னாரின் அருந்தோற்றம். இவர் 1891ஆம் ஆண்டு மே மாதம் 28ஆம் தேதியன்று புதுவையில் பிறந்தார்.

ஓவியத்திற்கு, வண்ணங்கள் எழில் தருவதைப் போன்று வாழ்க்கைக்குச் சிறப்புத்தருவன பண்புகள். இப்பண்புகளின் பயனாக வெளித்தோன்றுவன எண் சுவைகள். பண்பு களனைத்தும் அமையப்பெற்ற வாழ்வே முழுமையும் எழிலும் உடையதென சுவை மிகுந்த இலக்கியத்தின் வாயிலாகச் சுட்டிக்காட்டினார், தமிழன். இப்பண்புகளும் அதன் பயனான சுவைகளும் ஜெகநாதக் கிராமணியாரின் வாழ்க்கையிலும் காணப்பெற்றன. தம்மை ஏமாற்றிக்கொள்ளும் தமிழ் மக்களை எண்ணும்போது நகை;

சுதந்திர உணர்ச்சியின்றி இழிநிலைபடைந்து வாழ்வோரைக்காணும்போது அவலம்;

நாட்டுக்குத் தம் கடமைகளைச் செய்ய முன்வராதவர்களைப்பார்க்கும்போது இழிவு;

பேராசிரியர்கள், புலவர்கள், கவிஞர்களின் திறமையை நோக்கும்போது வியப்பு;

பிறர் பழித்து விடக்கூடாதே எனத்தயங்கி நிற்கும்போது அச்சம்;

சுதந்திர உணர்வை புதுவை வாழ்மக்களின் உள்ளத்தில் தோன்றிடவும், தொடர்ந்திடவும் செய்வதில் இடையூறுகள் வரின் அவற்றைத் தாங்கும்போது பெருமிதம்;

பண்பும் பரந்த நோக்கமும் அற்றவர்களைக் காணும் போது வெகுளி!

"காந்தியத் தொண்டே கடவுள் தொண்டு" எனும் அவர் தம் உலையாத நோக்கம் நிறைவேறும்போது உவகை! ஆகிய ஒல்காப்புகழ் தொல்காப்பியர் வகுத்த எண் சுவைகளும் ஜெகநாதக் கிராமணியின் வாழ்க்கையில் ஒளிவீசி வந்தன.

1912ஆம் ஆண்டில் புதுவையிலிருந்து வெளியான இந்தியா என்னும் தேசிய வாரப் பத்திரிகைக்குப் பைந்தமிழ்ச் சாரதியாம் சுப்பிரம்ணிய பாரதியார் எழுத்தாளராக இருந்தார். அவருடன் ஜெகநாதக் கிராமணி அச்சுக்கோப்பாளராகப் பணியாற்றி வந்தார்.

பாரதியார், வ. வே. சு. ஐயர், அரவிந்தர் இம்மூவருடன் மாலை நேரங்களில் தற்போது காலவெள்ளத்தால் அழிந்து பட்டிருக்கும் புதுவைக் கடற்பாலத்தில் அமர்ந்து நாட்டு நலம் பற்றி உரையாடுவது இவரது வழக்கம் இதன் பயனாகத் தமது உள்ளத்தில் தேசிய உணர்வும் சுதந்திர வேட்கையும்

முளைத்துக் கிளைத்து முழுப்புலப் பாட்டுடன் தலைதூக்கி நின்றன. இவர் பாரதமே தாம் வலம் வரும் கோயிலாக, தாயகம் தந்த நாயகமாம் காந்தியடிகளே தாம் வழிபடும் கடவுளாக, அப்பெரியார் வகுத்த நெறியேதாம் கடைப் பிடிக்கும் நெறியாகக் கொண்டு ஒழுகலானார்.

அச்சுக்கோப்பாளராக இருந்த இவர் 1915ஆம் ஆண்டில் சீரிய சிங்கம் ஒன்றை சின்னமாகக் கொண்டு சொந்தமாக ஓர் அச்சகத்தை நிறுவி பதிப்பாசிரியர் பொறுப்புக்களில் தாமே ஓர் அரிமாவெனத்திகழ்ந்தார். இவ்வச்சகம் அன்று சென்னைப் பட்டணத்து ராஜவீதி என்று அழைக்கப்பெற்ற புதுவை மகாத்மா காந்தி வீதியில் காணப்பெற்றது. அறிஞர்களின் திருவுருவங்களும், தேசியத் தலைவர்களின் வண்ண ஓவியங் களும் புலவர்களின் பொன் மொழிகளும், ஜெகநாதம் பிரஸ்ஸை அலங்கரிப்பதுடன் அங்கு வருவோரின் கண்ணுக் கும் கருத்துக்கும் நல்ல விருந்தளிப்பனவாயிருக்கும். அந் நாளில் பிரெஞ்சுக்காரர் புதுவையை ஆண்டு வந்தனர். தேசியத்தைப் பற்றிப் பேசுதலோ பத்திரிகைகளில் பிரசுரித் தலோ, அந்நாளில் சட்டப்படி குற்றம். ஆனால் அஞ்சா நெஞ்சம் படைத்த கிராமணியோ பல சட்ட விரோதமான துண்டுப் பிரசுரங்களை கார்டூன் படங்களுடன் அச்சடித்து வெளியூர்களுக்கு அனுப்பி உதவி புரிந்து வந்தார். இது போன்ற தேசியத்தொண்டின் பொருட்டு வெளியிடுவன வற்றிற்கு அச்சுக் கூலியினைப் பெறுவதில்லை; இத்தகு செயலில் ஈடுபடும் ஜெகநாதக் கிராமணியைப் பிரஞ்சு அரசின் துப்பறியும் அலுவலர் கையுங்களவுமாகப் பிடிக்க முயல்வர். அப்பொழுது கிராமணியார் தாம் முன்னேற்பாட்டுடன் எடுத்து வைத்திருக்கும் வேறு பத்திரிகைகளைக் காட்டி அவர் களை ஏமாற்றத்தில் ஆழ்த்துவார்.

அக்காலத்தில் புதுவையில் திண்ணைப் பள்ளிகளே அதிகம் இருக்கும். ஆண்டுதோறும் மாளய அமாவாசையன்று மாலைவேளையில் மாணவ மாணவிகள் ஆசிரியர்கள் கலைமகள் படத்துடன் கூட்டங் கூட்டமாக பஜனை பாடிக் கொண்டு

புதுவை மணற்குள விநாயகர் ஆலயத்திற்குச் சென்று வழி பட்டு முக்கிய வீதிகளின் வழியாகத் திரும்புவது கண் கொள் ளாக் காட்சியாயிருக்கும். அச்சமயம் ஒரு சில மாணவ மாணவிகள், அரசன் அரசி வேடங்கள் பூண்டிருப்பார். ஆனல் ஜெகநாதக் கிராமணியோ தம் மகளுக்குக் கலைமகள் வேடமும் புதல்வனுக்கு, கதர் ஆடை உடுத்திய காந்தி வேடமும் அணிவித்து அந்நாளைய "பூஸ்" என்னும் தள்ளு வண்டியில் உலாவரச் செய்து உள்ளங்களிப்பார். அவ் வண்டியின் நாற்புறமும் "வாழ்க காந்தி", "சுதந்திரமே நமது பிறப்புரிமை", "வாழ்க தேசியத் தொண்டர்கள்" "வந்தே மாதரம்" என்ற சொற்றொடர்கள் ஒட்டப்பட்டி ருக்கும். இத்துணிவு மிகுந்த செயலைக் கண்டு அன்னாரின் நண்பரும் அன்பருமாகிய "தேசசேவகன்" பத்திரிகையாசி ரியர் பழனி சின்னையா "சுகாபிவிருத்தினி" ஆசிரியர் நா. வேங்கடாசலக் கவுண்டர்- "பொன்மலர்" ஆசிரியர் வித்துவான் க. துரைசாமி முதலியார்- "ஆயரேறு" ஆசிரி யர், ரா. தேசிகப்பிள்ளை முதலானோர் வியந்து பாராட்டுவர்.

ஜெகநாதக் கிராமணியாரின் தேசிய உணர்வுக்கு மற் ெறாரு சான்று :

ஜெகநாதம் பிரஸ்ஸில், பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் இம் மூவரையும் தூக்கிலிட்டமையை சித்திரிக்கும் ஓவியம் ஒன்று இருப்பதைக் கண்ணுற்றனர், பிரஞ்சு அரசினர். அதனை எவ்வாறேனும் அகற்றிவிட எண்ணினர். இ∴து சட்டப்படி இயலவில்லை, எனவே அச்சகத்தின் உரிமையாளரின் மற் ெறாரு உற்ற நண்பரான தளவா கற்பூர முதலியார் மூலம் அதனை அப்புறப்படுத்தச் செய்தனர். இதுகுறித்து கற்பூர முதலியாரும் அவருடன் பேசலானர். இச்செய்தி கேட்ட கிராமணியார் அளித்த விடையோ வியத்தற்குரியது.

இனக் கலகத்தின் போது நவகாளிக்குத் தனித்துச் சென்ற காந்தியடிகளை வெளியேறும்படிக் கூறி முஸ்லீம் அன்பர்கள் முழக்கமிட்டனர். அதற்கு காந்தியடிகள்,

you can emove my body
but not with my soul

என்று ஆங்கிலத்தில் உரைத்தாரல்லவா? அதுபோன்று ஜெகநாதக் கிராமணி,

"அதோ படம் காணப்படுகிறது, எடுத்துச் செல்லுங்கள்
ஆனால், நான் உயிரோடு இருக்கும்போது அல்ல",

என்று ஆணித்தரமாக பதில் உரைத்தார். என்னே அவர் தம் தேசியப்பற்று! இது கேட்டு "இங்கிவனையான் பெறவே என்ன தவம் செய்துவிட்டேன்" என்று புதுவை மாநகரம் உள்ளங்குளிர்ந்திருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

புதுவையில் பல்லாண்டு காலமாக நிகழ்ந்து வரும் மாசி மகத்திருவிழாவின்போது சுப்பிரமணியக் கடவுளும், செஞ்சிரங்க நாத சுவாமியும் முக்கிய தெருக்களின் வழியாக ஊர் வலம் வருவதுண்டு. அச்சமயம் இப்பெரியார் தமது அச்சகத்தின் முகப்பில் கரும்பினால் ஆன மிகப் பெரிய அலங்காரப் பந்தல் ஒன்றை அமைப்பர். அதன் உள்ளும் புறமும் தேசப்பற்றை உணர்த்தும் சொற்றொடர்கள் காணப் பெறும். அன்று.

பட்டுத்துணியால் பாழாகும் புதுவையை
நாட்டுத்துணியால் நலம்பெறச் செய்யவா—ரங்க

என்று செஞ்சி ரங்கநாதரையும்,

கோட்டான் போலுள்ள கோட்டா முறையை
ஓட்டாமல் இங்கேன் வந்தாய் -முருகா! என்று

மயிலம் சுப்பிரமணிரையும் நோக்கி கேட்பன போன்று அமைந்திருக்கும். பிரஞ்சு அரசினர் இவற்றையும் அகற்ற

முயன்றனர். இக்காலத்தில் தேசிய உணர்வை தமிழ்ப் பாடல்களிலே புகுத்தி இசையமைத்து அப்பாடல்களை கிராமணிக்குத்தந்து உதவியவர் அவர்தம் நெருங்கிய நண்ப ராகிய பாவேந்தர் பாரதிதாசனுர், இவற்றை எழுதியளித்தார். இவர்தம் புரட்சிக் கவிதைகளுள் பல ஜெகநாதம் பிரஸ்ஸி லேயே அச்சாகியுள்ளன.

பிரஞ்சு அரசினர், தமிழ் ஆசிரியராகப் பணிபுரிந்து வந்த பாரதிதாசனுரை ஒருமுறை சிறையில் அடைத்து விட்டனர். அப்போது சிறையில் இருந்தகவிஞருக்கு ஜெகநாதக்கிராமணி உணவு எடுத்துச் சென்று அவரை ஆதரித்ததோடு மட்டு மன்றி சிறையினின்று மீட்கவும் ஆவன செய்தார். ஜெக நாதக்கிராமணியைப் பிரஞ்சு அரசினர் முனிசிபல்கவுன் சிலராகப் பதவி வகிக்கச் செய்து தம்போக்குக்கு இணங்க வைக்கவும் முன்றனர். இதற்கு அவர் தம் நண்பர் மேயர் இருந்தார். ஆனுல் அதன்பயன் என்ன வாயிற்று? திருவருட் பிரகாச வள்ளார் தமது சுற்றத்தாரின் வற்புறுத்தலுக்கு இணங்கி மணம் புரிந்து, அன்றிரவே, தமது மனத்துக்கினிய திருவாசகத்தோடு புறப்பட்டதைப் போல கிராமணியாரும் தமது நண்பரின் விருப்பத்திற்கு இணங்கி ஏற்ற அம்முனிசி பல் கவுன்சிலர் பதவியை ஐந்து ஆண்டுகள் வகிக்க வேண் டிய நியதியிருந்தும் அதனை ஐந்தே மாதங்களில் வெறுத் தொதுக்கினுர். இதுகாறும் நாம் கண்டவை அன்னுரின் நாட்டுப்பற்றை சித்திரிக்கும் நிகழ்ச்சிகளே.

இதுமட்டு மன்று. இப்பெரியார் சிறந்த ஞானிகளான புதுவை வேதானந்த சுவாமிகள்; திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் முதலானேரிடம் பிரபுலிங்க லீலை, கைவல்ய நவநீதம் முதலிய சீரிய நூல்களையும் பாடம் கேட்டவர்.

இப்பெரியாரிடம் குறிப்பிடத்தக்க ஒரு சிறந்த பழக்கம் இருந்து வந்தது. அவர் நாட்குறிப்பெழுதும் நற்பழக்கத்தை

மேற்கொண்டிருந்தார். புதுவை ஆனந்த ரங்கப்பிள்ளை தமது நாட்குறிப்பை எழுதத் தொடங்கிய போது காதால் கேட்டவைகளையும் கண்ணால் பார்த்தவைகளையும் கப்பல் வருவதையும் கப்பல்கள் போவதையும், ஆச்சரியங்களும் புதுமைகளும், நிகழ்ந்தால் அவற்றையும் இத்தினசரியில் குறிக்க இருக்கிறேன். என்று எழுதி அவர்தம் நாட்குறிப்புக்களை ஓர் அரிய வரலாற்றுப் பெட்டகமாக்கினார். இதுபோல் நமது கிராமணியாரும் தமது வாழ்க்கையின் சென்ற காலச் செலவுகளையும் நிகழ்கால நிலைகளையும், வருங்கால வரவுகளையும் நாட்குறிப்பில் தொடர்ந்து வரைந்து தமது வாழ்க்கையை ஓர் ஒழுங்கு முறைக்கு உட்படுத்திக் கொண்டார். இதுகாறும் நாம் கண்ட குறிப்புகளுள் சில அவர்தம் நாட்குறிப்பிலிருந்தே தொடுக்கப்பட்டவையாகும். மகாத்மா காந்தியடிகளின் கையொப்பம் ஒன்று அவர் தம் நாட்குறிப்பில் காணப்பெறுகிறது. அஞ்சா நெஞ்சமும் அருள்சால் உள்ளமும் நிறைந்த இப்பெருமகனார் 1963 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 9 ஆம் நாளன்று இயற்கை யெய்திய செய்தி கேட்டு புதுவைப்புலவர்களும் உற்றோரும் மற்றோரும் சொல்லொணாத்துயர்க்கடலில் ஆழ்ந்தனர்.



# இரா. தேசிகப்பிள்ளை

## 'வீரதி.' ஆர். வெங்கடேசன்.

---

"ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்

சான்றோர் பலர்யான் வாழும் ஊரே!"

என்ற பெருமையைப் புதுவையில் வாழும் ஒவ்வொரு தமிழ்ச் சுவைஞனும் பங்கிட்டுக் கொள்ள முடியும் எனின் திரு. இரா. தேசிகப்பிள்ளை போன்றோரைப் பெற்ற பெருமையே இதற்குக் காரணம்.

பெருஞ் சிறப்புற்ற புதுவையிலே வாழ்ந்த மொழியாக்கச் செல்வர் இரா. தேசிகப் பிள்ளை அவர்கள்.

"இறைபே ரருளிங் கெமக்கிலை யாயின்

நெறிநின் றியாரே நீடுதாழ் வெய்துவர்?"

என்ற விபுலானந்த அடிகளாரின் மதங்கசூளாமணிப் பாடல் வரிகள் 'இறை பேரருள் கொண்டவரே ஒழுக்க மாகவும் நீண்ட நெடுங்காலமாகவும் வாழ்வர்' என்பதனை வலியுறுத்தா நிற்கும். அதற்கிடைய, இறைபேரருள் நிறைந்த கோகுலத்தவர்கள் வழி வந்த திரு. முத்து-இராஜகோபால் பிள்ளை அவர்கட்கும், திருமதி துரைசானி அம்மையார் அவர் கட்கும் தவப்புதல்வராக. தலைப் புதல்வராகத் தோன்றியவர் தாம். திரு. தேசிகப்பிள்ளை. கி. பி. 1893-ஆம் ஆண்டில்

தோன்றிய இப்பெருமானுர் இன்றிருந்தால் தமது என்பதாண்டகவையில் 'சதாப்தி' கொண்டாடியிருப்பார். 'நீர் வழிப்படூஉம் புணை போல' காலத்தின் வழியே உயிர் வாழ்க்கை கடந்து செல்வதன்றோ இயற்கை.

'தந்தை மகற் காற்றும் நன்றி'யைத் தப்பாமல் செய்ய ஒரு திண்ணைப் பள்ளியிலே, ஐந்தாம் பிராயத்திலே குழந்தை தேசிகன் சேர்க்கப்பட்டார். கல்வி நன்கு புகட்டப்பட, 'எழுத்தறிவிக்கும் இறைவனாக' இருக்கும் பெருமை திரு. சுப்பு நாயர் என்ற சான்றோர்க்குக் கிட்டியது. இவ்விருபெருங் குரவர்தம் ஈடு இணையற்ற கண்காணிப்பில் 'முந்தியிருக்கும் பெருமைக்குரிய தகுதிகளை, அடிப்படை அறிவை, குழந் தையும் பெற்று வந்தது.

அவரது எட்டாம் வயதில் ஆட்சி மொழியான பிரெஞ்சு மொழியைக் கற்றுத் தரவும் தந்தை ஏற்பாடு செய்தார். அவரே ஒரு பிரெஞ்சு அலுவலராயிற்றே! 'உலகின் தலை சிறந்த மொழிகளிலே ஒன்று பிரெஞ்சு மொழி. பேசுதற்கு இனிமை தரும் மெல்லோசையை உடைய மொழி பிரெஞ்சு மொழி. உலகச் சட்டத்தை எழுதியிருக்கும் மொழி பிரெஞ்சு மொழி அரசியலிலே உடன்படிக்கைகள் எழுதக்கூடிய அளவில் இலக்கண இலக்கியச் செல்வம் உடைய மொழி பிரெஞ்சு மொழி.' என்றின்னோரன்ன பெருமைகள் கொண்ட பிரெஞ்சு மொழி இன்றும் புதுவையிலே பிரெஞ்சுக்கலைக் கழகத்தின் வழியே வளர்ந்து கொண்டு இருக்கும் பெருமை புடையதன்றோ!

இம்மாண்புடை மொழியைத் தேசிகப்பிள்ளை விரும்பிக் கற்றுத் தேர்ந்தார்கள். 'கொலேழ் கொலோனியால்' என்ற கல்லூரியில் கல்வி தொடர்ந்து. இருபத்திரண்டாம் வயதில் பட்டமும் பெற்றார். ஊடே தலை சிறந்த வணிகமொழியாம் ஆங்கிலத்தை விருப்பப்பாடமாகக் கொண்டு அதில் நல்ல திறன் பெற்றார்.

பழமைக்குப் பழமையாய் நின்ற பழகு மொழியாம் தமிழின் ஆரவாரமற்ற—ஆழ்பொருள் தன்மையாற் கவரப் பட்ட பிள்ளையவர்கள் கலவைக் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் திரு. சி. பங்காருப்பத்தர் வழியே தமிழ் இலக்கண இலக்கியச் செல்வங்களை முறைப்படிக் கற்று மும்மொழிப் புலமையும் பெற்றார்.

ஒரு மொழியில் புலமைப் பெற்றவர் உணர்வுகளைப் புரிந்துகொள்ளும்போது, மும்மொழியின் திறன் பெற்றவர் தம் மூதறிவை எடுத்தியம்பவும் வேண்டுமோ! வரிவடிவில் உணர்வுகளை வடித்திழைக்க மாட்டாரோ! எனவேதான் புதுவை நீதிமன்றத்தில் மொழி பெயர்ப்பாளர் அலுவல் பார்க்கும் பணியை மேற்கொள்ள முடிந்தது.

முயற்சி திருவினையாக்கும் என்பதன்றோ தமிழ் மறையின் கூற்று இதனை மெய்ப்பிக்கும் வகையில் திரு. தேசிகப்பிள்ளை அவர்கள் விரைவிலேயே தம் முயற்சியால் செய் தொழிலிலே ஏற்றம் பெற்று உயர்நீதி மன்றத்தில் உயர் பதவிக்குச் சென் றார்கள். இவரது மொழி பெயர்ப்புப் பணியின் சிறப்பறிந்த பிரெஞ்சு அரசு.

ஷெவாலியே தெ லோர்தர் தேபெனேன்'
ஷெவாலியே தெ லோர்தர் தான்மூவேன்'

ஆகிய பட்டங்களைத் தந்து சிறப்பித்தது.

'ஒப்பிசியே தக்காதெமி' என்ற கல்வித்துறையினர் வழங்கிய பட்டம் ஒன்றும் இவருக்கிருக்கிறது.

'ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தம்மகனைச் சான்றோன்' எனக் கேட்பதில் எந்தப் பெற்றோர்க்குத்தாம் பெருமையில்லை, மகிழ்ச்சியில்லை!

'மகன் தந்தைக் காற்றும் உதவி'யை உண்மைப் புகழாலும், உயர்ந்த தகுதியுடைய பட்டங்களாலும் பெற்று நம் தேசிகப் பிள்ளையவர்கள் சிறந்தார்கள்.

'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையம்' என்னும் பரந்த மனம் படைத்தவர் திரு.இரா. தேசிகப்பிள்ளை. தமிழின் பம் துய்ப்பதில் தணியாத ஆவல் கொண்ட இவர் 1926 இல் புதுவை நகரிலே 'கல்விக் கழகம்' என்ற பெயரில் தமிழ் வளர்க்கும் ஒரு கழகத்தை நிறுவினர். அதன் தலைவராகவும் இருந்து தொண்டாற்றினர். இக்கழகத்தின் ஆண்டு விழாக் காலங்களில் தமிழ்கற்றுணர்ந்த தகைசால் மூதறிஞர்களை வர வழைத்து செந்தமிழ்த்தேன் ஆறு புதுவைத்திருநகர் வீதி யெங்கிலும் புரண்டோடச் செய்து மகிழ்ந்தார். புதுவை வாழ் தமிழர்களை மகிழ்வித்து வந்தார்.

பொன் விழாக்கண்ட புகழுடையதன்ரே இக்கல்விக்கழ கம், செவிக்குணவு தேடி நிற்கும் செம்மல்கள் நிறைந்த புதுவைவாழ் அறிஞர் தமிழின் இனிமையை, பெருமையை, வளமையைத் தொன்மையை, நன்குணர உறுதுணையாக இருந்ததன்ரே இக்கல்விக் கழகம்! இன்று 'நோக்கு மிட

மெங்கும் நீக்கமற நிறைந்து' என்பதை போல், மருத்துவம் கற்ரேரும், வாணிகம் புரிவோரும், கலைத்திறன் கண்டோரும், கைவினை புரிவோரும் எனப்பல்லோரும், தமிழ்த்திறம் பெற்றுப் பிறரைத் திகைக்க வைக்கின்றனர். 'கம்பர் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்றமுதுமொழியை மெய்ப்பிக்கும் வகையிலே, கல்விக் கழகம் பெற்ற புதுவையின் கட்டிடங்க ளெல்லாம் தமிழ் மணக்கும், என்ற புது மொழி ஏற்படின் அதில் மிகையொன்று மில்லை.

'தொண்டர் தம் பெருமை சொல்லவும் படுமோ?' என்பது ஔவை வாக்கு. புகழ் தேடாத் தொண்டர் பெருகியிருந்த காலத்திலே வாழ்ந்த தேசிகப்பிள்ளையவர்கள் பொதுத் தொண்டிலே நாட்டங் கொண்டவராவார். அவர் ஈடுபாட்டு டன் செயல்பட்ட பல்வேறு நிறுவனங்களே இதற்குச் சான்று பகரும்.

தேசிகப் பிள்ளையவர்களின் புலமைச் சிறப்பினை நன்குணர்த்த அவரது எழுத்தாற்றல் எடுத்துக் காட்டுகளாய் நின்று நிலவுகின்றன. மொழி பெயர்ப்பதில் பெற்ற புலமையை மடை மாற்றி இலக்கியத் துறையிலே செலுத்திப் பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதியும் ஆராய்ச்சி நூல்கள் எழுதி வெளியிட்டும் தமிழ்த்தாய்க்குத் தனிப் பெருந் தொண்டு செய்துள்ளார் இவர்.

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் தோற்றுவிக்கப்பட்ட 'பிரெஞ்சு இந்திய கலையாராய்ச்சிக் கழகம்' இவரது ஒத்துழைப்பைப்பெறும் பேறு பெற்றது. முன்னரே, ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை, சரசுவதி அந்தாதி, சகல கலா வல்லி மாலை, சரஸ்வதி துதிப்பாடல்கள் போன்றவற்றை பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்திருந்த பாங்கினை இக்கழகம் நன்கறிந்திருந்தது. எனவே, இக்கழகத்தின் தொடர்பால் மதுரை திருவிளையாடற்புராணம், காஞ்சிப்புராணம், புதிய நோக்கில் ஸ்ரீ கந்தபுராணம் போன்ற ஆராய்ச்சிகளை இவர் பிரெஞ்சு மொழியில் எழுதி வெளியிட்டுத்தமிழ் பிரெஞ்சு பண்பாட்டின் பால மாக அமைந்தார்.

1943 இல் வெளியிடப்பட்ட நாட்குறிப்பு நாயகன் ஆனந்த ரங்கம்பிள்ளையின் வாழ்க்கை வரலாற்று நூல் சென்னைப் பல்கலைக் கழகத்தினரின் ஒப்புதல் பெற்றதுடன் பல காலம் கல்லூரி பயிலும் மாணவர்க்குப் பாடநூலாகவும் இருந்துவந்தது.

தவிரவும், 'ஆயரேறு,' 'யாதவ வாலிபன்' 'யாதவ மித்திரன்,' 'அருள்மாரி'. 'கோகுல மித்திரன்' போன்ற பல ஏடுகளில் கணக்கற்ற கட்டுரைகள் எழுதியும் இவர் தமிழ்த் தாய்க்குத் தொண்டு செய்திருக்கிறார். யாதவகுலத்தோன்றல் கண்ணபிரானிடம் தணியாத பதில் பூண்டவர் என்பதற்கு இதுவே சான்று பகரும்.

இவ்வாறெல்லாம் பொது நலத்தொண்டாலும் சமயப் பற்றுலும் மொழியாராய்ச்சியாலும் தம்மையுயர்த்திக்கொண்ட ஆயரேறு திருவாளர் இரா. தேசிகப் பிள்ளையைப் பெற்றதால் பெற்றது பெருமை இப்புதுவை.

இவர் தம் மொழித்தொண்டு மற்றும் இலக்கியப் பற்றினை உணர்ந்த சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் 1967 இல் தான் நடாத்திய பதினைந்தாமாண்டு விழாக் கூட்டத்தில் பிள்ளையவர்களை அழைத்துப் பொற்பதக்கத்தினையளித்துச் சிறப்புற்றது.

"அருவினை யென்ப துளவோ கருவியாற்காலமறிந்து செயின்" என்ற வள்ளுவப் பெருந்தகையின் வழக்குக்கு ஏற்றதொரு மனிதகுல மாணிக்கமாகத் திகழ்ந்த திரு, பிள்ளையவர்கள் அண்மைக் காலம் வரை வாழ்ந்த பத்தொன்பதாம் நூற்றுண்டுத் தமிழ்ப் பேரறிஞர்தம் வரிசையிலே வைத்தெண்ணத்தக்க சிறப்புடையவர்.

பாரதியார், வ. வே. சு. அய்யர், வ. ரா, போன்ற புதுமைப் படைப்பாளரை வளர்த்தும், பாரதிதாசனுர், வாணிதாசனுர் போன்ற மறுமலர்ச்சி மேதைகளை ஈன்றும் புகழ் கொண்ட புதுவைதான் தேசிகப் பிள்ளைபோன்ற செந்தமிழ்ச் செம்மல்களை ஈன்றெடுத்துப் புகழ்கொண்டதென்னும்போது அதில் நமக்கும் பெருமைதானே!

தெய்வப்பற்று, பக்திநெறி, சமயத்தொண்டு, மொழி வளம், ஆய்வுத்திறன், சமரசநெறிபோன்ற பல்வேறு நோக்குக்கொண்ட மொழிபெயர்ப்பாளர், கலையாக்க வல்லுநர் வாழ்ந்த காலம் புதுவையின் பொற்காலம் எனலும் தகும்.



# ஆனந்த ரங்கப் பிள்ளை

—1761

R. நடராசன்

---

புதுவைப் புகழ்மணிகளுள் ஒருவராக விளங்கும் மங்காப் புகழ் படைத்த தமிழ்ச்செம்மல்

ஆனந்த ரங்கப்பிள்ளை அவர்கள் புதுவை வரலாற்ருேடு இணைந்த பெரியவராவர். தென்னகத்தின் வரலாற்றுக்குறிப்பினை முறையே வரைந்தளித்த பெருமை பிள்ளை அவர்களையே சாரும். பாரதநாடு அன்னிய ராட்சியில் சிக்குண்டு சிதைவுற்றிருந்த அக்காலத்தில் நம் நாட்டுச் சரித்திரக் குறிப்புகள் அனைத்தும் அழிந்து மறைந்தன, அத்தகைய பேரிழப்பு மீண்டும் நிகழாவண்ணம் தாம் சொஸ்த விகிதமாக அதாவது தம் கைப்பட நாட் குறிப்பினை எழுதி நம்நாட்டுவரலாற்றினைத் தோற்றுவித்த பெருமையும் சிறப்பும் பிள்ளை அவர்களை அன்றிப் பிறிதொருவருக்கு இல்லை. இது வரலாற்ருசிரியர்கள் அறிந்த செய்தியாகும். பிள்ளை அவர்களின் நாட்குறிப்புச் சுவடிகள் இல்லையென்ருல் பாரதநாட்டின் வரலாறு பெரும் பகுதி இல்லை என்றே சொல்லி விடலாம். அத்துணைச் சிறப்பினைப் பெற்ற பெருந்தகை நம் ஆனந்தரங்கப் பிள்ளை ஆவர். தென்னகத்தின் வரலாற்றினைச் சித்தரித்தளித்த சிற்பி என்று சொல்வது சாலவும் பொருந்தும்.

பிள்ளை அவர்கள் தமிழகத்தின் வரலாற்றுத் தந்தையாகத் தம்மைத் தாமே அழைத்துக் கொண்டு, பிரஞ்சுக்காரர்கள் அரசாட்சிக்குள் தம்மை ஒருவராகப் பதவியேற்றுக் கொண்டு நம் தாயகத்திற்கு அருந்தொண்டுகள் பல புரிந்துள்ளனர். அதாவது, ஆங்கிலேயர்களுக்கும், பிரஞ்சுக்காரர்களுக்கும் முற்றுகை ஏற்படுகின்ற காலத்தில் தாயகம் சிதைவுரு வண்ணம் நாட்டின் நலங் கருதி முன்னிருந்து தூது சென்று மக்கள் நலத்தையே தம் குறிக்கோளாகக் கொண்டு பல அரிய சாதனைகளைச் சாதிக்கும் ஆற்றல் ஆனந்த ரங்கப் பிள்ளை ஒருவருக்கே இருந்தது. இதனை, இரு தரப்பினரும் அறிந்து கொள்ளும் வகையில் செயல் புரிந்துள்ளனர் என்பதைப் பிள்ளை அவர்கள் எழுதிய நாட்குறிப்புச் சுவடி ஒன்றிலிருந்து 5 ஆவது பகுதிவரை நன்கு அறியலாம். நாட்குறிப்பு 2 ஆவது புத்தகம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. இது பிரஞ்சுக் கப்பல் படைத் தலைவன்மாயே தெலபூர்தொன்னே, சென்னை நகரைப் பிடிப்பதற்கு முன்னரும், பிடித்தபோதும், பிடித்த பின்னரும் நடந்த நிகழ்ச்சிகளை ஆசிரியர் நுணுக்கமாய் விளக்கமாய் எழுதியிருப்பதால், 2 ஆம் புத்தகம் மிகவும் சிறப்பு வாய்ந்த தாயுள்ளது. மேல் நாட்டு ஆசிரியர் எவரும் இவ்வளவு விவரங்களை வெளிப்படுத்தியதில்லை என்று நாட்குறிப்புச் சுவடிகளைப் பதிப்பித்த திரு ஞானு தியாகு குறிப்பிடுகின்றார். 3 ஆம் புத்தகத்தில் சில செய்திகளை அறிந்து கொள்ளுகிறோம். சென்னை நகரத்தை ஆங்கிலேயருக்குத் திருப்பிக் கொடுப்பதற்கு லபூர்தொனேக்கும் ஆங்கிலேய ஆளுநர் மோர்சுக்கும்உண்டான உடன்படிக்கையைப் பிள்ளை அவர்கள் விளக்கமாக எழுதுகிறார்கள். எப்படிப் புதுவையிலுள்ள வெள்ளையர்கள் அந்த உடன்படிக்கையைக் கிழித்தெறிந்தார்கள் என்பதும் விளக்கம் பெறுகின்றன. லபூர்தொனேக்கும் தூய்ப்ளேக்சுக்கும் தான் தோன்றித்தனம் எவ் விதம் முற்றிச் சண்டையில் முடிந்தது என்பதையும் அந்த வீண் சண்டையில் பிரஞ்சுக் காரருக்கு விளைந்த தீமைகளைத் தினக்குறிப்பைப் படிப்பவர்கள்உணர்ந்துகொள்ள முடிகிறது.

அந்தச் சண்டை ஏற்பட்டிராவிட்டால் லலூர்தொனே சில நாட்கள் தங்கியிருந்து தேவனும்பட்டணம் கோட்டையைப் பிடித்திருப்பார். ஆங்கிலேயரையும் தென்இந்தியாவிலிருந்து விரட்டியிருப்பார், என்பதையும் பிள்ளை அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

ஆனந்த ரங்கப் பிள்ளை அவர்கள் பாரத சமுதாயத்தின் நலனையும் சமூகத் தொண்டினையும் சமயப் பற்றினையும் அறச் செயலையும் அருந்தவப் பெரியோர்களுக்கு ஆதரவு அளிக்கும் உள்ளத்தினையும் உடையவராக விளங்கி, அவ்வாறு பாதகம் ஏற்படுகின்ற காலங்களில் தாம் முன்னின்று தாயக ஒற்றர் எனச் செயல் புரிந்தனர் என்பது சிந்திக்கத்தக்கது. ஒரு முக்கிய நிகழ்ச்சி. புதுவைக்கு அண்மையில் உள்ள பொம்மையபுரம் என்னும் சிற்றூரில் அருளாட்சி நடத்தி வரும் மாலய சுவாமிகள் அவர்களின் உரிமைகளுக்கு ஊறு நிகழ்வதைக் கண்டு மகா சன்னிதானம் அவர்களிடம் தனித்துச் சென்று அன்றைய நிலையினை அறிவித்து அவ்வாதீனம் நிலை பெறுவதற்குரிய அருங்கருத்தினை அந்தரங்கமாகக் கூறி அதற்கேற்ற தொண்டினைத்தாம் முன்னிருந்து செயல்படக் கருதி பிரஞ்சு ஆட்சித் தலைவராம் துய்ப்ளேக்சு அவர்களிடம் பொம்மையபுரம் மகா சன்னிதானம் தங்களுக்கு ஒரு வரவேற்பும் நல்லாசியும் அருள எண்ணித் தம்மிடம் விண்ணப்பித்துள்ளனர் என்றும் ஆதலால் நாளை அடுத்த மறுநாள் பிள்ளைச் சாவடி முகாம் இருப்பதால் அதனை அடுத்துப் பொம்மையபுரம் சென்று அவர்களின் கருத்தினை எழிலுறச் செய்வது நலமென அறிவித்தனர்.

இன்று பொம்மையபுரத்திற்கு உள்ள அனைத்து உரிமைகளையும் அன்று வழங்கியதாலன்றோ இன்றும் அது நிலைபெற்றிருக்கிறது.

புதுவைக்கு அருகில் உள்ள முரட்டாண்டிச் சாவடியில் ஒரு பெரியார் ஒரான் வழியாய்க் கூறப்படும் பெயர் கடுவெளிச்

சித்தர் என்று கூறுகின்றனர். ஆனால் வரலாற்றின் வாயிலாக இப்பெயர்கிடைப்பதற்கு இல்லை. வரலாற்றில் 'முரட்டாண்டி' என்றே வழங்கப்படுகிறது. அப்பெரியார் அவ்விடத்தில் வாழ்ந்து வந்தார் என்பது நாட்குறிப்பின் வாயிலாக நன்கு அறியலாம். அவர்களைச் சார்ந்து பலகுடி மக்கள் வாழ்ந்து வந்தனர். இங்கே தூய்ப்ளேக்சுமுகாமிடுவது வழக்கம் என்பதும் நாட்குறிப்பில் கிடைக்கப் பெறுகின்ற செய்தியாகும். தூய்ப்ளேக்சு அப்பகுதி குடிமக்களை அழைத்து இப்பகுதியின் பெயர் என்ன என்று வினவ 'முரட்டாண்டி சாவடி' எனக் கூறினர். அது போழ்து தூய்ப்ளேக்ஸ் இனி இப்பகுதி "தூய்ப்ளேக்ஸ் பேட்டை" என்று வழங்கப்படல் வேண்டும் என்று ஆணையிட்டனர். ஆணையை மீறி "முரட்டாண்டிசாவடி" என்று சொன்னால் சொல்கிறவர்களுக்கு அபராதம் விதிக்கப் படும் என்று கட்டளையிட்டனர். "ஆனந்த ரங்கப் பிள்ளை தினப்படி சேதிச் குறிப்பு" என்ற முதல் புத்தகத்தில் பக்கம் 187 இல் இதனைக் காணலாம். நிகழ்ந்தது 1743 ஆம் ஆண்டு டிசம்பர் மீ 21 உ. இதில் சிந்திக்கத்தக்க அருஞ்செயல் ஒன்று நிகழ்ந்தது; என்பதை அறிதல் வேண்டும் அண்ணல் ஆனந்தரங்கப்பிள்ளை 'முரட்டாண்டி' என்ற சித்தர் பெயர் மறைந்து தூய்ப்ளேக்ஸின் யெயர் வழங்குவது முறையன்று; என்று தம் உள்ளத்தில் எழுந்த காரணத்தால் அப்பகுதி குடிமக்களை வெளியேறச் செய்து வெற்றிடமாகக் காட்சியளிக்கும் வண்ணம் சூழ்ச்சிசெய்தார் என்றால் மிகை யல்ல. நம்பிள்ளை அத்தகைய அருஞ்செயலில் ஈடுபடவில்லை என்றால் இன்று "முரட்டாண்டிச் சாவடி" என்ற பெயரே மறைந்திருக்கும். இதனால் பிள்ளை அவர்களின் உள்ளக்கருத்து தக்கவர்களின் பெயருக்கும் அவர்களுடைய மாட்சியமைக்கும் ஆதரவு அளிப்பதே என்று நன்கு விளங்குகிறது.

பிள்ளையவர்கள் சமயப்பற்றினுள் ஆழ்ந்திருந்தனர் என் பதனை புதுவையில் நடைபெற்ற "சாம்பான் மிசியோன்," கேர்து (Guerre Dougs) என்ற பாதிரியார், தூய்ப்ளேக்ஸ்

அவர்களின் மனைவியின் - துணைகொண்டு "காப்பிரிக்க ராணுவத்தளபதிகளால் வேதபுரீஸ்வரர் ஆலயத்தைச் சிதைத்துச் சீர் குலைத்த செய்தியினைச் செவியுற்ற நம்பிள்ளை ரத்தக்கண்ணீர் வடிப்பதாகச் சித்தங்கலங்கி வரைந்த குறிப்புக்களும் நாட்குறிப்பிலே கிடைக்கப் பெறுகின்றன.

பிள்ளை அவர்கள் சமயத்திற்கும் மொழிக்கும் நாட்டிற்கும் தொடர்புடைய ஒருவராக விளங்கினர். குறிப்பாக ஒன்றிரண்டைக் காண்போம்.

பிள்ளை அவர்கள் 'தேமதுரக் கவிவழங்கும் கவிஞர்கட்கு வரையாது வழங்கிவரும் வள்ளல். அறிந்த பல புலவர்கள் அவர்கள் இருக்கைக்குச் சென்று முகமன் கூறிப் பெருநிதி பெற்றுச் சென்றனர்' என்பதும் அறிகின்றோம். ஜவ்வாது புலவர் என்பார் புதுவைக்கு எழுந்தருளிப் பிள்ளை அவர்களின் திருமெளிகையில் சென்று கண்டு களித்து இன்புற்று பிள்ளை அவர்கள் மீது தம் அன்பின் மிகுதியால் பாடிய பாக்களை "தனிப்பாடல் திரட்டு" என்னும் நூலினுள் காணலாம். பிள்ளை அவர்கள் மீது பாடுவதை இப்போது சிறிது கேட்போம்.

"பானு கிரணம் பார்க்கும் பங்கே ருகம்; நிலவு
தானும் வரப் பார்க்கும் சகோரங்கள்;
மாவிசயானந்தரங்கள்
கையைப் பார்க்கும் புலவோர் கண்!"

'ஆனந்த ரங்க விஜயம்' நூல் ஒன்றினைச் சீனுவாச கவி என்பார் 1725 ஆம் ஆண்டில் இயற்றியிருக்கிறார். புலவர்களைப் போற்றுவதிலே மிகச் சிறந்து விளங்கிப் பொன் பரிசு நல்கி மகிழ்விப்பார் பிள்ளை. இது குறித்து மதுரகவிராயர் என்னும் புலவர்,

"பொலங்கொண்ட மணிமாட மீமி சையிற்
புயல்தவழும் புதுவை யென்னும்
தலங் கண்டோம்; நினது நகை முகங் கண்டோம்
இனி வேண்டுந் தனங்கண் டோமே"

என்னும் பாடலினால் பிள்ளை அவர்கள் புலவர்களுக்குப் பொன் பரிசு வழங்கும் தன்மையுடையர் என்பதை அறிகின்றோம்.

பிள்ளை அவர்களின் நாட்டுக்குறிப்பில் உள்ள செய்திகளை நன்கு அறிவதற்கு பிரஞ்சு மொழிப் புலமையும் புதுவையில் அன்று மக்கள் பேசி வந்த வழக்குச் சொற்களையும் அறியும் திறனும் உடையவராயிருத்தல் வேண்டும். 'சொலுதா', பெத்திசியோம், கெவுனி, குந்தாணி, வெற்றிமுஸ்தீது, கொபுதார்கள், துல்லியோ, வயணம், சகலாத், முடே, அதளகுதளம், வனதே, சிறுத்திரமாய், வந்திருக்கிருப் போலே, கோன்சேல் இவை போன்ற இன்னும் பல சொற்களும், கொச்சைத் தமிழ் சொற்களும் நாட்குறிப்பிலே பரக்கக் காணலாம்.

பிள்ளை அவர்களின் இறுதிக்காலம் இப்படி அமைந்தது. அமைந்தது. பிரஞ்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் அடிக்கடி நடந்து வந்த போர் நாளுக்கு நாள் கடுமையாகிக் கொண்டு வந்தது. அதனைச் சமாளிப்பது பிரஞ்சுக்காரர் களுக்குப் பெரிதும் சங்கடமாய் விட்டது.

1760 ஆம் ஆண்டு கைத்தொழில்நைந்து விட்டது. உணவுப் பொருள் கிடைப்பது அரிதாயிற்று. மக்கள் மிக்கத் துன்ப முற்றனர். பிரஞ்சுக்காரர்கள் வந்த வாசியில் தோல்வி யுற்றனர். உடனே புதுவையை எதிரிகள் தாக்கினர். பிரஞ்சுக் காரர்கள் நகரைக் காக்கவேண்டி நகர் செல்வந்தர்களிடத்து ஏராளமானப் பொருள் கேட்கப்பட்டது. வடக்கிலும், ,தெற்

கிலும், மேற்கிலுமாக,-ஆங்கிலேயர் நகரை முற்றுகையிட்டனர். அப்போது கவர்னராயிருந்த லல்லி தொலாந்தால் நிலைமையைச் சீர்படுத்தி ஊரிலிருந்த நாட்டாண்மைக் காரர்களை வற்புறுத்தி பெருந்தொகைக் கொடுக்கும்படி கட்டளையிட்டார். பிள்ளை இவற்றையெல்லாம் கண்டு மனத் தளர்ச்சியடைந்து "நீண்ட நாட்களாய் புகழுடன் விளங்கிய புதுவை என்னுகுமோ" என்று வருந்திப் புதுவையை விட்டுத் தம் குடும்பத்துடன் சென்னை செல்லத்திட்டமிட்டார். குடும்பத்தைச் சதுரங்கப்பட்டணத்திற்கு அனுப்பி வைத்தார். பிள்ளை பிரயாணப் பட முடியாமல் நோயுற்ருர் 1771 ஜனவரி 11ஆம் தேதி இயற்கை எய்தினுர்.

பல்வளமுற்று பார் அறிய வாழ்ந்த உத்தமப் பெரியார் தமிழகத்தில் ஒருவர் உண்டென்ருல் அவர் அன்ருே நம் ஆனந்தரங்க அண்ணல்!



# மரியதாசுப்பிள்ளை

## -புலவர். பால. எல்லப்பிள்ளை-

பலவளங்களும் நிறைந்த புதுவையம்பதியில் தோன்றிய புகழ் மணிகளுள் மரியதாசுப்பிள்ளையும் ஒருவராவர். அவர் 1701ஆம் ஆண்டில் பிறந்தார். அவருடைய பெற்றோர், குடும்பத்தினர், உறவினர், யாவர் என்பது தெரியவில்லை. தற்போது, புதுவை ஆனந்த ரங்கப்பிள்ளை வீதியிலுள்ள அடைக்கல மாதா மடம் இருக்கும் இடம்தான், முன்பு மரியதாசுப் பிள்ளை வாழ்ந்து வந்த இல்லமாக இருந்தது.

அவர் கம்பீரமான தோற்றம் உடையவர். மெல்லிய மல் வேட்டியைக் கீழ்ப் பாய்ச்சுக் கட்டியும், மெல்லிய மல் துணியின் தைத்த முழுக்கை சட்டையும், சட்டையின் மேல் குறுக்கு வசமாக விசிறி மடிப்புத் துண்டும், தலைப்பாகையும் அணிந்திருந்தார். எப்போதும் காலில் கட்டையுடன்தான் நடந்து செல்வார். நல்ல வசீகரமான முகத்தையுடையவர்.

தமிழ், சமஸ்கிருத மொழிகளை நன்கு பயின்றவர். தக்க வயதில் அவருடைய பெற்றோர் அவருக்குத் திருமணம் செய்து வைத்தனர். பின்பு, அவருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்த தாகவும் தெரிகிறது. பிராஞ்சு தேசத்தில் இருந்து புதுவைக்கு வந்த பிரஞ்சு பாதிரிமார்கள் தான், மரியதாசுப் பிள்ளைக்கு, லத்தீன், பிரஞ்சு மொழிகளைக் கற்றுக் கொடுத்தனர். அவர் வான சாத்திரத்திலும் வல்லவராகத் திகழ்ந்தார்.

தன்னுடைய 35 ஆவது வயதிலிருந்தே பலருக்கும் உதவி புரிந்து வந்தார். அதனால் மக்கள் அவரை ஒரு முக்கியத்துவம் வாய்ந்த மனிதராகக் கருதினர். தன்னுடைய 45 ஆவது வயதில் தான், புதுவை அரசின் நீதிமன்ற மொழி பெயரப்பாளராகப் பிரஞ்சு அரசினரால் நியமிக்கப்பட்டார். அவர் காலத்தில் புதுவையில் இரண்டு விதமான நீதி மன்றங்கள் இருந்தன. கும்பினிகாரர்களுக்கு நீதி வழங்கும் நீதிமன்றம் ஒன்று. கறுப்பர்களுக்கு நீதி வழங்கும் நீதிமன்றம் மற்றொன்றாகும். இவ்விருவகை நீதி மன்றங்களிலும் மரியதாசுப் பிள்ளை அவர்களே பிரஞ்சு மொழி பெயர்ப்பாளராகப் பணி புரிந்து வந்தார்.

1755இல் வான சாத்திரத்தில் வல்லவரான (Anquetil Duperron) 'ஆங்கெத்தில் துய்ப்பெரோன்' என்பவர் பிரஞ்சு நாட்டில் இருந்து புதுவைக்கு வந்தார். அவர் 1731 முதல் 1805 வரை வாழ்ந்தவர். அவர் பாரசீக மொழியை நன்கு பயின்றவர். சமஸ்கிருத மொழியைச் சிறிதளவே பயின்று இருந்தார்.

1761-இல், ஆங்கிலேயர்கள் புதுவையைப் பிடித்துக் கொண்டார்கள். அதனால் 'ஆங்கெத்தில் துய்ப்பெரோன்' என்பவர் பிரஞ்சு நாட்டிற்குத் திரும்பிவிட்டார். அப்போது அவர் பல மொழிகளைச் சேர்ந்த 180 கையெழுத்துப் பிரதி களுடன் பிரஞ்சு நாட்டிற்குச் சென்றார். அந்த 180 கையெழுத்துப் பிரதிகளில், பாரசீக வேதமாகிய (Zind Avesta). ஜிந்த் அவஸ்தா என்பது சிறந்த கையெழுத்துப் பிரதியாகும். இதையும், 50 உபநிடதங்களையும் லத்தீன் மொழியில் மொழி பெயர்த்துள்ளார்,

1768-இல் (Le'gentil Calole'ane) ஏலழான்தில் கல்தெயேன் என்ற பிரஞ்சு நாட்டு வான ஆராய்ச்சி நிபுண ரும் புதுவைக்கு வந்தார், துய்ப்பெரோனும், கல்தெயேனும்,

வான ஆராய்ச்சியில் வல்லவரான நம் மரியதாசுப்பிள்ளை அவர்களைச் சந்தித்துப் பேசினர். அப்போது, மரியதாசுப் பிள்ளை பிரஞ்சு நாட்டு வானநூல் வல்லுனரிடம் விளம்பியதாவது : (Venus) வீனஸ் என்ற நட்சத்திரம் 60 ஆண்டுகளுக்கு ஒருமுறை தன் குறிப்பில் மாற்றம் அடையும் என்றுர். அக்குறிப்பு மாற்றத்தின்படியே தான் அவ்வருடத்தில் புயல் காற்று வீசியது. பெருமழை பெய்தது. அதனுல் நாட்டில் அதிக சேதம் உண்டாயிற்று.

(Legentil) ஏலழான்தில் என்பவர் 23 மாதங்கள் வரையில்தான், புதுவையில் தங்கி இருந்தார். அப்போது அவர் சூரிய மண்டலத்திலுள்ள வீனஸ் கோளின் குறிப்பு மாற்றம் பற்றி ஆய்ந்தறிந்தார். அவர் இந்தியாவில் 1760-முதல் 1771 வரையில் பதினுரு ஆண்டுகள் தங்கி இருந்து ஆராய்ச்சி செய்து சிறந்த நூல் ஒன்றை வெளியிட்டார். அதில் இந்தியாவைப் பற்றிய குறிப்புகளும் உள்ளன.

மரியதாசுப் பிள்ளையுடன் படித்தவர் மலையப்பா என்பவராவர். ஏலழான்தீலுக்கு வழி காட்டியாயிருந்தவர் மரியதாசுப் பிள்ளையே யாவர். தமிழ் மொழியிலிருந்த பாகவத்தை மரியதாசுப்பிள்ளை பிரஞ்சு மொழியில் மொழிபெயர்த்து பிரஞ்சு நாட்டு ஆராய்ச்சியாளருக்கு அனுப்பினுர்.

ஆனந்த ரங்கப் பிள்ளை டைரியில் 23, 27 நவம்பர் 1745-லும்; 30 அக்டோபர் 1752 லும்; 30 டிசம்பர் 1760 லும்; ஜனவரி 1761 லும் புதுவையில் புயல் காற்று வீசி பெருமழை பெய்து புதுவை நகரைப் பாழ்படுத்தியுள்ளதாகக் குறிக்கப்பட்டுள்ளது. பெரும்பாலும் புயல் அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதங்களில் தான் வீசியுள்ளது. மரியதாசுப் பிள்ளையின் வானக்கோள் ஆய்வுக் குறிப்பும் ஆனந்தரங்கப் பிள்ளையின் டைரி குறிப்பும் பொருத்தமாயுள்ளன.

(Sonarat) சொனரா என்பவரும் பிரஞ்சு நாட்டிலிருந்து புதுவைக்கு வந்த ஆராய்ச்சியாளர்களுள் ஒருவராவர்.

சொனரா என்பவர் 1774 முதல் 1781 வரையில் கிழக்கிந்தியாவிற்கும், சைனு விற்கும் வந்து சிறந்த ஆராய்ச்சி ஒன்றை நிகழ்த்தினுர். அவ்வாராய்ச்சியைப் பற்றி விளக்கமாக பிரஞ்சு மொழியில் நூல் ஒன்றை எழுதி பாரீஸ் நகரில் 1782-இல் சொனரா என்பவர் வெளியிட்டதாகத் தெரிகிறது. அவர் மரியதாசுப் பிள்ளையிடமிருந்து பாகவதத்தின் பிரஞ்சு மொழி பெயர்ப்பு நூலை வாங்கிக் கொண்டு போய் இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

(Foucher, ol' opsonville) புஷே தொப்சோன்வில், (Monneron) மொனெரோன் அவர்கள் இருவரும் புதுவைக்கு வந்து, மரியதாசுப் பிள்ளையிடமிருந்த, வேறு தமிழ் இலக்கிய நூல்களின் மொழி பெயர்ப்புக்களைப் பெற்றுக் கொண்டு போய் பிரஞ்சு நாட்டில் அறிமுகப் படுத்தினுர்கள், எனத் தெரிகிறது.

(Deguignes) தெகீங் என்பவர் மரியதாசுப்பிள்ளையின் பாகவத பிரஞ்சு மொழிபெயர்ப்பு நூலைக் கொண்டு, (Inolian Chronologie) இந்திய காலக்கிரம வரலாறு; (Universel Chrono logie) மற்ற நாடுகளின் காலக்கிரம வரலாறு இவ்விரண்டிற்குமுள்ள தொடர்புகளைக் கண்டறிந்தார். அவ்வாராய்ச்சி கிறித்து பிறப்பு ஆண்டை ஆரம்பிக்க மூலகாரணமாய் இருந்தது என்றனர். மரியதாசுப் பிள்ளையால் வெளியிடப்படாத சோழ மண்டலக் கரையின் வானசாத்திர நூல் ஒன்றைத் தெகீங் என்பவர் பிரஞ்சுமொழியில் வெளியிட்டார்.

தமிழிலிருந்த பஞ்சதந்திரக் கதையைப் பிரஞ்சுமொழியில் எழுதி வெளியிட்டவர் மரியதாசுப்பிள்ளையே ஆவார். மேனுடுகளிலிருந்து இந்தியாவிற்கு வந்தவர்கள், இலக்கியம், கலை, சிற்பம், ஓவியம், பொருளாதாரம், செல்வம் முதலியவைகளைப் பற்றி ஆய்ந்தறிந்து கொண்டு தம் நாட்டிற்குப் போய் பல ஆய்வு நூல்களை வெளியிட்டுள்ளனர்.

மேனுடுகளிலிருந்து புதுவைக்கு வந்தவர்களுக்குப் பெருந்துணை புரிந்தவர் மரியதாசுப் பிள்ளையே யாவர்.

நீதிமன்றங்களிலும் மக்களுக்குப் பெருந்தொண்டு புரித்துள்ளார். இவ்வாறு பலவகையிலும் மரியதாசுப்பிள்ளை அயராது உழைத்துப் புகழுடன் வாழ்ந்தார். அவருக்குப் பிரஞ்சு அரசினர் பதக்கம், விருது, சான்றிதழ் முதலியன அளித்துப் பாராட்டியுள்ளனர். அவர் தன்னுடைய 75 ஆவது வயதில் ஏம்ரல் மாதம் 3 ஆந்தேதி 1796ஆம் ஆண்டில் இறைவன் திருவடி நிழலை அடைந்தார்.

தற்போது கலவைக் கல்லூரி இருக்குமிடத்தில்தான் முன்பு கிறித்தவர்களின் கல்லறை இருந்தது; அங்குதான் மரியதாசுப் பிள்ளையையும் அடக்கம் செய்தனர். பிறகு கலவை சுப்புராயச் செட்டியார் அவ்விடத்தில் கல்லூரி கட்டும்போது அங்கிருந்த கல்லறைகள் அகற்றப்பட்டன.

மரியதாசுப் பிள்ளையின் அருந்தவப் பயனுல் பிரஞ்சு அரசு அவருடைய பூத உடலை மீண்டும் தோண்டி எடுத்துக் கொண்டு போய் புதுவை முத்தியாலுப் பேட்டை கல்லறையில் வைத்துள்ளனர்.

புதுவை முத்தியாலுப்பேட்டை பாரதிதாசன் வீதி பக்கத்திலுள்ள வழியே கல்லறையினுள் சென்று பார்த்தால் மூன்ருவது வரிசையிலுள்ள ஐந்தாவது கலல்றைதான் மரியதாசுப் பிள்ளையின் கல்லறையாகும்.



# ஜூலியன் வேன்சோன்

(1843 - 1926)

R. பெருமாள்

---

அரசியல் காரணமாக மேலை நாட்டினரின் ஆட்சியும் நாகரிகமும் தமிழ் நாட்டில் பரவத்தொடங்கிய காலந்தொட்டு தமிழகத்திற்கு வந்த ஐரோப்பிய ஆர்வலர் பலர் தமிழ்மொழி பயிலத்தலைப்பட்டனர். தெள்ளிய தமிழ் நூல்களின் திறங் கண்டு வியந்து அவற்றை ஐரோப்பிய மொழிகளிற் பெயர்த் தமைத்தார் சிலர். மேலை நாட்டு மொழி நூல் முறைகளைத் துணைகொண்டு தமிழ்மொழியை ஆராய்ந்தார் சிலர். இம் முத்திறத்தாரும் தமிழ் மொழிக்குத் தகை சான்ற தொண்டு புரிந்துள்ளனர். இவ்வாறு தொண்டு புரிந்த ஐரோப்பியர்கள் பல்வேறு நாட்டவர், பல்வேறு மதத்தவர். பல்வேறு மொழி யினர். இத்தகைய தமிழ்த்தொண்டு செய்த பிரெஞ்சு பெரு மக்களில் தலை சிறந்தவரான ஜூலியன் வேன்ஸான் (Julien Vinson) என்ற பெருமகனாரைப் பற்றி விவரம் காண்போம்.

மொழியியல், இலக்கிய ஆய்வு இவற்றுள் வல்லுனரான ஜூலியன் வேன்ஸான் 1843 ஆம் ஆண்டில் பாரீஸ்மாநகரில் பிறந்தார். இவரது பிள்ளைப் பருவமும் தொடக்கக் கல்வியும் பிரெஞ்சு நாட்டிலேயே நிகழ்ந்தன. பின்னர் இவரது தந்தை யார் பிரெஞ்சு நாட்டிலிருந்து புதுவைப் பிரதேசத்திற்கு நீதி பதியாக அனுப்பப் பட்டார்.

தந்தையார் புதுவைக்கு வரும்போது தனயன் ழூலியே னையும் உடனழைத்து வந்தார். புதுச்சேரியை யடைந்த சிறிது காலத்திற்குள் கன்னித்தமிழ் ழூலியேனின் கவனத்தை யீர்த்தது. சுந்தரத்தமிழின் இனிமையையும் தீஞ்சுவையுங் கண்ட ழூலியேன் வேன்ஸான் முறையாகத் தமிழைக் கற்கத் தொடங்கினர். இச்செய்தியைப் பல ஆண்டுகளுக்குப் பின் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களுக்கு ழூலியோன் வேன்சோன் எழுதிய கடிதத்தில் அவருடைய தந்தையார் காரைக்காலில் நீதிபதியாக இருந் தார் என்றும் அக்காலத்தில் அவர் தமிழ் படித்தார் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

மதி நுட்பம் மிகுந்த வேன்சோன் மிக விரைவிலேயே தமிழ் நூல்களைப் பயின்று அவற்றின் செம்பொருளைச்செவ் விதின் உணரும் ஆற்றல் பெற்ருர். மொழியறிவையும், அதன் திட்ப நுட்பங்களையும் மேன்மேலும் அறிந்து கொள்ளும் பொருட்டுப் பல தமிழ்ப் புலவர்களை அணுகினர். அக்காலத் தில் அவர் தொடர்பு கொண்ட புலவர்கள் நாகை வேதாசலம் பிள்ளை என்ற மறைமலையடிகள், பண்டிதர் சவரிராயர் காரைக் கால் ஐயாக்கண்ணு, ஐயாசாமிப்புலவர், ஆகியோரெனத் திரு.தேசிகம்பிள்ளை அவர்கள் தாம் எழுதிய "தமிழகமும் பிரெஞ்சுக்காரரும்" என்ற நூலில் குறிப்பிடுகின்ருர்கள்.

இவருடைய மொழியியல் திறமையைக் கண்ட பிரெஞ்சு அரசு 1879ஆம் ஆண்டில் பாரிசிலுள்ள கீழை நாட்டு மொழிகளைப் போதிக்கும் பள்ளியில் இவரைத் தமிழ், இந்தி ஆகிய மொழிகளைப் போதிக்கும் பேராசிரியராக நியமித்தது. இப்பணியை இவர் ஆராய்ச்சிப் பின்னணியிலும், மேலை நாட்டு மாணவர்கள் பயன் பெறும் வகையிலும் மேற்கொண்டு வரும் நாளில், தமிழ் நாட்டில் தமிழ்த்தாயின் அணிகலன் களாகிய காப்பியங்களை அரும்பாடுபட்டு அச்சுக்குக் கொணர்ந்த தமிழன்னையின் தவப்புதல்வர் மகாமகோ

பாத்தியாய டாக்டர். உ.வே. சாமிநாத ஐயரோடு இவருக்குத் தொடர்பு ஏற்பட்டது.

சாமிநாத ஐயரவர்கள் "சீவகசிந்தாமணியின்" முதற் பதிப்பை 1887ஆம் ஆண்டில் வெளியிட்டார். அந்நூலைக் கண்ணுற்று மகிழ்ந்த பலர் தமக்கேற்பட்ட இன்பக்கிளர்ச்சிக்கு அடையாளமாக ஐயரவர்களுக்குப் பல பாராட்டுக் கடிதங்கள் எழுதினர். அவற்றில் 1891ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் பாரீஸ் நகரத்திலிருந்து வந்த கடிதமும் ஒன்று. கடிதத்தின் மேலிருந்த முகவரி தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்பட்டிருந்தது. பாரிசிலிருந்து வந்த தமிழெழுத்தைக் கண்டு வியப்புற்ற ஐயரவர்கள் கடிதத்தை ஆவலுடன் திறந்து பார்த்தார். கடிதம் முழுவதும் தமிழாக இருந்தது. கடிதத்தின் தலைப்பில் ஒரு புதிய செய்யுளும் இருந்தது. அதைப் பார்த்தபோது ஐயரவர்களுக்கு அளவு கடந்த ஆச்சரியம் உண்டாயிற்று. ழூலியோன் வேன்சோன் எழுதிய அக்கடிதத்தின் பொருளடக்கம்.

ம-ள-ள-ஸ்ரீ சாமிநாதையரென்னும் பெரும்புகழ் பொருந்திய தமிழாசிரியராம் மகா சிறப்பிற் புலவர் தமக்கு நாம் பாரிசு மாநகரத்தில் தமிழாசிரியர் எழுதுமவையாவன:-

வெண்பா

சிந்தா மணியாஞ் சிறப்புடைய காப்பியமே
பொன்றுதின் மாலை பொருந்திவரக் - கண்டேன்
சிலப்பதி காரமுதற் சீர் நூல்கள் நான்கு
மளித்தலா மென்ம ரறைந்து.

நீர் 1887-ஆம் ஆண்டிலச்சிற் பதிப்பித்த சிந்தாமணியைக்கண்டு மிகவுமதிசய மாயிருந்தோமென்றும், நீர் செய்த வுலகோர்க்குப் பெரியவுபகாரமறிந்தோ மென்றும் இன்னம் பழைய புத்தகங்களச்சிற் பதிப்பித்தற் குரியவா யுண்டென்றும்

உமக்கு நாமெழுத வேண்டுமென்றெண்ணிக் கொண்டு வருகிறோமாதலால் மிகவும் களி கூர்ந்து வாழ்வோ மெப்போதென்றால் சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதியென்னும் வேறு நாற்பெருங் காப்பியங்கள் பரிசோதித்துக் கொடுத்த அப்போதே சொல்லுவோம்.

சிலப்பதிகாரமோ வென்றால் சென்னப் பட்டணத்தில் முன் 1885-ஆம் வருஷத்தில் அதின் முதற்காண்டம் உரையின்றி கொடுத்தார் களென்றறிகின்றோமானுலிரண்டாமும் மூன்றும் தருகவென்று பல விசேடமா யறவிய மனத்தரெல்லோருங் கேட்போர்.

மணிமேகலையோ வென்றால் நங்கட்கண் ஒரு கையெழுத்துப் பிரதியுண்டு. ஆனாலந்தப் பிரதியெழுதியவன் பழையவெழுத்துக்களறியாத படியினாலே சில கவிதைகளும் வார்த்தைகளு மெழுதாமல் விட்டான். ஆதலினாலந்தப் பிரதி படித்தற்குரிய தல்லது.

சிறப்புப் பொருந்திய நூலவைகளச்சிற் பதிப்பித்தலின்றி விட்டாற் கையெழுத்துப் பிரதிகளடைக்கலமோவென்று கேட்கிறோம். இங்குதான் பாரிசு மாநகரத்தில் Printing type உண்டு இதுவுமல்லாமல் French பாடைக்குத் திருப்பியாவர்க்கும் பயன் செய்யவிக்கக் கூடுமென்று முமக்கு நாமெழுதுகின்றோம்.

எம்முடைய புன்றமிழை உம்முடைய தயையினாலே வாசித்துக் கொண்டால் ஒரு காகித மெமக்கு மறுபடியனுப்பினால் மிகவுஞ் சந்தோடமாயிருப்போம்.

சுவாமியுடைய கிருபையெல்லாமும் மேல் வருகவென்று உங்கள் Colleague and Servant ஆயிருக்கிறோம்.

Prof. J. Vinson.

பிரெஞ்சு தேசத்தில் உள்ள ஒருவரிடம் தமிழன்பு எவ்வளவு ஊறியிருக்கின்ற தென்பதை இக்கடிதம் நன்ருக வெளிக்காட்டியது. வேன் சோன் சீவக சிந்தாமணியைப் படித்து மிக்க இன்பத்தை அடைந்திருந்தார். அதனேடு ஒருங்கு வைத்து எண்ணப்படும் சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி என்னும் நான்கும் வெளிவந்தால் தான் பூரணத் திருப்தி உண்டாகுமென்று இக் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிருர். என்னே இவர் தமிழ்ப் பற்று!

மூலியேன் வேன் சோனுடைய அன்புரைகள் சாமிநாத ஐயரின் உள்ளத்தைக் குளிர்வித்தன. மூலியேனுடைய கடிதத்திற்குப் பதில் எழுதினர். இதற்குப் பின் ஐயரவர்கள் சிலப்பதிகாரத்தையும், மணிமேகலையையும் அச்சிடுவதற்காக ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார். அந்நூல்களின் உரைச் சுவடிகள் பாரிசில் கிடைக்குமாவென்று வேன் சோனுக்குக் கடிதம் எழுதினர். அதற்கு வேன் சோன், பாரீஸ் புத்தக சாலையில் (Bibliotheque Narional) உள்ள 1000 தமிழ் நூல்களில் சிலப்பதிகாரம் இல்லையென்றும், மணிமேகலை என்ற ஒலைப்பிரதி உண்டென்றும் அதுவும் உரையின்றியுள்ள தாகவும் வேண்டுமேல் கடுதாசிப் பிரதி அனுப்புவதாகவும் எழுதினர். பின்னர் ஐயரின் வேண்டுகோளுக்கிணங்க, மணிமேகலைப் பிரதியின் பதிகத்தை மட்டும் எழுதியனுப் பினர். வேன் சோன் அனுப்பிய பாட்டுக்கள் இலக்கணப் பிழையின்றி இருந்தகாக, ஐயரவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இந் நிகழ்ச்சிகளுக்குப் பிறகும் வேன் சோன் சாமிநாத ஐத்ருக்குப் பல கடிதங்கள் எழுதினர். அக்கடிதங்கள் ஒவ் வொன்றிலும் பழைய தமிழ் நூல்கள் வெளிவர வேண்டுமென் பதில் அவருக்கிருந்த ஆவலைப் புலப்படுத்தினர். மேலும் தமிழ் நூல்களை பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்க்கவேண்டு மென்பது அவருடைய விருப்பம் மற்றும் பிரெஞ்சு மொழியில் எழுதிய சிந்தாமணியின் சுருக்கமொன்றை வேன்சோன்

ஐயரவர்களுக்கு அனுப்பி வைத்தார். அதை ஐயர் பிரெஞ்சு மொழியறிந்த தனது கல்லூரி முதல்வருக்குக்காட்டினர். அவர் அப்புத்தகத்தில் சாமிநாத ஐயரைப் புகழ்ந்து எழுதியிருப்பதை எடுத்துக் கூறி, அதனல் அக் கல்லூரிக்கே பெருமை ஏற்படுகிறதென்று கூறினர். அதைக் கேட்ட ஐயகவர்களுக்கு அயல் நாட்டில் ஒருதுணையுமின்றித் தமிழ் ஆராய்ச்சி செய்து வந்த மூலியேன் வேன் சோனுடைய தமிழன்புதான் தனக்கு மிகச் சிறந்ததாகத் தோன்றியதாகக் கூறினர். ஐயர் அவ்வப்போது அனுப்பிய புதிய நூற்பதிப்புக்களை ஆழ்ந்து படித்த வேன் சோன் ஐயரவர்களைப் பாராட்டியதோடுதான் புதிதாகத் தெரிந்து கொண்ட விஷயங்களையும் தெரிவித்தார். ஐயரவர்கள் வெளியிட்ட சிலப்பதிகாரப்பதிப்பைக் கண்ட வேன் சோன் கரை கடந்த இன்பமடைந்து சாமிநாத ஐயரைப் பாராட்டி அகவலாக ஒரு கடிதம் எழுதினர். அது :

குருவே துணை.

(ஆசிரியப்பா)

"இளங்கதிர் ஞாயி றிருடொரு நீக்கிப்யபின்
விளங்கிடைச் சங்கெறி வெண்டிரைக் கடல்சூழ்
மாநில மதனில்வாழ் மறைமிகு சோழப்
பூ நிலத் தலர்ந்த புகார்நக ரத்துத்
கோவலன் கண்ணகிதங் கூறரு மன்பொடு
பாவல முடையாட்குப் பற்பொருட் பரத்தலு
மாங்கவன் றுயரமு மணிகிளிர் சிலம்பு
வாங்குபு போயது மதுரை யிற்கொலைப்
படலு முதலிய பறைதருஞ் சரிதை
யடல்வினைப் பயனெறி யமைபொரு ளின்பம்
வீடெனயாந் தெளிவுற வின்மொழிக் காப்பியஞ்
சிலப்பதி காரஞ் சிறந்த பெயரா

லுலகெலா மறிய வொளிதரு சென்னைக்கண்
ணச்சிட வளர்த்தீ ரடைந்த பெரும்புகழ்
மாசிலா நாமகன் மதிதெரிந் திசைக்கும்
மொருபே ரகத்திய னுருக்கொண்டு
மருளுடை மண்மிசை வந்துதோன் றினனென".

என்று சாமிநாத ஐயரைப் புகழ்வோரின் நாவெல்லையில் வைத்துப் பாராட்டியுள்ளார். புறநானூற்றைப் பார்த்து அதன் முகவுரையில் ஐயரவர்கள் கொடுத்திருந்த செய்திகளைப் படித்து வேன்சோன் வியப்புற்றார். எட்டுத்தொகையுள் ஒன்றாகிய பரிபாடலைப் பதிப்பிக்கும் செலவை தாமே ஏற்றுக்கொள்வதாக ஐயரவர்களுக்கு எழுதினார். இந்தப் பரிபாடல் என்னும் நூலை தற்போது புதுவையில் உள்ள Institut Francais-ல் தமிழிலக்கிய ஆராய்ச்சி செய்யும் Mž/11. Gros என்பார் பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்த்துள்ளார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

கடல் கடந்து சென்ற தமிழ்ச் சுவடிகளில் அரிய நூல்கள் வேறு எவையேனும உள்ளனவோ வென்று ஐயரவர்கள் வேண்டு கோளைக கேட்டிருந்தார். அதற்கு வேன்சோன் "வில்லைப்புராணம்" என்ற ஒரு சுவடி உள்ளதென்றும் அது 494 செய்யுட்களையுடையதென்றும் இன்ன இன்ன சுருக்கங்களையுடையதென்றும் எழுதியதோடு மட்டுமல்லாமல், தம் கைப்பட அந்நூல் முழுவதையும் எழுதியும் அனுப்பினார். மற்றும் தாம் எழுதிய நூலின் தலைப்பில் சிவலிங்கத்தின் உருவமும் நந்தியின் உருவமும் வரைந்திருந்தார். வில்லைப் புராணத்தை ஐயர் படித்து பார்த்தபோது அது வில்வ வனமென்னும் தலத்தில் புராணமாகக் காணப்பட்டது. ஆனல் எந்த வில்லைவனத்தைப் பற்றியது. அந்நூலென்று ஐயரவர்களுக்கு விளங்கவில்லை. அப்புராணத்திலுள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுள் ஒன்றிலிருந்து வில்வ வனத்தில் எழுந்

தருளியுள்ள அம்பிகையின் திருநாமம் குயிலம்மையென்று தெரிய வந்தது. இந்நிலேமில்

"பக்குவ மாகக் கவி நூறு செய்து பரிசுபெற
முக்கர ணம்மெதிர் பல்காலும் போட்டு முயன்றிடினும்
அக்கட போவெனும் லோபரைப் பாடி யலுத்துவந்த
குக்கலே யாண்டருள் வில்வ வணத்துக் குயிலம்மையே"

என்ற தனிப்பாடலும் ஐயரவர்கள் ஞாபகத்துக்கு வந்நது. மேலும் விசாரித்ததில் புதுச்சேரிக்கு அருகில் உள்ள வில்லிய நல்லூர் அம்பிகையின் பெயர் கோகிலாம்பிகை யென்று தெரிய வந்தது. பின்னர் ஐயரவர்கள் அவ்வூர் புராணம் தேடியபோது நல்லகாலமாகச் சில பிரதிகள் கிடைத்தன அவற்றைக் கொண்டு ஐயரவர்கள் வேன் சோன் துரை அனுப்பிய பிரதியைச் செப்பஞ்செய்து அப்புராணத்தை வெளியிட்டார்கள். இதுபற்றி ஐயாவர்கள் வேன்சோன் துரைக்கு எழுதினர். இச் செய்தி தெரிந்ததும் வேன்சோன் பெரு மகிழ்ச்சியடைந்தார். பின்னர் வேன்சோன் தமிழ் இலக்ணெமொன்று எழுதினர். அப்புத்தகத்தை ஐயரவர் களுக்கும் அனுப்பினர்.

ஒரு முறை வேன்சோன் திருக்குறள் காமத்துப்பால் பிரெஞ்சு மொழி பெயர்ப்புப் புத்தகமொன்றை ஐயரவர்களுக்கு அனுப்பி "இதனைத் தன் மாணவர் ஒருவர் மொழி பெயர்த்தார் நான் முகவுரை எழுதியிருக்கிறேன் என்று எழுதினர். மற்றும் வேன்சோனுடைய மாணவர் புதுச்சேரிக்கு வருகிறுர் என்றும் ஐயரவர்களேப் பார்க்க கும்பகோணத்திற்கு வருவாரென்றும் அம்மாணவரின் பெயர் Marquis de Barrique Fontainiu (மார்க்கி தெ பரீக் போன்டெனு) என்றும் எழுதியிருந்தார்.

1902-ஆம் ஆண்டு அம்மாணவர், நம் நாட்டில் நடை பெற்ற கீழ்நாட்டுக் கலேஞர் மகா சபையின் பொருட்டு

(Orientalists Congress) வந்திருந்தார். அவர் கும்ப கோணத்திற்குச் சென்று ஐயரவர்களைக் கண்டு தமது ஆசிரியர் வேன்சோனைப் பற்றி மிகவும் மதிப்பாகப் பேசிய பின் தான் வந்துள்ள நோக்கத்தைக் கூறி, நடக்கப்போகும் மகா சபையில் ஒரு பழைய தமிழ் நூலைப் பற்றிய கட்டுரை யொன்று வாசிப்பதற்காகப் பழைய நூற் பிரதியொன்று தந்தருளுமாறு கேட்டார். ஐயரவர்களும் அதுவரை வெளிப் படாதிருந்த பழைய காஞ்சிப் புராணத்தைத் தந்துதவினர். மகா நாடு முடிந்த பிறகு அவர் பிரெஞ்சு நாட்டிற்குச் சென்று தனது ஆசிரியர் வேன்சோனிடம் ஐயரவர்களைப் பற்றிப் புகழ்த்துரைத்தார். வேன்சோன் அது பற்றி ஐயரவர்களுக்குக் கடிதம் எழுதினர்.

எதிர்பாராத வகையில் சாமிநாத ஐயரவர்களுக்கு இவ் விரண்டு பிரெஞ்சு நண்பர்களுடைய நட்பு கிடைத்தது. ஆனால் 1910-ஆம் ஆண்டிற்குப் பிறகு வேன்சோன் துரை யிடமிருந்து கடிதம் ஏதும் ஐயரவர்களுக்கு வரவில்லை. வில்லைப்புராணத்தையும் காஞ்சிப்புராணத்தையும் பார்க்கும் போதெல்லாம் பிரெஞ்சு தேசத்து தமிழாசிரியரையும், அவரது தமிழ் மாணவரையும் நினைத்துக் கொள்வதாக ஐயரவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். மேலும் வேன்சோன் எழுதிய கடிதங் களைப்பொன் போல் போற்றி வருவதாகவும் வில்லைப்புராணம் வில்வவனப் பெருமையைக் காட்டிலும் வேன்சோன் துரையின் பெருமையைப் பறை சாற்றுவதாகவும் கூறி யுள்ளார்கள். ஜுலியேன் வேன்சோனைப் போன்று தமிழுக்குத் தொண்டு செய்து தமிழ்ப்பணியாற்றிய பிரெஞ்சுக்காரர் அவருக்கு முன்னே அல்லது அவருக்குப் பின்னே இருந்த தில்லையென்று துணிந்து கூறலாம் இத்தகைய பெரியார் 1926ஆம் ஆண்டில் தம்முடைய 83ஆவது வயதில் இயற் கையெய்தினர் என்று தெரியவருகிறது.



# பரமானந்த மரியதாசு
## 1870
## H. R. பரமானந்த மரியதாசு

---

புதுவையின் புகழ்மிகுந்த புதல்வர்களில் ஒருவரான பரமானந்த மரியதாஸ் அவர்களைப் பற்றிப் பேசுவதில் எனக்குச் சிறிது தயக்கம்.

அவர் என்னுடைய மதிப்புக்குரிய தந்தை ஆகவே தயங்கினேன், இருந்தாலும் பாசத்துக்கு அப்பால் நின்று அவரைப் பற்றி நான் அறிந்து வைத்திருப்பதை உங்களுக்கு மகிழ்ச்சியுடன் எடுத்துக் கூறுகிறேன்.

கன்னி மரியாளுக்குப் புதுவை கத்தோலிக்க திருச்சபை கோலாகலமாக விழாக் கொண்டாடும் டிசம்பர் எட்டாம் தேதி பரமானந்த மரியதாஸ், ஆயிரத்து எண்ணூற்று எழுபதாம் ஆண்டில் பிறந்தார். அக்காலத்தில் புதுவை நகர துணை மேயராக விளங்கியவரின் புதல்வராகப் பிறந்தவர் பரமானந்த தாஸ் அவர்கள். சோழ மன்னர் ஒருவரின் அரண்மனையில் திவானாகப் பணிபுரிந்த பரமானந்தப்பா என்பவரின் கீர்த்தி மிகுந்த பரம்பரை தென்தமிழ் நாட்டிலிருந்து இரு நூறு ஆண்டுகட்கு முன்பு புதுவைக்கு வந்து குடியேறியது. இந்த குடும்பத்தில் உதித்த பரமானந்த தாஸ், தமது நான்காவது வயதில் அவர்கள் வசித்து வந்த வட்டாரத்தின் ஒரு பள்ளிக்கூடத்துக்கு அனுப்பப்பட்டார். வகுப்பு ஆசிரியரின் பிரம்படியைப் பல தடவை பெற்றுக் கொண்ட சிறுவன்

பரமானந்தன், அந்த சிறிய பள்ளிக்கூடம் தனது எதிர்கால வாழ்வுக்கு அடித்தளம் அமைத்ததாகக் குறிப்பிட்டிருக்கிறார். தனது குணநலன்களை நல்ல விதமாக உருவாக்கியதும் இந்த அனுபவமே என்று கூறுகிறார் பரமானந்தன்.

தமிழில் படிக்கவும் எழுதவும் எண்ணவும் அறிந்த பரமானந்தர், பெத்திசெமினேர் பள்ளியில் பின்னர் பிரெஞ்சு, மற்றும் இலத்தீன், ஆங்கிலம் கற்கலானார். பிரெஞ்சு கல்லூரியில் கிரேக்க மொழி கற்றுத் தேர்ந்த பின்னர், பல முறைகள் தோல்வியுற்ற பரமானந்தர் "பஷ்லியே எஸ். Letters" ஆகத் தேர்ந்தார்.

இவருடைய தந்தையார் விரும்பியவாறு சட்டக் கல்லூரியில் சேர்ந்தவர், அங்கே மனம் செல்லாமல், பிறகு மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து, மிகவும் நல்ல முறையில் கல்வி பெற்று அவர் காலத்தில் முதன் முறையாகவே இவர் மட்டுமே பட்டம் பெற்றார். பிரஞ்சு இந்திய சேனைத்தேரின் பதக்கத்தைத் தொடர்ந்து இரண்டு ஆண்டுகள் பெற்றார். மூன்றும் ஆண்டில் புதுவையை விட்டுக் கிளம்பி 'பொர்தோ' சென்று படிப்பை மேற்கொண்டு பிரஞ்சு இந்தியாவின் முதல் டாக்டராக புகழ்பெற்றார்.

சொந்த ஊருக்குப் புகழோடு திரும்பிய டாக்டர் பரமானந்தர் அப்போது புதுவையில் இருந்த வெள்ளை ராணுவ டாக்டர்களின் பொறுமைத் தீயினால் தீண்டப்பட்டார். உள் நாட்டினன் ஒருவன் தமக்கு ஈடாத டாக்டராகப் புகழ் பெறுவது அவர்கட்குப் பிடிக்கவில்லை. இதைப்பற்றி பரமானந்தர் கவலைப்படாமல் தம் தொழிலில் மேம்பட அரும்பாடு பட்டார்.

இவரை எப்படியும் புதுவையிலிருந்து வெளியில் அனுப்பி விடும் நோக்கத்துடன் அவருக்குச் சந்திர நாகூரில் பெரிய உத்தியோகம் கொடுத்தார்கள். முதலில் தயக்கம் காட்டிய பரமானந்தர் இந்த சவாலை ஏற்று முதலில் காரைக்கால்

சென்று, இந்தோசீனு போய் பிரான்சுக்குப் போனுர். இந்த வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொண்டு மருத்துவத் துறையில் உயர் நிலைகளை எட்டினுர். மீண்டும் காரைக் காலுக்குச்சென்று ஏழாண்டு பணிபுரியலானுர். அப்போது உள்ளூர் அரசியல் தலைவர்களின் கெடுபிடிகளுக்குத் தலை வணங்காமல் வாழ்ந்து காட்டினுர், டாக்டர் பரமானந்தர்.

தவருன முறைகளில் சலுகை கேட்ட உள்ளூர் அரசியல் தலைவர் மீண்டும் மீண்டும் தொந்தரவு கொடுத்ததனுல் இவரை மருத்துவ மனையினின்று வெளியேற்றிவிட்டார். கோபப் கொண்ட அரசியல் தலைவர் என்னை எப்படி வெளி யேற்றினுயோ அதேபோல் இந்த ஆஸ்பத்திரியிலிருந்து உன்னை வெளியேற்றுகிறேன் பார் என்று சபதம் கூறிக் சென்றுர். அடுத்து நடைபெற்ற சட்டசபை கூட்டத்தில் டாக்டர் மீது சில குற்றச்சாட்டுகளைக் கூறியதால் அரசாங்கம் டாக்டர் மீது விசாரணை நடத்த வசதியாக சந்திரநாகூருக்கு மாற்றிவிட்டது. ஆனுல் விசாரணை நடந்தால் அரசியல் தலைவர் சொன்னவை நிருபிக்கப்பட முடியாது என்று தெரிந்து கொண்ட அரசாங்கம் விசாரணையை நடத்தவில்லை. விசாரணையை நடத்துங்கள் என்று டாக்டர் பரமானந்தர் பல தடவை வலியுறுத்தினுர். அப்போதைய கவர்னர் இவர்மீது கோபம் கொண்டு வேலையிலிருந்து நீக்கிவிடுவதாகக் கூறினுர். தாமே முன்பே ராஜிநாமா செய்துவந்த டாக்டர், தம் பதவியைத் துறந்து விடுதலை பெற்றுர்.

ஆமாம் இந்த விடுதலைக்குப் பிறகுதான் டாக்டரின் பணி பொன்போல் ஒளியுடன் பிரகாசிக்கத் தொடங்கியது.

சேன்த் ஆன் கிளினிக் என்ற பெயரில் ஒரு மருத்துவமனை திறந்து ஒவ்வொரு சனிக்கிழமையும் ஏழை எளியவர்க்கு இலவசச் சிகிச்சை செய்து வரலானுர். புதுவையில் முதன் முதலில் ஏற்பட்ட தனியார் மருத்துவமனை இதுதான். இத்துடனின்றி பத்திரிகைத் துறையிலும் இறங்கி ஆட்சி

அக்கிரமங்களையும் முறை கேடுகளையும் ஊழலையும் கண்டித்து எழுதலானார். தமிழிலும் பிரஞ்சிலுமாக 'ஸ்ரீ சுஜந ரஞ்சினி என்ற பெயருடைய வாரப் பத்திரிகையின் ஆசிரியராக டாக்டர் சிறந்த தொண்டு புரியலானார். டாக்டர் பரமானந்தர் எழுதிய "இந்திய மருத்துவத்திற்கும் ஐரோப்பிய மருத்துவத் திற்கும்……… என்ற நூலும் உள்ள தொடர்புகள்".

"இந்திய மூலிகைகளின் தோட்டம் என்ற நூலும் சிறந்து விளங்கின. முதல் நூல் மருத்துவத்துறையில் சிறந்து மதிக்கப் பெற்றது.

முன்பொரு சமயம் Bordeaux பல்கலைக் கழகத்தில் டாக்டர் பரமானந்தரோடு பழகிய ஒரு மருத்துவ நிபுணர், புதுவைக்கு வந்து பேச, இந்த மருத்துவ மேதையின் திறமையைப் புதுவையில் சரிவர பயன்படுத்திக் கொள்ள வில்லையே என்று வருந்தினார். இவருடைய ஆலோசயின் பேரில் உருவாக்கப்பட்ட புதுவை மருத்துவக் கல்லூரியில் மரபு வழியான மருத்துவத் துறைக்பான ஆய்வுப் பிரிவு ஏற்பட்டது. சிறந்த தலைவரானார் டாக்டர் பரமானந்தர். அறுபத்திரண்டு வயது நிறைந்த நம் டாக்டர் பரமானந்தர், தமது இடைவிடாத தொண்டினைத் தொடர்ந்தார்.

பலதிறப்பட்ட புத்தகங்களை வெளியிடுவதில் ஊக்கம் காட்டிய டாக்டர் அவர்கள், பல்வேறு மாநாடுகள் கருத் தரங்குகள் நடத்தி அரிய ஆராய்ச்சி உரைகளை வழங்கினார்.

பல்வேறு அரும் பெரும் விருதுகளையும், பட்டங்களையும், பாராட்டுகளையும் பெற்று மகிழ்ந்த டாக்டர் பரமானந்தர், தம் வழித்தோன்றல்களுக்கும் நலவழி காட்டினார். ஆயுர்வேத சித்த மருத்துவ நூல்கலையெல்லாம் பிரஞ்சில் மொழி பெயர்த் திருக்கிறார். நீதிக்காகவும் மனித குலமேம்பாட்டிற்காகவும் அயராது பாடுபட்ட டாக்டர் பரமானந்த மரியதாசரின் பல்வேறு புகழ்ச்சின்னகள் நம் புதுவையில் நிலைத்து நிற்கின் றன. நம் நெஞ்சில் இவர் தொண்டு உயர்ந்து விளங்கிக் கொண்டிருக்கிறது.

# அழகப்ப மணியப் பிள்ளை

வேதபுரியென்று விளங்கிய மெய்யறிவாளர்களால் இட்டு வழங்குதற் சிறப்பமைந்து ஞானிகள், சித்தர்கள், யோகிகள், அருட்புலவேர்கள், அரும் பெறற் கருத்துக்களை உலகுக்கு அள்ளித் தெளித்த கவிவாணர்கள் இப்படி பல்வோர்க்கும் தம் அபயகரம் நீட்டி ஏற்றுக் கொண்டு அவர்களிடத்து ஜம் பெரும் விளையாட்டு நடாத்தி அன்றும் இன்றும் என்றும் தம்மோடு ஐக்கியப்படுத்திக் கொள்கின்ற பெற்றிமை வாய்ந்த ஞான பூமியாம் புதுவையில் 18ம் நூற்றுண்டிலே வாழ்ந்து வந்த பெரியார். புதுவை புகழ்மணிகளுள்ளே ஒருமா மணியாய் விளங்கியவர் அறிவான் மேம்பாடும் மாண்பமர் செயற் கழலும் கொண்டிலங்கி அறந்தலை பிரியா அரும் பொருளீட்டியவர். உற்ற யாக்கையின் உறுபொருளை உணர்ந்தவர். ஆம். அவர்தான் சாவடி — மணியம் அழகப் பப்பிள்ளையாவர்கள்.

புதுவையில் பிரஞ்சு ஏகாதிபத்திய காலத்தில் டுப்ளே யின் ஆட்சியின்போது இவரும் ஒரு சிறந்த மனிதராக விளங்கி வந்தவர். 'மணியடிச்சா சோறு மணியபிள்ளைச் சாவடி' என்னும் பழமொழி இன்றும் புதுவையில் வழங்கி வருவதைக் காணலாம். சாவடி மணியப்ப பிள்ளை என்றும் அவர் அழைக்கப்பட்டவராவார். சாவடி மணியம் முருகப்ப பிள்ளை என்பாரும் அவர் காலத்திலேயே அழகப்ப பிள்ளை

யைப்போல் பணி செய்து வந்திருக்கிறார். புதுவையில் தற்போது நேருவீதி என்றழைக்கப்படுகின்ற பகுதியில் இருக்கும் சிறைச்சாலை அவர் காலத்தில் சாவடியாக இருந்து வந்தது. சாவடி என்று சொன்னால் அன்று அரசாங்க விருந்தினர்களை தங்க வைக்கும் இடம் ஆகும். தற்போது அரசாங்க விருந்தினர்களை தங்க வைக்கும் இடம் பயணிகள் தங்குமிடம் ஆகும். அப்படிப்பட்ட சாவடியின் மேற்பார்வை பொறுப்பு முழுமையும் மணியம் அழகப்பிள்ளையிடம்இருந்தது. பிள்ளையவர்கள் சைவ வேளாள மரபினர். விருந்தினரைப் பேனதும் சிறப்பினை நன்குணர்த பெரியார்; தம் குலமரபுக் கேட்ப சிறப்புற பணி செய்து வந்தார். சாவடிக்கு வருகின்ற விருந்தினர்க்கு தகுந்த முறையில் உபசரிப்பது போன்றவற்றைச் கவனிப்பது சாவடி மணியம் அழகப்பப்பிள்ளை என்று புதுவை வரலாற்றை தம் வாழ்க்கை குறிப்போடு பொதுவை நெறியினின்று தவறாது ஆக்கித் தந்த உயர் பெருந் திருவாளர் ஆனந்தரங்கப்பிள்ளை தமது குறிப்றிலே குறித்து வைத்திருக்கிறார். பிள்ளையவர்கள் சைவ மரபினர். ஆனதினாலே சிதம்பரம் என்னும் திருத்தலத்தும் அன்னவரின் சிறப்பு காணப்படுகிறது. 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்னும் திருவாக்கின்படி யாவற்றையும் அசைத்து நிற்கும் நாடாந்திக்கொண்டு நிற்கும் இறைவன் திருவருளை உள்ளும் புறமும் ஓவாது கண்டு தற்சுதந்திரம் அற்றுவாளாங்கு வதிதலாகிய திருவருணாட்டத்தில் தம் மனம் விழைவுற்றது, உன்னதமாகிய இச்சரீரத்தையும் இவ்வுலகையும் இதன்கண் உள்ள பொருள்களையும் இறைவன் உயிர்களுக்குக் கொடுத்த காரணம் யாதென ஆராயுமிடத்து அவ்வுயிர்கள் அவ்வவற்றால் அறிவு விளக்கப்பெற்று உண்மையைக் கடைப்பிடித்து இறைவனது அருள் விளையாட்டை தங்கள் உள்ளும் புறமும் ஓவாது கண்டு தற்சுதந்திரமற்று திருவருளுக்கு தம் உடல் உயிரை முற்றும் உணவாக்கி உய்தியடைந்து மீண்டு வாரா உண்மைநிலையை அடைதல் பொருட்டேயாம். திருவருள் நாட்டம் வகித்து சும்மாயிருத்தல் என்பது

செயற்கருஞ் செயலேயாம். இது பெரியோர்க்கே உரித்து ஏனையோர் சிந்தனைக்கு எட்டாதது. "விழித்திருந்து உள்ளக் கருத்தினை யிழந்தேன்" என்ற மணிவாசகப் பெருந்தகை யின் குரலொலி திரு. அழகப்பபிள்ளையவர்களை சிந்திக்கச் செய்தது.

விராட புருடனுடைய இருதய ஸ்தானமாய் விளங்குவதும் விஸ்வகர்மாவிற்கு பதஞ்சலி முனிவர் சொல்ல கட்டப் பெற்றதும் சிவகாமி அம்மையார் காண பதஞ்சலி வியாக்ரபாதாதி பக்தர்கட்காக அனவரதமும் பஞ்ச கிருத்திய பரமானந்த தாண்டவம் செய்தருளும் ஸ்ரீ நடராசப் பெருமான் சிற்சபையாம் பொற்சபையுள் திரிபுராதந்திரத்தில் சொல்லிய மூலகூடம், தேவகூடம், இரகசியகூடம் எனப் பல இரகசியங்களை உள்ளடக்கிய ஆலயம் சிதம்பரமே. சைவர்கட்குகோயில் என்றாலே சிதம்பரத்தைத்தான் குறிக்கும். அப்படி சிறப்பித்துப் பேசப்படுகிற இவ்வாலயத்து சாத்திர விதிப்படி மெய்யன் போடு தரிசனம் செய்ய ஞானம் உதிக்கும். பந்தம் நீங்கும். பூரண தத்துவம் உண்டாகும். ஆனந்தம் விளையும். ஆன்ம நிலை விளங்கும். அத்வைதமூர்த்தி சித்திக்கும். இன்னோரன்ன பல ஆற்றல்களைக் கொண்டிருப்பது தில்லை திருச்சிற்றம்பலம். அதன் மகிமையை சைவர்களேயன்றி வைணவப் பெரியாரும் போற்றி யுரைத்திருக்கின்றனர்.

ஊன்வாட வுண்ணாது உயிர்காவலிட்டு
உடலிற் பிரியா புலனைந்தும் நொந்து
தாம் வாடவாடத் தவம் செய்ய வேண்டா
தமது ஆவி இமையோர் உலகாளகிற்பீர்
கானுட மஞ்ஞைக் கணமாட மாடே
கயலாடு கானீர் பழனம் புடைபோய்
தேனூட மாடக் கொடியாடு தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே

என திருமங்கையாழ்வார் திருவாய்மொழியிலே புகழ்ந்துரைப் பார். சென்று தரிசிக்க முக்தி தரும் திருத்தலத்தின் மகிமையை அழகப்பபிள்ளை அவர்கள் மட்டும் அறியாமலில்லை. திருவருள் நாட்டத்தினுல் தெய்வ மணம் கமழும் திருத்தில்லை சென்று நடராச பெருமானைக் காணச் சென்ருர். அருளுருவாய் ஆனந்தத் தாண்டவமாடிம் ஐயனைக் கண்குளிரக் கண்டார். அருள்வானுக்கருள்வாராய் ஆயினர். ஆம்! அப்படித்தான் சொல்ல வேண்டும். ஏனெனில் தானே அவன் எதிரில் என்றும் நின்று தொழுவதாக நினைந்து பாவை விளக்கு ஒன்றினை செய்தளித்தார். அம்பலவன் சன்னதியில் என்றும் ஒளிவீச கம்பீரமாக நின்றிருக்கிறது அப் பாவை விளக்கு. ஒளி வெள்ளத்தில்தான் ஆண்டவனின் அருளாடலைக் காண வேண்டுமென எண்ணி போலும் அப்படி செய்தார் என எண்ண இடமுண்டு. யாரும் சென்று என்றும் காண இறைவனுக்கு முன்னுல் அவ்விளக்கு இருக்கிறது. அம்மட்டோ அவர்பணி நின்று விடவில்லை. சிவனேசராய் விளங்கிய அச்செல்வர் திருக்கோயிலின் உள் அமைந்து அடியார்களின் குறைகளைத் தீர்க்கும் தீர்த்தமான சிவகெங்கைரைச் சுற்றிலும் உள்ள இடத்திணுக்கு அழகான கருங்கல் தளவரிசை இட்டிருக்கிருர்.

இனி பிள்ளையவர்கள் சைவ சமயிஆயினும் வைணவக் கோயில்களுக்கும் சென்று தரிசித்து வந்திருக்கின்ருர் கடலூருக்கண்மையில் உள்ள புனித திருத்தலமாக விளங்கிவரும் திருவயிந்திரபுரமெனும் தலத்து சென்று திருமாலவனின் நின்ற திருக்கோலற் காட்சியினைக் கண்டு மகிழ்ந்திருக்கின்ருர். பிரஞ்சு அரசாங்க முக்கிய அதிகாரிகள் பலரொடு விழாக் காலங்களில் பன்முறை அங்கு சென்று வந்திருக்கின்ருர் என்ற குறிப்பை ஆனந்தரங்கம் பிள்ளை அவர்களின் குறிப்பினின்று காணலாம்.

அழகப்பப்பிள்ளை அவர்களின் பிறப்பு முதலியவை அறிதற்கு அரிதானது. எனினும் இல்லறமே நல்லறம் என்று

இடப்பிட்ட தமிழ் மறையின் இடல்புக்கேற்ப குறிப்பறிந்து ஒழுகும் தம் உத்தம மனைவியுடனே இருந்து பல்லறமும் புரிந்து வந்திருக்கின்றனர். அறந்தலைப் பிரியா அரும்பொருள் ஈட்டினர். ஆம் உலகத்தவரால் ஒரு சிறிதும் மதிக்கப்படாதது புறக்கணிக்கப்படும் கீழ் நிலை உடையாரையும் உரியாரும் பெரியாரும் இவரே என்று பொன்போல போற்றிக் கொள்ளும்படி செய்யும் பொன்னாகிய செல்வமேயன்றி வேறு சிறந்த பொருள் யாதுமில்லை. அதனை அடைதலால்தான் அறனும் இன்பமும் உளவாகும். 'நடுவணது எய்த இருதலையும் எய்தும்' என்பர் ஆன்றோர்.

> ''அறனீனும் இன்பமும் ஈனும்திறனறிந்து
> தீதின்றி வந்த பொருள்'' என்பது மறை.

ஆகவே பிள்ளையவர்களும் பெரும் பொருளீட்டினிம் அதனை தீதின்றி பெற்றோர் எனலாம். அப்படிப்பட்டபொருள் தானே பொய்யா விளக்கமாய் இருளறுக்கும் எண்ணுகின்ற இடமெல்லாம் சென்று விளக்கமுறும்.

> ''பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்

எண்ணிய தேயத்துச் சென்று'' என்ற வள்ளுவனின் வான்மறைக்கொப்ப ஈட்டினர் செலவழித்தார். ஆயினும் குலந்தழைக்க ஒரு பிள்ளையில்லாது போயினமையும் இறைவன் திருக்குறிப்பு போலும். மெய்யடியார்கள் என்றும் இறைவனடியின் கீழ் உறைவர் என்னும் உண்மையை நம்மனோர்க்குக் காட்டுவான் போலும். அன்னவரின் திருமேனி தாங்கிய கற்சிலை தன் மனைவியொடும் கூடியிருக்கும் பேறு பெற்றுள்ளமையை இன்றும் நாம் காணலாம்.

புதுவைக்கு அண்மையில் தெற்கே சுமார் ஐந்து மைல் தூரத்தில் வீராம்பட்டிணம் என்றழைக்கப்படும் வீர ராகவன்

பட்டிணம் உள்ளது. அதற்கண்மையில் காங்கேயன் தோப்பு என்னும் காக்காயந் தோப்பு இருக்கிறது. அங்கே விர்மன் கோயில் என்றும் பிரமன் கோயில் என்றும் அவ்வூர் மக்க ளாலே அழைக்கப் பெறுகின்ற ஒரு இடம் இருக்கிறது. அங்கு சுமார் 5 அடி உயரமுள்ள ஒரு புத்தர் சிலை அமர்ந்த வடி வோடு காட்சி தருகிறது. அந்த புத்தர் சிலைக்கு எதிரில் ஒரு ஆண் ஒரு பெண் ஆக இரண்டு கற்சிலைகள் சுமார் 5 அடி உயரம் உள்ளவைகளாக தனித்தனியே பக்கத்தே நிறுத்தி வைக்கப் பெற்றுள்ளது. புத்தர் சிலைக்கு மட்டில் வெயில் படாமல் ஒரு கீற்று கொட்டகை போடப்பட்டுள்ளது. அவ்வூர் மக்கள் வேடிக்கையாக இன்றும் ஒரு கதை சொல்கிறார்கள். அதாவது கடன் கொடுத்தவன் தன் மனைவியோடு வெளியே நின்று கும்பிட்ட வண்ணம் தன்கடனை கேட்டுக் கொண்டி ருக்கின்றான். ஆனால் கடன் வாங்கியவன் உள்ளே உட் கார்ந்து கொண்டிருக்கின்றான். அவனும் இன்னும் கொடுத்த பாடில்லை என்று வேடிக்கையாகச் சொல்கிறார்கள். இன்னும் சிலர் இப்படிச் சொல்கிறார்கள். அதாவது தமக்கு பிள்ளையில் லாக் குறையை இறைவனுக்குத் தெரிவிக்க தம் உருவங்களை இங்கே செதுக் வைத்து விட்டனர் என்றும் சொலகிறார்கள், இவற்றை விட ஒரு செய்தி நம்மை நகைக்க வைக்கிறது. அதே நேரத்தில் சற்று இரங்கவும் வைக்கிறது. அவ்வூரில் மழை பெய்யவில்லையானால் உடனே நின்ற வடிவந்தாங்கி இருக்கும் அவ்விரு சிலைகளையும் கீழே சாய்த்துக் குப்புற இருக்கும்படி போட்டு விடுவார்களாம். மழையும் பெய்யுமாம். பெய்த பின்னர் முன்பு போலவே மறுபடியும் தூக்கி நிமிர்த்தி நிற்க வைத்து விடுவார்களாம். இப்படி ஒருசாரார் கருத்து. அச்சிலைகளைப்பற்றி உண்மையை அறியாதாரே அங்ஙனம் செய்வர். புத்தர் சிலைக்கு முன் இருக்கின்ற அவ்விரு சிலைகளே நாம் இப்பொழுது பிணைந்து பார்க்கின்ற புதுவை பெரியார் சாவடி மணியம் அழகப்ப முதலியார் அன்னவரின் மனைவி ஆகும். நானே நேரில் சென்று அந்த சிலைகளே அதன் பீடம் வரையில் நன்கு அகழ்ந்து பார்த்து தண்ணீர் ஊற்றி சுத்தம்

செய்து பார்த்தேன். நின்ற கோலத்தில் நல்ல சிவ சின்னங்களுடன் காட்சியளிக்கும் அவ்விரு சிலைகளைக் கண்ணுற்றால் நம்மையும் அறியாது அவ்வடியவரை வணங்க வேண்டும் என்ற ஆவல் மிக்குறுகிறது. அந்த சிலைகளுக்கு அடியில் அடியில் அதாவது பீடத்தில் எதிர்புறம் புதுவை சாவடி மணியம் அழகப்ப முதலியார் என்றும், புதுவை சாவடி மணியம் அழகப்ப முதலியார் பொஞ்சாதி என்றும் செதுக்கி வைக்கப் பெற்றுள்ளது. யாவரும் எளிதில் அங்கு சென்று காணலாம். உண்மை அறியலாம். அப் பெரியார் எப்பொழுது இறந்தார் என அறிய முடியவில்லை எப்படியோ இறைவனின் 'சேவடி சேர்தல் செயலறல் தானே' என்னும் திருமூலரின் கருத்தை நினைந்து அமைதியுறுவோம்.

மிகுதலும் குறைதலும் அற்ற நிறைவான பண்புகள் அவரிடத்திருந்தன. ஒவ்வொரு செயலுக்கும் பயில்வுக்கும் அவ்வக் காலத்திலேயே பயன் வருதல் முடியாத காரியம். ஒவ்வொரு செயலும் செய்யும்போது வித்தெனவே அமையும். வித்தாயிருந்து கால முறைப்படி விளைவேற்றிப் பயனளிப்பதென்பது பட்டாங்கின் உட்கிடக்கையும் வேதத்தின் உண்மையும் ஆகும். பணி செய்து கிடத்தலின் பயனும் இதுவே.

'பெற லருந்திரு பெற்றபின் சிந்தனைப் பிரிதாகி விடும்' என்ற கம்பன் கூற்றுக்கு இலக்காகி பெறலருந்திருவினைப் பெற்ற பிள்ளையவர்கள் தம் சிந்தனை பிரிதாகி, தம் உள்ளக் கிழியில் உருவெழுதி, விழித்திருந்து உள்ளக் கருத்தினை இழக்காது இறைவனுக்கும் தொண்டு செய்து பொருளீட்டற்குதான் மேற்கொண்டொழுகிய பணியிலும் சோர்வுராது மணியம் பார்ப்பதில் மணிபாய் புதுவை புகழ் மணிகளுள்ளும் ஒரு மாமணியாய் விளங்கினர்.

'ஒன்ரு வுலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்ருது நிற்பதொன் றில்'

என்பதற்கேற்ப புகழொளியைப் பரப்பி நின்ற அப் பெரு மகனுரின் புகழ் என்றென்றும் நிலைத்து வாழ்க.

பிள்ளையவர்கள் உயிருடன் இருக்கும்போதோ அன்றி இறையருள் பெற்று இறைவனடியைச் சார்ந்த பின்னரோ அவருக்கு சிலை உருவாக்கி யிருக்கக் கூடும். அரிக்கன்மேடு என்கின்ற இடத்தில்தான் துறைமுகம் இருந்திருக்கிறது, எனவே அச் சிலைகளை வெளிநாட்டார் தமக்களித்த விருந்தை மறவாது அவர்மீது வைத்திருந்த அன்பின் காரணமாக அவர்கள் ஒருவேளை தம் நாட்டிற்கு எடுத்துச் செல்ல முயன்றிருக்கலாம். ஆனுல் ஏதோ காரணம் கருதி அவை அங்கேயே தங்கி யிருக்கலாம். ஆனுல் இனியாகிலும் புதுவை சரித்திரத்தில் நீங்கா இடம் பெற்ற அவ்வண்ணலின் திருவுருவத்தை தக்க இடத்து வைத்து காக்க அரசு முயற்சி செய்யட்டும். மக்களும் உண்மை அறியட்டும்.

மணியடிச்சா சோறு மணியபிள்ளைச் சாவடி காலம் தவருது தம் கடமையை ஆற்றிய அவ்வண்ணலின் சிலையைக் காணும் போது 'கடைக் கொண்டிருமின் திருக் குறிப்பை' என்னும் திரு மூலமந்திரமே நினைவிற்கு வருகிறது.



# நாடு. சண்முக முதலியார்

## (1845–1908)

### பால. எல்லப்பிள்ளை

---

புதுவையில்; சீரும் சிறப்புடனும் வாழ்ந்து. பேரும் புகழும் பெற்ற அரும்பெரும் அரசியல் தலைவர் நாடு சண்முக முதலியார் ஆவர்.

அவரின் தந்தை பெயர் நாடு சிதம்பரமுதலியார். தாயின் பெயர் சிவகாமி அம்மாள். இவ்விருவருக்கும் அருந்தவப் புதல்வராக 1845இல் நாடுசண்முக முதலியார் பிறந்தார். உடன் பிறந்தோர் இருந்ததாகத் தெரியவில்லை. நாட்டை ஆண்ட காரணத்தால் நாடு சண்முக முதலியார் என்றழைத்தனர்.

அந்தக் காலத்தில், College Colonial என்ற பிரஞ்சுக் கல்லூரியில் உள்ளூர் வாசிகளைச் சேர்ப்பதில்லை. வெள்ளையர்களே அக்கல்லூரியில் சேர்ந்து பிரஞ்சுமொழி பயின்றனர். அவர் ஒரு தனியார் பள்ளியிற் சேர்ந்து பிரஞ்சுமொழி பயின்றார். நல்ல தமிழ்ப் பண்பாடுடையவர். ஏட்டுக் கல்வியுடன் நாடாளும் கல்வியையும் நன்கு பயின்றார். நாடி சோதிடத்தில், சாத்திரத்தில் நல்ல பயிற்சியுடையவர்.

கம்பீரமான தோற்றமுடையவர். அவருடைய பெற்றோர் தக்க பருவத்தில், அவருக்கு இராசப்ப முதலியார் மகன்

மனோன்மணி அம்மையத் திருமணம் செய்து வைத்தனர். அவருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அது 16 வயது வரையிலிருந்து பின்பு நோய்வாய்ப்பட்டு இறந்துவிட்டதாகத் தெரிகிறது.

தன்னுடைய 25ஆவது வயதிலிருந்து மக்களுக்கு ஏற்படுகின்ற குறைகளை அரசாங்கத்தாரிடம் அறிவித்து நிறை வேற்றும் பணிபுரிந்து வந்தார். 1884இல் தற்காலிக அரசு இருந்தது. தேசிய சபைக்குப் பிரெஞ்சு குடியேற்ற நாடுகளி லிருந்து பிரதிநிதிகளை அனுப்பிவைக்க வேண்டுமென்று பிரஞ்சு அரசு சட்டம் ஒன்றை உண்டாக்கியது. பிறகு 15-3-1849இல் இந்தியாவிலுள்ள பிரஞ்சு குடியேற்ற நாடு களிலிருந்து பிரதிநிதிகளை அனுப்பிவைக்க வேண்டாமென்று மற்றொரு சட்டம் ஏற்பட்டது. முயற்சி திருவினையாக்கு மன்னோ!ஷோல்ஷேர் என்பவர் அந்த சட்டத்தை எதிர்த்து வாதாடி வெற்றிகண்டார். மூன்றாவது குடியரசு மூலம் பிரஞ்சிந்திய குடிமக்களுக்கு வழங்கிய அரசியல் சுதந்திரத் தின் கீழ் உருவாக்கப்பட்ட பொது ஆலோசனை சபையின் தேர்தலின்மூலம், 1873இல், அச்சபையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். நம் ஷண்முகனார். அச்சபையின் மூலம் அவர் ஆற்றிய தொண்டுகள் அளவற்றவை.

1880இல் தான் முதன் முதலில் புதுவையில் நகராட்சி மன்றம் ஏற்பட்டது. புதுவை நகராண்மைக் கழகம் நடத்திய தேர்தலில் நாடு சண்முக முதலியார் பங்குகொண்டார். மக்களின் நல்வாக்குகளைப் பெற்று 1887 முதல் 1892 வரை அச்சபையின் முதல் உதவித் தலைவராக இருந்து சிறப்புடன் பணியாற்றி வந்தார்.

1893இல் முக்கியஸ்தர்களின் நீதிபதியாக பிரஞ்சு அரசினரால் நாடு சண்முக முதலியார் நியமிக்கப்பட்டார். 1894இல் "Chevalier de la legion d'honneur (குதிரை

வீரன்) என்ற பிரஞ்சு நாட்டின் உயர்ந்த சிறந்த பட்டத்தைப் பெற்ற முதல் இந்தியர் நாடு ஷண்முக முதலியாரே யாவர்.

புதுவை மக்களிடம் முதலியாருக்கு இருந்த செல்வாக்கையும், இவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரஞ்சு நாட்டின் நாடாளுமன்ற உறுப்பினருக்கு, பிரஞ்சு அரசிடமிருந்த செல்வாக்கையும் கண்டு பிரஞ்சு நாட்டிலிருந்து புதுவைக்கு வந்து ஆட்சிசெய்துகொண்டிருந்த ஆளுநர் முதல் பிற பிரஞ்சு உயரதிகாரிகள் வரையில் அழுக்காறு கொண்டு முதலியாரின் செல்வாக்கைக் குறைக்கவேண்டுமென்று எண்ணி சதித்திட்டம் தீட்டினார்கள். அதற்காக அவரைப் போன்றே இன்னொருவராக சதாசிவ நாய்க்கரைத் தேர்ந்தெடுத்தனர். 1893இல் முதலியாருக்கு எதிராக சதாசிவ நாய்க்கரைக் கொண்டு ஒரு புதிய கட்சி உண்டாகியது.

1857இல் ஆளுநராக இருந்த துய்ரான் துய்பிராய் தடை விதித்திருந்த தீமிதி விழாவை 1887இல் ஆளுநராக இருந்த லான்ழியே என்பவரிடம் மக்களின் வேண்டுகோளுக்கு இணங்கி தன்னுடைய செல்வாக்கைப் பயன்படுத்தி தீமிதி மீதிருந்த தடை உத்தரவை முதலியார் நீக்கிவிட்டார்.

College Colonial பிரஞ்சுக் கல்லூரியில் பேராசிரிவர்களாகப் பணியாற்றிவந்த கிறிஸ்துவ வெள்ளைய குருமார்களை விலக்கிச் சாதாரண பேராசிரியர்களை நியமிக்குமாறு தன்விடா முயற்சியின் மூலம் முயன்று முதலியார் வெற்றிகண்டார்.

1894இல் புதுவையில் நகரசபைத் தேர்தல் நடந்தது. முதலியார் தன் ஆதரவாளர்களைத் தேர்தலில் நிறுத்தினார். அதில் முதலியாரின் ஆதரவாளர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். முதலியார் தோல்வியைக்கண்டு கலங்கவில்லை.

1894 இல் புதுவையில். Rodier என்பவர் ஆளுநராக இருந்தார். அவர் புது ஆலைக்கு அடிக்கல் நாட்டினார்.

அதனுல் அந்த ஆலேக்கு "ரோடியர் மில்" என்ற பெயர் வந்தது. "துய்பிரரன் துய்பிரான்" என்ற ஆளுநர் பெயரால் "துய்ராய் பேட்டை" என்ற ஊரை உண்டாக்கினுர்.

நல்லெண்ணம் கொண்ட Rodier ஆளுநர் ஏது காரணம் பற்றியோ முதலியார் மீது அழுக்காறு கொண்டார். பிரஞ்சு அரசு, முதலியார் மீது தொடுத்திருந்த குற்ற வழக்கிற்கு தீயூழின் காரணமாக முதலியாரின் உற்ற நண்பர்கள் இருவர் பிரஞ்சுக்காரர்களுக்குச் சாதகமாகவும் முதலியாருக்குப் பாதகமாகவும் பொய்சாட்சி சொல்ல முடிவு செய்துவிட்டனர்.

1894 இல் Rodier கவர்னர், முதலியாரைக் காவல் கைதியாக்கினுர். இதைத் தொடர்ந்து குற்ற நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்தது. அவ் வழக்கில் முதலியார் குற்றவாளி என்பதை உறுதிப்படுத்திப் பொய் சாட்சி சொல்ல அரசியில் எதிராகச் செயல்பட்டவர்களே நியமித்தனர்.

தந்தை சொத்துக்களேயும் தன் சொத்துக்களேயும் விற்ற அரசியலுக்கே செலவு செய்தார். எளிய வாழ்க்கை வாழ்ந்த முதலியார் மீதிருந்த குற்றச்சாட்டு, "பொய் குற்றச்சாட்டாகும்" என்று எதிரிகளே சாட்சியம் கூறினர், சாட்சியத்தின் படியே நீதிமன்றம் முதலியார் குற்றமற்றவர் என்று வழக்கைத் தள்ளிவிட்டு அவரை விடுதலே செய்தது. அப்போது "ஆங்குலுவான்" என்பவர் விதுவையில் ஆளுநராக இருந்தார். 1895 இல் வழக்கு முடிந்தது. அது முதல் முதலியார் அவர்கள் அரசியலிலிருந்து ஓய்வு பெற்று வாழ்ந்து வந்தார்.

1904 இல் "லெமேர்" கவர்னராக புதுவைக்கு வந்தார். 1906 இல் தன்னுடைய ஆளுநர் பதவியை விட்டு விலகி அப்போது நடந்த பிரஞ்சு நாடாளும் மன்றத் தேர்தலில் வேட்பாளராக "லெமோர்" நின்று போட்டியிட்டு வெற்றி வெற்றி கண்டார். அப்போதுதான் சில கல் நெஞ்சர்கள்

செய்நன்றியை மறந்து தமிழ் மறவர், நாடு சண்முக முதலியார் வீட்டைக் கொள்ளையிட்டனர். அப்போது அவருடைய உற்ற நண்பர்கள் முதலியாரை வளவனூருக்கு அழைத்துச் சென்று விட்டனர். வளவனூரில் உள்ள மடத்தில் ஓராண்டு காலத்திற்கு மேல் தீயவர் கண்களுக்குத் தெரியாமல் மறைந்து, ''மலர்மிசை ஏதினனை'' மனத்துள் நினைந்து என்றும் மறவாமல் வாழ்ந்து வந்தார். புதுவையில் கொடுஞ்செயல் ஓய்ந்தது.

மலை கலங்கினலும் மனம் கலங்காத மாபெரும் அரசியல் தலைவரான முதலியார் 1908 நவம்பர் மாதம் வளவனூரிலிருந்து புதுவைக்குத் திரும்பி வந்து, ஆனந்த ரங்கப்பிள்ளை வீட்டில் தங்கி இருந்தார்.

1908 டிசம்பர் மாதம் 9 ஆந் தேதி புதன்கிழமை இரவு 11-30 மணிக்கு மாரடைப்பினல் இறைவன் திருவடியை அடைந்தார்.

அவருடைய சடலம் அவருடைய வீட்டிற்குக் கொண்டு வரப்பட்டது. மறுநாள் வியாழக்கிழமை மாலை 5 மணி அளவில் ஊர்வலமாக வந்து முன்பே பிரஞ்சு அரசிடம் அநுமதி பெற்றிருந்தபடி நாடு சண்முகமுதலியாருக்குச் சொந்தமான இல்லத்தில் அடக்கம் செய்யப்பட்டது. அவர் வணங்கி வந்த நந்தீஸ்வரர் திருவடியில் பேரானந்தப் பெரு வாழ்வு எய்தினர்.

நாடு சண்முக முதலியாரின் மனேசக்தியால் அதே தெருவில் வழக்கறிஞர்கள் பழனிராஜா, தனராஜா, தனகாந்ராஜ், V. சுப்பையா, ஏ. எஸ். காங்கேயன், S. பாக்கியம், ஆனந்தரங்கப்பிள்ளை வீதியில் ந. சேதுராமன் அவர்களும் அரசியல் தலைவர்களாகத் தோன்றியுள்ளனர். மேலும் புதுவை புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் கலவைக் கல்லூரியில் பயிலும் போது தமிழாசிரியராக இருந்த மகாவித்துவான்.

சி. பங்காருபத்தர் அவர்கள் நாடு சண்முக முதலியார் இல்லத்தில்தான் 'கலைமகள் கழகம்' அமைத்து கலைமகள் என்ற திங்கள் இதழையும் வெளியிட்டு வந்தார்.

திவான் கந்தப்ப முதலியார், மாணிக்கசாமி முதலியார், நாடு சண்முக முதலியாரின் உறவினர்களேயாவர்.

முதலியார் புகழுடலை அடைந்த நாளில் வெளியான சஞ்சலச்சிந்தில் சிலவரிகள்.

விக்கிரமாதித்தன் வீம்புக்கரசு செய்தான்
வீமன் தருமராசன் நாணிப் பகைவருக்குப்
பக்குவமாய்த்தப்பி பாராண்டு புகழ்பெற்றான்.
பாபி மாபலியவன் மீறி அழிந்து போனான்.
இது வெல்லா மரசோ? நாடு சண்முகமுதலியார்.
அரசுக்கு எதிர்கட்சி நிகரோ? ஐயோ!
அரிச்சந்திரன் என்றாலும் அவன் புகழ்நிலை கொண்டான்.
அதற்குப் பின் துரியனும் ஆசைப்பெருக்கால் மாண்
டான்.
கரிபோன்ற இராவணன் கர்வத்தால் அழிந்தான்
கலியுக அரசர்கள் கோடிபேரானாலும்
இவ்வரசாமோ நாடு சண்முக முதலி பேரில்
குறை சொல்லப் போமோ! அவர்
நீதி வழுவாமல் நெறிச் சற்றும் பிசகாமல்
குறைந்த கடல்வளை திசையுள்ள புவி எல்லாம்
சாதித்து ஜயம் பெற்று சர்வ மாகிய ஜீவன்
சாமி என்றே ஜீவன் பூமி எல்லாம் தொழ
பெரும் புகழ் தாங்கி நாடு சண்முக முதலிக்கு
பேரெங்கு மாச்சு.

## கபிரியேல் மூவோ துப்ராய்

**-சு. குப்புசாமி**

---

நெடிதுயர்ந்த தோற்றம், அதற்கேற்ற பருமன், பெரிய தோள்கள், கனத்ததலை, நீண்ட மூக்கு, நீலமும் சாம்பல் நிறமும் கலந்த அடர்த்தியான புருவங்கள், கருணை நிறைந்த பார்வை, கண்ணாடி அணிந்த முகம், அழகிய உதடுகள், நீண்ட கைகள், உடலுக்குப் பொருத்தமில்லாத உடைகள், ரோஜாப்பூ நிறம் போன்ற மேனி. உரத்த தெளிவான பேச்சு, களங்கமற்ற உள்ளம். இத்தனைப் பண்புகளும் ஒருமித்து அமைந்த ஓர் உருவத்தை நமது மனக்கண்முன் நிறுத்திக் காண்போமானால், அதுவே, பேராசிரியர், ஆராய்ச்சிப் பேரறிஞர் கபிரியேல் மூவோதுப்ராய் என்ற மாமேதையின் திரு உருவாகும். அந்த உருவத்தை வரலாற்று உலகமும் புதுவை வாழ் மக்களும் என்றுமே மறக்க முடியாது!

பேராசிரியர் துப்ராய் அவர்கள் 1885 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் நாளன்று சைகோனில் பிறந்தவர். அவருடைய இளமைப் பருவம் முழுவதும் பாரீசில் கழிந்தது. 'Guade Loupe' என்ற ஊரில் அவர் உயர்கல்வி கற்றார். உயர் கல்விக்கென்று அவர் தேர்ந்தெடுத்த பாடம் இராசாயனமும் பௌதிகமும், பாரீஸ் பல்கலைக் கழகத்தில் 1908 ஆவது ஆண்டில் உயர் கல்வியில் தேர்ச்சிபெற்றார். அதனைத் தொடர்ந்து 1909 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 10 ஆம்

நாளன்று புதுச்சேரியிலுள்ள College Colonial என்னும் பெயருடன் திகழ்ந்த College Frangais என்னும் கல்வி நிறுவனத்தில் பேராசிரியராக நியமனம் பெற்றார்.

மாணவர்களுக்கு இவர் கல்வி கற்பிப்பதே ஒரு தனிச் சிறப்பு. மாணவர்களுக்குத் தண்டனை வழங்குவதென்பது இவருக்குத் தெரியாத ஒன்று. பாடங்களை எளிமையாகவும் நகைச்சுவையோடும் நடத்துவார். இவர் வகுப்பறையில் கரும்பலகை முழுதும் வரைபடங்களாகவே காட்சி தரும். மாணவர்களைப் பாடச் சொல்லுவார். அவர்களோடு அவரும் பாடுவார் J'alme Id Lorraine என்ற பாடல் அவருக்கு மிகவும் பிடித்தமானது.

இரக்க குணம், இளகிய உள்ளம், அன்பான பேச்சு இவற்றையே இவரிடம் மாணவர்கள் கண்டனர். சில மாணவர்களுக்கு எழுது பொருட்களையும் புத்தகங்களையும் வாங்கிக் கொடுப்பார். இனிப்புகள் வழங்குவார். சில நேரங் களில் பள்ளிக் கட்டணம்கூட செலுத்துவார். இச்செயல் களால் மன நிறைவுகொண்டு மகிழ்ச்சியடைந்தார். அநீதியை எதிர்ப்பவர்; நீதிக்குப் போராடும் குணம் படைத்தவர். தளராத, சோர்வற்ற உழைப்பு! ஆழ்ந்த கல்வி, நுண்ணிய ஆராய்ச்சி இவற்றிலிருந்து இவர் விலகி நின்றதே இல்லை.

இவர் நான்கு முறை இந்தியா வந்தார். 27 ஆண்டுகள் புதுச்சேரியில் வாழ்ந்தார். இக் கால கட்டத்தில் அவருடைய கண்டுபிடிப்புகள், வரலாற்றுத் துறையில் அவர் செய்த புரட்சிகரமான மாற்றங்களே அவரை உயர்ந்து நிற்கச் செய்தன. அவர் தேர்ந்தெடுத்து படித்த பாடங்கள் வேறு. ஆனால், அவர் உள்ளம் விரும்பி ஏற்றுக்கொண்ட துறை வேறு.

தொல்பொருள் ஆய்வில் அவர் நாட்டங் கொண்டார், பழமை வரலாற்றை வெளிப்படுத்துவதிலே அவர் விருப்பம்

கொண்டார். ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் புதுச்சேரியின் பல்வேறு இடங்களையும், சுற்றியுள்ள சிற்றூர்களையும் ஆராய்ந்து அறிவதிலே ஈடுபட்டார். அவருடைய பயணம் தொலைதூரம் வரை நீண்டு சென்றது, குறிப்பாகத் தக்காணம் முழுவதையும் சுற்றிப் பார்த்தார். இப்பகுதியில் இருந்த பழமைச் சின்னங்கள் எவையும் இவர் பார்வையிலிருந்து தப்பவில்லை. இதன் விளைவாகத் ''தென்னிந்திய தொல் பொருட்கள்'' என்ற அருமையான நூல் ஒன்றினை உருவாக்கினர். 1914 ஆவது ஆண்டில் அது பாரீஸ் பல்கலைக் கழகத்தால் வெளியிடப் பெற்றது.

கி. பி. 18, 19 ஆம் நூற்றுண்டுகளுக்கு முன்பு தென்னிந்தியக் கட்டடக் கலையில் ஒரு முறையான ஒழுங்கு நியதி பின்பற்றப்படவில்லை என்ற கருத்தை Sonnerat என்பவர், அக்காலத்தில் வலியுறுத்திக் கூறிவந்தார். இக்கருத்து பேராசிரியரின் உள்ளத்தை உறுத்தியது. இதன் விளைவாகத் தென்னிந்தியக் கட்டடக் கலையைப் பற்றி விரிவாகவும் முறையாகவும் ஆராய்ந்தார். சோழர் காலத்துக் கட்டடக் கலைக்கும் பல்லவர் காலத்துக் கட்டடக் கலைக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்குகிருர். ஒவ்வொரு கால கட்டத்திலும் அதன் வளர்ச்சியையும் வனப்பையும் தெளிவு படுத்தினர். தென்னிந்தியக் கட்டடக் கலைக்கென்று ஒரு தனி பாரம்பரியம் உண்டு என்பதை உலகறியச் செய்தார். தக்க ஆதாரங்களுடன் தனது கருத்தை இவர் வலியுறுத்திக் கூறினமையால் Sonneratவின் கருத்து வரலாற்று உலகில் பின்னுக்குத் தள்ளப்பட்டது.

கி. பி. 9 ஆம் நூற்றுண்டுகளுக்கு முன்பு தமிழகத்துக்கு வரலாறு இல்லை என்று கருதப்பட்ட காலம் அது. ஏறத்தாழ 400 ஆண்டுகள் தமிழகத்தைத் தொடர்ச்சியாக ஆண்டு வந்த பல்லவம் பெரு வேந்தர்களின் மரபுபற்றி அக்காலத்தில் யாரும் அறிந்திருக்கவில்லை. இவர் தமது தளராத உழைப்பின் மூலம் இருண்டுபோன தமிழ்நாட்டு வரலாற்றின் ஒரு

பகுதிக்கு ஒளி விளக்கு ஏற்றினர். Les Pallavas என்ற தமது நூலின் மூலமாக, பல்லவரின் மரபு, அன்னோர் காலத்து அரசியல் நிகழ்ச்சிகள். கலை வளர்ச்சி. சமய ஒழுகலாறு, மக்களின் பழக்க வழக்கங்கள் இவற்றையெல்லாம் வெளிப் படுத்தினர். குறிப்பாகச் சொன்னால் பல்லவர்களைப் பற்றி முதன் முதலாகச் சொன்னவர் துப்ராய் அவர்களே! இவர் புதிதாகக் கண்டுபிடித்த பல்லவர் காலத்துக் கோயில்களில் பனமலைக்கோயில் மிக முக்கியமானதாகும். அங்குள்ள ஓவியங்களைக் கண்டுபிடித்து உலகறியச் செய்தவரும் அவரே!

மாமல்லபுரத்துக் கடற்கரை ஓரத்தில் புதர்களுக்கிடையில் ஒளிந்து கொண்டிருந்த பல்லவர் காலத்துக் குகைக் கோயில், ஒற்றைக்கல் கோயில்கள், அரிய சிற்பங்கள், கல் வெட்டுகள் இவற்றை எல்லாம் மூதன்முதலாக அறிந்து சொன்னவரும் இவரே! உலகம் வியந்து நோக்குகின்ற சித்தன்னவாசல் குகைக் கோயில் ஓவியங்களும் இவருடைய கண்டுபிடிப்பே! இவைபற்றி எல்லாம் இன்றைக்கு எண்ணற்ற அறிஞர்கள் ஆராய்ந்து வருகின்றனர். இதற்கெல்லாத் காரணமாக இருந்து அடிப்படை அமைத்துத் தந்தவர் நமது பேராசிரியர் என்றால் அது மிகையாகாது. குறிப்பாகப் பனை மலை, சித்தன்னவாசல் ஓவியங்களைப்பற்றி இவர் எழுதிய பிறகுதான். பல்லவர்களின் கலை ஆற்றல் புலப்பட்டது. திராவிடக் கலையின் அழிவு நமக்கெல்லாம் பேரிழப்பு என்று நம்மை இத்துறையில் விழிப்படைய செய்தவரும் இவரே!

1915 ஆவது ஆண்டில் தக்காணத்தின் நூற்றாண்டுக் கதைகள் என்னும் நூலை வெளியிட்டார். இது தென்னிந்திய வரலாற்றுக்குத் துணை நிற்கும் சிறந்ததொரு படைப்பு. 1919 ஆவது ஆண்டில் வெளிவந்த “தக்காணத்தின் தொன்மை வரலாறு” என்னும் நூல் தென்திந்திய வரலாற்றுக்குப் புதிய பாதை ஒன்றை வகுத்துத் தந்தது. ஒரு வரலாற்று நூல் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு முன் மாதிரியாக விளங்கியது.

புதுச்சேரியின் வரலாற்றுக்கும், புதுச்சேரியைச் சேர்ந்த சிற்றூர்களின் வரலாற்றுக்கும் இவர் ஆற்றியுள்ள அரும் பணிகள் ஏராளம். புதுச்சேரிக்கு அருகில் உள்ள அரிக்க மேட்டில் அகழ்வாராய்ச்சி நடப்பதற்கு இவரே காரணமாக இருந்தார். அங்குக் கிடைத்த வண்ண வண்ண மணிகளும், சுடுமண் ஓடுகளும் பெரிய பெரிய செங்கற்களும், காசுகளும், இவருடைய உள்ளத்தை வெகுவாக கவர்ந்தன. போஷோ என்னும் பாதிரியாரோடு இவை பற்றிய ஆராய்ச்சியில் ஈடு பட்டார். அங்கிருந்த புத்தர் சிலையொன்றும் இவரைக் கிளர்ந் தெழச் செய்தது. இதன் விளைவு, 1921 ஆவது ஆண்டில் 'இந்தியாவும் உரோமர்களும்' என்னும் அருமையான நூல் ஒன்று பிறந்தது! தொடர்ந்து மார்ட்டிமர் வீலர் என்பவரின் தலைமையில் அரிக்கமேட்டு அகழ்வாராய்ச்சி நடத்தப்பெற்றது அரிக்கமேடு பற்றி மூவோ துப்ராய் அவர்கள் ஏற்கனவே சொன்ன கருத்துக்கள் இவ்வாராய்ச்சியின் மூலமாக மீண்டும் உறுதி செய்யப்பெற்றன.

புதுச்சேரிக்குப் பொதுக்கை என்ற பெருண்டு என்று முதன் முதல் சொன்னவரும் இவர்தான். இதற்கு 2000 ஆண்டுகளின் தொடர்ச்சியான வரலாறு உண்டு என்றவரும் இவர்தான்.

"புதுச்சேரி! அதுதான் வேதபுரி! மெய்ப்பொருளின் ஆய்வுக்கும் தியானத்துக்கும் அமைந்த நகரம்!"

இவை நமது புதுவையைப் பற்றி துப்ராய் அவர்கள் கூறிய வாசகங்கள். புதுச்சேரியை வேதபுரி என்று அழைப்பது நமது உள்ளத்தைச் சிலிர்க்கச் செய்கிறது. இங்கு வேத புரீச்சுரர் ஆலயம் இருந்ததையும் அது இடிக்கப்பட்டதையும் இவர்தான் வெளிப்படுத்தினார். அது தொடர்பான கல்வெட்டு களைப் பதிவு செய்து, தொல்பொருள் ஆய்வுத் துறைக்கு அனுப்பி வைத்தார்.

புதுவை ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்பு, கர்நாடகப் போரில் அவருடைய பங்கு இவற்றை எல்லாம் நமக்கு இவர்தான் புலப்படுத்தினர். புதுச்சேரியில் பிரஞ்சுக்காரர்கள் அமைத்திருந்த கோட்டையின் கிழக்கு வாயிலைக் கண்டுபிடித்தார். பாகூர், திருபுவனை, மதகடிப்பட்டு, திருவாண்டார்க் கோயில் முதலான ஊர்கள் பற்றியும் அவர் எழுதத் தவறவில்லை.

அக்காலத்தில் தொல்பொருள் ஆய்வுத் துறையிலும் வரலாற்றுத் துறையிலும் வல்லுநர்களாக விளங்கிய திரு. T. A. கோபிநாத ராவ், K. A. நீலகண்ட சாஸ்திரி, Dr. மீனுட்சி, Dr. உல்ஷ், தீக்ஷித், T. N. சுப்பர மணியம், L. D. சாமிக்கண்ணுப் பிள்ளை, T. N. இராமச்சந்திரன் போன்ற அறிஞர்களோடு இவர் இடையருது தொடர்பு கொண்டிருந்தார்.

துப்ராய் அவர்கள் திருமணம் செய்து கொள்ளப் போகிருர் என்று, வதந்தி பரவியது. இதனை உண்மை என்று நம்பிய திரு. T. N. இராமச்சந்திரன் அவர்கள், இவருக்கு வாழ்த்துச் செய்தி ஒன்றை அனுப்பினர். வாழ்த்துச் செய்தியைப் படித்த துப்ராய் "ஆமாம், நான் தொல்பொருள் ஆராய்ச்சியைத் திருமணம் செய்து கொண்டேன். புதிய புதிய கண்டு பிடிப்புகள்தாம் எனது பிள்ளைகள்!" என்று பதில் எழுதினுராம். இத்துறையில் அவருக்கிருந்த அசைக்க முடியாத ஆர்வத்தை இந்த நிகழ்ச்சி நமக்குக் கோடிட்டுக் காட்டுகிறது.

தென்னிந்தியாவில் கிடைத்த பழமையான கலைப் பொருட்களைத் தம் கைப்பொருளைச் செலவிட்டுச் சேகரித்தார். அவற்றைப் பாரீஸில் உள்ள "தூய்மே" பொருட்காட்சிச் சாலைக்கு அனுப்பி வைத்தார். இவருடைய முயற்சியால் திரட்டப்பட்ட பொருட்களைக் கொண்டு அங்கு Mnsee, de

Colonie என்னும் அரும்பொருட்காட்சியகம் உருவாகியது. இன்று பாரீஸில் உள்ள அக்காட்சியகம் 'Musee' de outremer' என்னும் பெயருடன் உள்ளது.

1945ஆம் ஆண்டில் அவர் பாரீசுக்குச் செல்லும் முன்னர் சென்னைக்குச் சென்று தன் நண்பர் K.A. நீலகண்ட சாஸ்திரி அவர்களின் இல்லத்தில் தங்கி, காப்பி அருந்தி அங்கிருந்து பம்பாய்க்குப் பயணமானார். தன் நெருங்கிய நண்பர் ஒருவர், இல்லத்தில் கடைசியாகக் காப்பி அருந்திய மனநிறைவோடு அவர் பாரீசுக்குச் சென்றார். அங்கு காய்ச்சலால் துன்புற்றார். மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார்.

அக்காலத்தில் புதுச்சேரியைச் சேர்ந்த லூர்து என்பவர், பிரான்சில் நீதிபதியாக அலுவல் பார்த்துவந்தார். அவரே துப்ராய் அவர்களை அடிக்கடி மருத்துவ மனைக்குச் சென்று பார்ப்பார். வழக்கம்போல் லூர்து அவர்கள் ஒருநாள் மருத்துவமனைக்குச் சென்றார். அன்று நமது பேராசிரியர் அவர்கள் நீதிபதியைப் பார்த்து "புதுச்சேரியைப் பற்றி ஏதாவது சொல்லுங்களேன்!" என்று கேட்டார். இப்படிக் கேட்ட சிலமணி நேரங்களில் அந்த மா மேதை வரலாற்று நாயகனின் ஆவி பிரிந்தது. 1945ஆம் ஆண்டு சூலை மாதம் 14ஆம் நாள் இந்த உலகம் ஒரு பேரறிஞனை, ஒளிவிளக்கை இழந்துவிட்டது.

புதுவையிலே அரும்பொருட் காட்சியகம் ஒன்று அமைய வேண்டும் என்று அன்றைய ஆட்சியாளருக்குத் திட்டம் வகுத்துக் கொடுத்தார். துப்ராய் இதற்காக அவர் பலவகை யிலும் போராடினார். அன்றைய அரசு அவருடைய விருப் பத்தை நிறைவேற்ற முடியவில்லை.



# செல்லான் நாயகர்

## 1844-1965

**எஸ். பெருமாள்**

---

புதுவைப் புகழ் மணிகளுள் உயர்திரு. செல்லான் நாயகரும் ஒருவராவார்.

இவர் 1844 செப்டம்பர் 9ஆம் நாள் காலாப்பட்டு கிராமத்தில் அவதரித்தார். இவருடைய தந்தை இரத்தின நாயகர். தாயார் இரிசம்மாள். உடன் பிறந்தோர் எழுவர். ஐவர் ஆண், இருவர் பெண்.

இவரை ஓர் அதிசய மனிதர் என்றே எண்ணுவர் சிலர். ஒருவர், பிறந்து வாழ்க்கையில் ஈடுபட்ட பின்பு தான் அவர் களுக்குப் பகைவர்கள் தோன்றக்கூடும். ஆனால், செல்லான் நாயகருக்கோ தான் தோன்று முன்னரே பகைமை தோன் றியது விந்தையிலும் விந்தை. மேலும் அப்பகைவர் தன்னைப் பெற்ற, தாயே என்றால் நம்பமாட்டீர்கள். இது உண்மை. அடுத்தடுத்து ஆண்பிள்ளைகளைப் பெற்ற சலிப்பாலோ, ஏழு பிள்ளைகளைப் பேணி வளர்த்ததின் களைப்பாலோ அம்மையார் இவரைக் கருவிலேயே கலைத்திடும் எண்ணங் கொண்டு மருந்தும் உட்கொண்டார். ஆனால், நினைத்தது ஒன்று நடந்தது ஒன்றாயிற்று.

'அம்மணி, உன் வயிற்றிலுதித்திருப்பவன் சாமானியன் அன்று. அவர் அறிவுலகமேதை.' உன் ஏழு பிள்ளைகளும் அவனுக்கு ஈடு இணையாக மாட்டார்கள். அவன் உத்தமன், சத்தியவான், தன்னலங்கருதாத் தியாகி. ஆகையால் உன் எண்ணத்தைக் கைவிடு, அவனையும் வாழவிடு.' என்றாள் போலும் இயற்கை அன்னை.

தாயின் எதிர்ப்பையும் மீறிச் செல்லான் நாயகர் என்ற சேய் பிறந்திட்டான். இவர் திண்ணைப்பள்ளியில் தமிழ் பயின்று பின்பு புதுவை மலைக்கண்ணு முதலியார் வீட்டில் தங்கியிருந்து, கிறிஸ்துவப்பாதிருமார்களிடம் பிரெஞ்சும், இலத்தீனும் சயின்று Bac calaureat தேர்வில் வெற்றி கண்டு, சட்டக் கலையில் தேறி மேல்நாடு சென்று Lieeneie-en-olroit தேர்வை முடித்துக்கொண்டு புதுவைத் திரும்பினார்.

புதுவை வந்த பின், 1914 ஜூலை 22-ஆம் நாள் இவரை வழக்குரைஞராக நியமனம் செய்யப்பட்டது. நான்கு ஆண்டுகள் முடியு முன்னரே 1619 டிசம்பர் முப்பதில் Gaston pierre என்ற பெரும் வழக்குரைஞரின் இடம் இவருக்கு வழங்கப்பட்ட து.

இவர் அரசியலில் பங்கு கொண்டதின் விளைவால் ஆரம் பத்தில் இவருக்குப் பெரும் இன்னல்கள் நேர்ந்தன. இவர் பிறந்த காலப்பட்டுப் பகுதியில் மீனவர்களுக்கும் இதர பொது மக்களுக்குமிடையே ஓயாத கட்சிப் பூசல்கள் ஏற்பட்டன. ஓர் இரவு, மீனவர்களின் வலைகள் சில தீக்கிரையாகின. இந்தச் சம்பவத்தைச் செல்லான் நாயகர் மீதும் அவரது கட்சிக்காரர் கள் மீதும் பழி சுமத்தப் பட்டது. தீ வைக்கும் குற்றத்திற்கு குறைந்தது 10 வருட சிறைத் தண்டனையாவது விதிக்கப் படும் ஆகையால் நாயகரின் எதிர்காலம் பாழாகிவிடுமே என்று பலர் கவலை கொண்டனர். புதுவை நீதி மன்றம், இவரைக் குற்றவாளி எனத் தீர்மானித்தது. ஆனால், பாரீஸ்

Gour ole cassation என்ற நீதிமன்றம் இவருடைய அப்பீலைத் தீர விசாரித்து, நிரபராதிகள் என இவரையும் ஏனையோரையும் விடுவித்தது.

வழக்குரைஞர் தொழின் ஆரம்ப காலத்தில் நாயகர் அவர்களுக்குப் போதிய ஒய்வு நேரம் கிடைத்ததால் நாடகங்கள் பல இயற்றினர். அவர் முத்திரையிட்ட பாடல்களில் சில இன்றும் தெருக்கூத்துகளில் 'செல்லஞ்சபாபதி கீதம் பாடியே' என்று பாடப்பட்டு வருகின்றன.

தன் மூத்த சகோதரி தாயம்மாளின் மகள் திருமதி. தனபாக்கியத்தை மணந்து, பத்மதிலகம், கமலாதேவி ஆகிய இருவரைப் பெற்றெடுத்தார்.

அரசியலில் வெற்றிபெற எல்லாவித குறுக்கு வழிகளையும் கையாளலாம் என்பர் சிலர். இதற்குத் தர்ம நூல்களையும் மேற்கோள் காட்டுவார்கள். ஆனல் காந்திமகான் வழியில் நின்ற நாயகர் போர்க்களத்திலும் நேர்மையைக் கைவிடாதவர். கடமையைச் செய், அல்லது செத்துமடி என்று அறை கூவினர்.

1928 ஆம் ஆண்டு செனத்தோர் தேர்தல் வந்தது. இவருடைய வேட்பாளர் Dr. Lemoignic புதுவைக்கு வந்துவிட்டார். என்ன விலையேனும், கொடுத்து வாக்காளர்களை வாங்கிவிடத் தீர்மானித்த எதிர்க்கட்சிக்காரர்கள் பணமூட்டையைக் கையிலேந்தி தெருத்தெருவாய்ச் சுற்றி வீடுவீடாய் நுழைந்து பணவலை வீசினர். பணம் என்ருல் பிணமும் வாய் திறக்குமாதலால் செல்லன் நாயகர் கட்சி வாக்காளர் அனைவரையும் ஆனந்தரங்கப் பிள்ளை வீட்டில் கொண்டு வந்து குவித்தனர்.

எதிர் வேட்பாளரின் ஏஜெண்டான வெள்ளையர், செல்ல நாயகரை அழைத்துக்கொண்டு வாக்காளர்களை அணுகி,

வாக்காளப் பெருமக்களே, நான் உங்களை பாரீசிலிருந்து நம்பி வந்து விட்டேன். இதோ லட்சக் கணக்கான ரூபாய் இருக்கின்றன. இவைகளைத் தேர்தல் செலவுக்கு எடுத்துக்கொண்டு என்னை ஆதரியுங்கள். என்று தன் கைகூப்பி வேண்டினார்.

நமது செல்ல நாயகர் புன்னகை பூத்த முகத்தோடு "எங்களை நாடிவருபவர்களுக்கு நாங்கள் ஆதரவு தரத்தான் வேண்டும். இது தமிழனின் பண்புங்கூட." ஆனால் நாங்கள் டாக்டர் Lemoignie க்கு வாக்குக் கொடுத்து விட்டோம். அவரும் எங்களை நம்பி புதுவைக்கு வந்து ஒரு வாரகாலமாய்க் காத்துக் கொண்டிருக்கிறார். "என்று சொன்னதும், வந்தவர் தன்கடையை கட்டிக்கொண்டு வெளியேறினார். செல்லம் நாயகர் தேர்தல் செலவுக்காக அப்போது தன்னிடம் பணம் எதுவும் வைத்திருக்கவில்லை; தன் நண்பர்களிடம் அவர் அதற்காக கை நீட்டவும் இல்லை. இரகசியமாகத் தன் மனைவியின் காசு மாலையை அடகு வைத்து அதைக்கொண்டு செலவுகளை மேற்கொண்டார். லட்சத்தை அலட்சியம் செய்தாரே என்று அவரை வாக்காளர்கள், வாயாரப் புகழ்ந்தனர்,

நாயகர் லஞ்சம் என்பதை கொஞ்சமேனும் விரும்பார். ஒரு பள்ளி வாசல் விவகாரத்தில் இவர் மக்கள் பக்கம் வாதாடினார். இதற்கு எதிராக கைதேர்ந்த விஷமி ஒருவர் தோன்றினார். புலவு சோறு வெளிப்பாத்திரம், பவுன் முதலியவைகளைக் கொடுத்து அதிகார வர்க்கத்திடம் சலுகை பெறும் வழி தெரிந்தவன், கவர்னரிடம் அணுகி தன் விஷம வேலைகளை மேற்கொண்டான், இதை அறிந்த நாயகர் கவர்னரை அணுகி விஷயங்களை விளக்கிக் கூறினார். காரியம் கை கூடாமல் போகவே, இந்த விஷமி சாட்சிக்காரன் காலில் விழுவதை விட சண்டைக்காரன் காலில் விழுவதே மேல் என்று எண்ணி நாயகரின் தம்பி ஏகநாத நாயகரை அணுகினான்.

பகல் மணி 12-30 நாயகர் உணவருந்த உட்கார்ந்தார். ஏகநாத நாயகர் அண்ணனை நெருங்கி சற்றுப் பின் நின்று,

தலையைச் சொறிந்த வண்ணம் "பள்ளி வாசல்" என ஆரம்பித்தார். நாயகர் உடனே விஷயத்தைப் புரிந்து கொண்டு "உன்னிடமும் வந்துவிட்டானா? ஏகநாது என் வாழ்வு உன்னால் கதைபட்டு விடும். இனி இந்த வீட்டில் உணவருந்த மாட்டேன்" என்று சீறி எழுந்து, கடுகடுத்த முகத்துடன் தன் அறைக்குள் போய் விட்டார். வெளியே ஓடிப்போய் திரும்பிவந்த ஏகநாதன் காலில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து மன்னிப்புக்கோரி அவரைச் சமாதானப்படுத்தினார்.

1927 ஆம் ஆண்டில் பிரெஞ்சு நாட்டில் விலைவாசிகள் ஒன்றுக்குப்பத்தாக உயர்ந்து போயின. அரசாங்கத்தினர் சம்பளப்பட்டியலை ஒன்றுக்குப் பத்தாக உயர்த்தினர். இது அந்த நாட்டிற்குப் பொருந்தும், ஆனால், தம் புதுவையில் ரூபாயின் மதிப்பு ஏற்றத்தில் இருந்ததால் சம்பள உயர்வுக்கு அவசியமில்லாமற்போயிற்று. ஆயினும் வெள்ளை உத்தியோகஸ்தர்கள் புதிய சம்பளத்தைப் பழைய நாணய மாற்று விகிதத்தில் தர வேண்டுமென்று அடம்பிடித்தனர். ஆசைக்கு அளவில்லை அல்லவா?

இவர்கள் விருப்பப்படிச் செய்ய ஒருவித காரணமுமில்லை. ஆயிரம்ரூபாய் மாதச் சம்பளம் பெற்றவன் திடீரென பத்தாயிரம் ரூபாய் பெறுவான். இது பொதுப் பணத்தைக் கொள்ளை அடிப்பது. இதன் விளைவால் கஜானா காலியாகும். புதுவரி போட நேரும். இதைப் பற்றி விவாதம் சட்ட சபையில் நடந்த போது சர்க்கார் பொதுச் செயலாளர் பட்டவர்த்தனமாகச் சொன்னார். "சம்பள உயர்வு எங்கள் உயிர்ப் பிரச்னை. இதில் கையை வைக்க நேர்ந்தால் விபரீதமாகும்" என அச்சுறுத்தினார். நியாயத்திற்கு அடிமையாவோம். ஆனால், சலசலப்பைக் கண்டு விலவிலத்துப்போகோம் என கர்ஜித்தார் செல்லம் நாயகர்.

இப்த வேளையில் கூத்தாடிபாட்டு கொண்டாட்டமென கெப்ளே கட்சியினர் மக்களுக்குத் துரோகம் இழைக்கும்

வகையில் அரசாங்கம் கேட்பது சரியென வாதாடினர். மக்கள் முடிவு வெற்றி பெற்றது, இம்மட்டோடு நிற்கவில்லை, நாயகரின் பொதுச் சேவை.

வெள்ளையனை வெளியேற்றிய தேசீயப் போராட்டமும் இவர் தலைமையில் வெற்றிதரமாய் நடந்து வரும்போது இவரை ஒழித்து விட்டால், தேசீயம் ஒழிந்து விடும், எனத் தப்புக் கணக்கிட்ட காலாடி ஒருவன் மாலைப்போது, மணி சுமார் 7.00 இருக்கலாம். இருள் மறைவில் நாயகர் வீடேறி ரிவால்வரால் அவரை மும்முறை சுட்டான். இருகுண்டுகள் தவறிப் போயின. மூன்ருவது குண்டு அவர் வலது தொடை யிற் புகுந்து எலும்பில் சிக்கிக் கொண்டது. உள்ளூர் மருத்து வத்தில் நம்பிக்கை இழந்த நாயகர் சென்னை விரைந்தார். சிகிச்சை முடிந்தவுடன் வீடு திரும்பவில்லை. மஞ்சகுப்பம் என்ற கிராமத்தில் குடியேறி 1954 ஆண்டு நாடு விடுதலை பெற்ற பின் வீடுவந்து சேர்ந்தார்.

அரசியல் வாழ்விலே நாயகர் தொல்லை மிகவுற்ருர் எனினும், அறிவுலகிலே பேரும் புகழும் பெற்ருர். இவர் காலத்தில் இவருக்குச் சமமான சட்ட நிபுணர் இருந்ததில்லை. ஆகையினுல், இவன் பன்முறை வழக்குரைஞர் சங்கத்தின் தலைவராஞர். அரசாங்கச் சட்டத்தில் இவருக்கு ஒப்பாரு மில்லை, மிக்காரும் இருந்ததில்லை. காலாடிக்கும் பல் இவர் படி யேறியதில்லை. ஒரு கொள்ளைக் கூட்டத் தலைவன் ஒருநாள் இவருடைய நட்பைப் பெறலாம் என்று கனவு கண்டு பழ வகைகள், மிட்டாய் தினுசுகள். பூமாலைகள் ஏற்றிக்கொண்டு, தன் குழாத்துடன் மேளவாத்தியம் முழங்க இவரைக் காண வந்தான். அந்தத் தலைவனை நோக்கி இவர், "எத்தனை குடும்பத்தின் விளக்கை அணைத்து இந்த ஆடம்பரச் செலவு செய்தாய் சொல். இன்றேல், இதற்குப் பணம் எப்படிஉனக்கு வந்ததென்று போலீஸில் விசாரணை நடத்தச்சொல்வேன், போய் விடு" என்ருர். மறுநாள் காலை இவருடைய நண்பர் ஒருவர், புகழ்பெற்ற வழக்குரைஞர், "அண்ணேன் நேற்று

நீங்கள் நடந்துகொண்டது மிகத்தவறு'' என்ருர். தம்பி, என் மேல் கோபியாதே. நான் காலாப்பட்டான்தானே எனக்கு நல்லது கெட்டது தெரியாதே. ஆனல் அடியாட்களின் தய வால் கொடி கட்டி வாழலாம் என்று நான் என்றும் நினைத்த தில்லையென்று கண்டிக்கும் முறையில் கிண்டலாக விடை யளித்தார்.

இவர் சட்டசபைத் தலைவராய் இருந்த போது, ஒருவருக் கும் ஒருவித சிபாரிசும் செய்யவில்லையே ஏன் என்று வினவிய தற்கு அவர், ''சிபாரிசு செய்யக் கூடாதென்று நான் ஒரு நாளும் எண்ணியதில்லை. நான் வாய் திறந்து சிபாரிசு செய் என்று கேட்டால் அதை எந்த உத்தியோகஸ்தனும் மறுத் திருக்கமாட்டான். ஆனல், இச்சிறு உதவியைச் செய்துவிட்டு என் நட்பைப் பெற்று விட்டதாக எண்ணி பொதுப்பணத்தில் தைரியமாய்க் கையை வைப்பான். இதன்னியில் பொதுப் பணத்திற்கு விரையம் ஏற்படும் வகையில் என்னிடம் சிபாரிசு கேட்டான். இதற்கஞ்சியே நான் செயலற்றுப் போனேன். இது காரணம் பற்றியே என் மகன், என் அண்ணன் மகன் புருஷோத்தமனை அவன் ஆயுள் பரியந்தம் ஆலை வேலை செய்யும்படி விட்டேனே ஒழிய அவனுக்கு ஓர் அரசாங்க உத்தியோகம் வாங்கித்தரவில்லை இப்படிச் செய்தது சரியோ தவருே மக்கள் மன்றம் தான் தீர்ப்புக் கூற வேண்டும்'' என்று என்று கண் கலங்கினர். இத்தகைய நேர்மை பூண்ட தலைவனை புதுவை கண்டதுமில்லை. காணப்போதுமில்லை.

வயது தளர்ந்தது, உடல் மெலிந்தது நடமாட்டமும் குறைந்தது பார்வையும் மங்கியது. இந்த நிலையிலுங்கூடத் தான் அறிவுரையைக் கேட்க வரும்போது மக்களுக்கும், என் வழக்குரைஞர்களுக்கும் கூடத் திருப்திகரமான விடையளித்து வந்தார்.

1965ஆம் ஆண்டு ஆகஸ்ட் 11ஆம் நாள் நீண்ட நேரம் வரையில் ஆதித்தன் உதிக்கவில்லை. மணி 11-30 இருக்கும்; நன்ருய்ப் பேசியபின் சற்றுக் கண் அயர்ந்தார், எனப் பக்கத்து அறைக்கு நகர்ந்தோம். அப்பா! என்று தன் மூத்த மகன் அலறியதும் நாயகரை நமன் வந்தழைத்துப் போனுன் என்று தெரிய வந்தது. தியாகத்திரு விளக்குத் திடீரென அணேந்தது. அறிவுலக மேதை அடியோடு சாய்ந்தான். ஈடு இணையற்றவர் வாழ்வில் இருள் வந்து சூழ்ந்தது.



## ஃப்ரோ. சவுரிப்பிள்ளை

### எம். நாகராஜன்

---

புதுவைத் தேவியாம் புதுமைத் தேவிக்கு முடிசூட்டி மகிழ்ந்தான் காலத்தச்சன். அம்முடியில் பணிகள் பதித்தான் பாரதி, பாரதிதாசன் முதலான கவி மணிகள், பல கலை மணிகள், தியாகமணிகள் முதலாக மல வரிசையாகப் பதித்தான். அவை புகழொளி வீசிப் பொலிகின்றன. அத் தியாக மணிகளுள் வீரமணியாக ஒளிதரும் ஒரு மணி சவுரிப் பிள்ளை. இந்த மணியில் திளைத்துப் பயன்பெற்ற யான், அம்மணி பற்றிச் சில சொல்ல விழைகின்றேன்.

தியாகச் செம்மல்கள் பலரை ஈன்றெடுத்த புதுவை மாநிலத்தில், காரையம் பகுதியில் வாழ்ந்த அழகியநாதப் பிள்ளைக்கும் நல்லம்மாள் என்ற நங்கைக்கும் 1886-ம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 15-ம் நாள் அரும் புதல்வனாகத் தோன்றினார் சவுரிப்பிள்ளை. புனித தேத்தரவு அன்னையின் நாளாகிய அன்று, அன்னையின் ஊர்வலம் தமது இல்லத்தெதிரில் வந்த போது பிறந்த காரணத்தால் "தேத்தரவுசாமி" என்ற பெயர் சூட்டி, குழந்தையின் வாழ்வில் எதிர்கால ஒளியை அன்றே யூகித்து அறிந்த பெற்றோர் பெருமகிழ் வெய்தினர். ஆனால் அவரது பதிவுப் பெயர் ஜோசப் சவுரி என்பதாகும்.

தொடக்கக் கல்வியைக் காரைக்காலில் அருள்திரு. பி. மரி என்ற பாதிரியின் தலைமையில் இயங்கி வந்த பெத்தி

செமினேர் பள்ளியில் முடித்தார். புதுவையில் "கொலோனி யால் பொந்திச் சேரியன்" ஒன்ற கல்லூரியில் பக்கலோரி யாவில் தேர்வு பெற்ருர். பின்னர் பிரான்சுக்குச் சென்று சட்டக் கல்லூரியில் பயின்று 1913-ம் ஆண்டு "Licenci'e en droit" என்ற பட்டத்தைப் பெற்ருர்.

பேச்சில் வீரமும், செயற்கரிய செயல்புரியும் ஊக்கமும் இளமையிலேயே பெற்றிருந்த இவர் தனது தாயகம் அந்நிய ருக்கு அடிமைப் பட்டுக்கிடந்த அவல நிலேகண்டு, நாட்டின் விடுதலேக்குத் தொண்டு புரிய உறுதி பூண்டார். எனவே பள்ளி மாணவராக இருந்தபோதே வங்கப் புரட்சி இயக்கப் பத்திரிகைகளேப் பெற்று படிக்கத் தொடங்கினுர்.

இதன் காரணமாக, இவர் 1913-ம் ஆண்டிலேயே சட்டத்துறையில் தேர்வு பெற்றிருந்தும், அக்காலத்தில் ஆளுநராக இருந்த பிரஞ்சு வெள்ளேயர், காரைக்காலில் வழக்குரைஞராக இவரைப் பதிவு செய்ய மறுத்தார். இடை யருத முயற்சிக்குப் பின்னர் 1916-ம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 9-ம் நாள், அதாவது மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர், பதிவு பெற்று வெற்றி கண்டார். அவ்வமயம் முதல் உலகப் போர் நடந்து கொண்டிருந்தது. இவரது குடும்பம் பிரஞ்சுப் பிரஜையெனப் பதிவு பெற்ற குடும்பமாகையால், இவரைப் போர்ச் சேவைக்குப் பிரஞ்சு அரசாங்கம் அழைத்தது. அதனுல், பின்னர் பல நன்மைகள் கிட்டுமெனத் தெரிந்தும், நாட்டுப் பற்றின் காரணமாக அவ்வழைப்பைத் துச்சமெனத் தூக்கியெறிந்து துணிவுடன் மறுத்துவிட்டார்.

அக்காலத்தில் புதுவையில் பிற வழக்குரைஞர்கள் அஞ்சு மாறு வழக்குரைத்து வெற்றிக் கொடி நாட்டியவர் "ஞானத் தியாகு" என்ற பேரறிஞர். அன்னுரைத் தாம் வழக்குரை ஞராகப் பதிவுபெற்ற முதல் வழக்கிலேயே காரைக்கால் நீதி மன்றத்தில் வாதிட்டு வென்று தொழிலில் மாபெரும் வெற்றிக் கொடி நாட்டினுர். வழக்குரைஞராக 47 ஆண்டுகள் பணி

புரிந்தார். வழக்கின் ஆதாரத்தை அலசிப்பார்க்கும் நுண்ணறிவு, கொண்டதை முடித்துக்காட்டும் ஆற்றல், நேர்மை, அஞ்சாநெஞ்சம், சீரிய ஒழுக்கம், வாதத்திறமை, ஆகியவற்றை முழுமையாகப் பெற்ற இவர்பால் கட்சிக்காரர்களுக்கும் அசையாத நம்பிக்கை உண்டானதில் வியப்பில்லை.

ஒரு சமயம் சக வழக்குரைஞரான தெலப்புலோரை பிரஞ்சு நீதிபதி செந்தோல் நீதிமன்றத்தில் தரக்குறைவாகப் பேசிவிட்ட காரணத்தால் வீறுடன் எழுச்சி கொண்டு போராடி, ஒரு மாத காலம் வரையில் நீதிமன்றம் செயல்படாமல் ஸ்தம்பிக்கச் செய்து, அந்த நீதிபதியைப் புதுவைக்கு மாற்றும்படிச் செய்து வழக்குரைஞர்களின் தன்மானத்தைக் காத்த செயல் வீரம், நியாயத்திற்குப் போராடும் அவரது நல்லுள்ளத்தைக் காட்டுகிறது.

இனி அரசியல் நெறிக்கண் கொண்டு அன்னாரைக் காண்போம். இளமையிலேயே உள்ளத்தில் விதைக்கப்பட்ட விடுதலை வித்து அவர் வளர வளர கிளைத்துக் வளரத் தொடங்கியது. மேல்நாட்டு மக்களை இந்தியக் கொடிக்கு வணக்கம் செய்யுமாறு செய்த வீரமாதர் திலகம் 'காமாவும்' புரட்சித் தலைவர் 'கிருஷ்ணவர்மாவும்' பாரிஸ் நகரில் இருந்துகொண்டு இந்திய விடுதலைக்குத் தொண்டு செய்தபோது, சட்டக்கல்வி பயிலச் சென்ற சவுரிப்பிள்ளை அவர்களின் நாட்டுப்பற்றும் விடுதலை ஆர்வமும் அவர்களைக் கவர்ந்தது. எனவே புரட்சி இயக்கத்திற்கு இன்றியமையாத பொருள்களை ஒப்படைக்கத் தகுந்த தலைமகன் இவரே எனக் கொண்டு இவரிடம் ஒப்படைத்தனர்.

மேலும் தாம் படிக்கும் காலத்திலேயே மதன்லால் திங்கிரா என்ற தேசியப்புரட்சி வீரரின் படத்தைத் தன் அறையில் தன் கண்பார்வையில் மாட்டி வைத்திருந்தார் எனின். இவரை பிரஞ்சிந்தியாவில் முதல் தேசியவாதி எனக் கூறல் மிகையாகாதல்லவா? ஜாலியன் வாலாபாத்தில் இந்திய

மக்களைக் கொன்று குவித்த ஜெனரல் டையர் என்பவரை லண்டனில் சுட்டுக் கொன்றவர் மதன் திங்கிரா என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இந்தியப் பெருநாட்டில் ஆங்கிலேயர் சட்டரீதியில் அடக்குமுறைக் கொடுமைகளைப் புரிந்தபோது, புதுவைக்கு வந்த அரவிந்தர், வ. வே. சு. ஐயர், பாரதியார் போன்ற தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அஞ்சா நெஞ்சத்தோடு விடுதலைப் புரட்சி வீரர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்து வந்தார். இத்தகைய வீரத்தொண்டுகளைக் கேள்வியுற்ற திருமலாச்சாரி போன்ற பெரியவர்கள் காரை வந்து சந்திக்கும் பெருமையையும் பெற்றார். அரவிந்தரை வங்கநாட்டு உடையாகிய வேட்டி அணிந்து படமெடுக்கத் தூண்டியவர்களில் இவரும் ஒருவர். அப்படம் இன்றும் அரவிந்தர் ஆசிரமத்தில் இருப்பதைக் காணலாம்.

பிரஞ்சிந்தியாவில் பிரஞ்சு வெள்ளையரும் ரெனோன்சான் என்ற பிரஞ்சுப் பிரஜைகளும் அக்காலத்தில் மிகச் சிறுமான்மையினர். பிரஞ்சிந்தியரோ பெரும்பான்மையினர். சட்டசபையிலும், நகரசபையிலும், இம்முப்பிரிவினருக்கும் சம எண்ணிக்கை உறுப்பினர்கள் பிரதிநிதித்துவம் கொடுத்து தேர்தல் நடத்தித் தந்திரமாக பிரஞ்சுக்காரர்களே ஆட்சி புரிந்து வந்தனர். சவுரிப்பிள்ளை இந்தத் தந்திரத்தை உணர்ந்து பெரும்பான்மையோருக்கு பிரதிநிதித்துவம் கிடைக்க வேண்டி அம்முப்பிரிவு வாக்குமுறையை ஒழிக்கவும் மக்களுக்குத் தேசிய உணர்வைப் பெருக்கவும் ''குடியரசு'' என்ற பெயரில் பத்திரிக்கை ஒன்றை வையாந்த பழனூர் போன்ற அறிஞர் பலரின் கூட்டோடு 1924-ம் ஆண்டிலேயே தொடங்கி வெற்றியும் கண்டார். 1919-ம் ஆண்டிலேயே ''திருப்பணிச்சேனை'' என்ற இயக்கத்தை உருவாக்கி அதில் பல தொண்டர்களைச் சேர்த்து, இப்பகுதியில் அரசியல் உணர்ச்சிக்கும், தேசியப்பற்றுக்கும் வித்திட்டார். இவ்வாறு,

உள்நாட்டு அரசியலில் ஈடுபட்ட இலட்சியவாதியாய், பட்டம் பதவிபெறும் ஆசையற்ற துறவியாய், அரசியல் நேர்மை, ஒழுங்கு, கட்டுப்பாடு கொண்டு 30 ஆண்டு காலம் எதிர்க் கட்சித் தலைவராய் பிரஞ்சு ஆட்சியில் பணிபுரிந்து வந்தார். பிரஞ்சு அரசு, பட்டம், பதவி, பல கொடுப்பதாக ஆசை காட்டிய காலத்தும், பின்பு அவரது வீட்டைச் சூறையாடுதல் முதலான கொடுமைகள் புரிந்த காலத்தும், இலட்சியத்துக் காகவே வாழ்ந்து காட்டிய இலட்சியவாதியாவார்.

காந்தியடிகள் முதன் முறையாக தென்னிந்திய சுற்றுப் பயணம் வந்த சமயம், தென்னுப்பிரிக்காவில் தன்னுடன் வெள்ளையரை எதிர்த்துப் போராடி உயிர் நீத்த வள்ளியம்மை பிறந்த ஊராகிய தில்லையாடிக்கு வருகை தந்தபோது சவுரிப் பிள்ளையின் தேசியத் தொண்டினை அறிந்து, தன் கைப்படக் கடிதம் எழுதித் தன்னை வந்து காணுமாறு செய்தார் மகாத்மா காந்தியடிகளும் பாராட்டும் அரசியல் தலைவர் நம்மிடையே இருந்தார் என்பது நமக்கெல்லாம் பெருமை தருவ தொன் றல்லவா?

இந்தியப் பெருநிலம் 1947-ல் விடுதலை பெற்றதை அறிந்து நம் தலைவர், பிரஞ்சிந்திய பகுதிகளும் விடுதலை பெற வேண்டு மென்ற உணர்ச்சி பொங்க, அதற்கெனச் செயல்படத் தொடங்கினர். 1948-ம் ஆண்டு பிரஞ்சு அரசு மக்களின் வாக்கெடுப்பு மூலம் (Municipal Referendum) அவர்களின் கருத்தையறிந்து, இந்திய அரசிடம் இப்பகுதியை ஒப்படைப் பதாகக் கூறி, தனது சூழ்ச்சியால் அதனைக் கேலிக்கூத்தாக் கியது. பின்பு, தேசியவாதிகளைத் துன்புறுத்தித் தேசிய சக்தியை இப்பகுதியில் சீர்குலைத்தது. இதனல் வேதனை யடைந்த சவுரிப்பிள்ளை, இந்திய தேசிய காங்கிரசின் அயல் நாட்டுக் காரியதரிசி டாக்டர் என். வி. ராஜ்குமார் அவர்களை அழைத்து அவர் ஆலோசனைப்படி 1949-ல் சிதறுண்ட தேசிய சக்திகளை ஒன்று திரட்டி "காரைக்கால் இணைப்பு

காங்கிரஸ்'' என்ற ஸ்தாபனத்தை இங்கு உருவாக்கினர். அதன் தலைவராக சவுரிப்பிள்ளை தேர்ந்தெடுக்கப்பட்டார். இப்பகுதி 1954-ல் விடுதலை பெறும் வரையில் இந்த ஸ்தாபனத்தின் செயலாளராகப் பணிபுரியும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இக்காலங்களில் சவுரிப்பிள்ளையுடன் மிக நெருங்கிய நிலையில் நான் இருந்ததால், அவர் விடுதலைக்காக வகுத்துத் தந்த நெறிகளையும் வருகின்ற பகையை வெல்லும் ஆற்றலையும், வெற்றி வாய்ப்பினை அடைவதற்கு அவர் எடுத்துக்கொண்ட பெரு முயற்சியையும் நன்கு அறியலானேன். அவற்றை முழுவதும் கூறின் மிகப்பெருகும். இத்துறையில் அவருக்கிணை அவரே எனக்கூறுவதுதான் பொருந்தும் 1954-ல் விடுதலை பெற்றதைக் கண்டு பூரிப்புக்கொண்ட அன்னார், தன் கடமையை முடித்துவிட்ட நிலையில், பதவிக்கு ஆசை கொள்ளாமல் அரசியலிலிருந்து விலகிவிட்ட பெருந்தன்மை வேறு எவருக்கும் கிட்டாது. இத்தகைய பெரியார் கடமை முடித்துவிட்ட பெருமையோடு, இம் மண்ணுலகம் வாழ்வைவிட்டு 30-1-1963-ல் விண்ணுலகம் நாடிச் சென்றார். நமது தேசத் தந்தை காந்தியடிகளும் இந்நாளில் தான் விண்ணிலகெய்தினர் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. நாம் இனி லாயர் சவுரிப்பிள்ளை காட்டிய ஒளிநெறி பற்றி, இருளகன்று, நல்வாழ்வு நோக்கி நடைபயில்வோமாக.



# அரும்பாத்த விநாயக பரசுராமப் பிள்ளை

புலவர் **ந. வடிவேலன்**, புதுவை.

---

புதுவை என்னும் புகழார்ந்த தாமரை மலரின் ஓரிதழாக இருப்பது இன்றைய செயின்ட் தெரேஸ் வீதி, ஆனால் இது அன்று அரும்பாத்த பரசுராமப்பிள்ளை வீதியாக இருந்தது. அவரைப் பற்றி இங்குக் காண்போம்.

நல்லின்பம் நாளும் செழித்தோங்கும் புதுவையம்பதி காலத்தால் பழமை வாய்ந்தது. புதுக்கே என்ற பழம் பெயர் கொண்டது. வீரன் வெளியன், வீரன் தித்தன் என்ற ஆற்றல்சால் புலவர் மணிகளைத் தன்னகத்தே கொண்டு சிறந்தது. அரிக்கன்மேடு என்னுமிடத்தில் செய்யப்பெற்ற அகழ்வாராய்ச்சியினுல் சங்ககாலந்தொட்டே நவாப் புகழ் கொண்டதாய் விளங்கி வருவது புதுவை என்பது விளங்கும்.

இப்புதுவையம்பதி காலந்தோறும் பற்பல சான்ருேர்களை ஈன்று உலகிற்களித்துள்ளது ஆனந்த ரங்கப்பிள்ளை, சின்ன சுப்புராயப்பிள்ளை, தண்டு ராமலிங்கம் பிள்ளை, இராசப்பா, பரசுராமப்பிள்ளை போன்ற புதுவைப் புகழ்மணிகளை ஈன்றெடுத்த பெருமைக்குரியது. புதுவை ஈன்ற புகழ்மணிகளில் ஒரு மாமணியாம் திருமாமணியாய் பிரெஞ்சுக் கவர்னருக்குப் பெருந்துணையாய் விளங்கியவர் பாரேத்தும் பரசுராமப்பிள்ளை என்பார்.

பெயர் விளக்கம்: புதுவை—விழுப்புரம் நெடுஞ்சாலையில் புதுவைக்கு மேற்கே 7 கி.மீட்டர் தொலைவில் அரும்பாத்தபுரம் என்ற ஊர் உள்ளது. அவ்வூர் இன்றைக்கு நானூற்றுண்டுக்கும் மேலான பழைமை உடையது. அவ்வூருக்குப் பெயர் வந்த காரணம் மிகச் சிறப்பானதாகும். ‘‘அர்மே பத்தேர்’’ என்ற இரண்டு பிரெஞ்சுச் சொற்கள் மருவி அரும்பாத்த என்று ஆயிற்று.

அர்மே-ஆர்மி, படை என்ருகும். பத்தேர் என்ற சொல்லுக்கு கற்றூண் என்பது. படைக்குத் தூண் என்பது இதன் பொருள். இச்சொற்களே ‘‘அரும்பாத்த’’ என்ற தமிழ் வடிவம் பெற்றது. அவ்வூரில் பரசுராமப்பிள்ளையின் முன்னேர் சிறப்புடன் வாழ்ந்து வந்தனர், அவர்கள் பிரெஞ்சு அதிகாரி களுடன் தொடர்பு கொண்டு புகழுடன் வாழ்ந்தனர்.

பிரஞ்சுப் படையினர்க்குப் படையுதவியும் பொரு ளுதவியும் தேவைப்பட்டது. அவ்வப்பொழுது பெரும் பொருளை நமது பரசுராமப்பிள்ளை குடும்பத்தினர் கொடுத் திருக்கிருர்கள். 1772-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் துய்ஷேஸ் மெகிராம்மோ என்ற பெயர் கொண்ட சிறு கப்பலில் ஒரு பெருந்தொகையை இவர் குடும்பத்தினர் கொடுத்தனுப்பினர். இவ்வாறு பலமுறை பொருளைத் தந்து பிரஞ்சுப் படைக்குப் பாதுகாவலாகச் சிறந்த தூண் போன்று விளங்கியதால் அக்குடியை அரும்பாந்த குடியினர் என்று வழங்கினர். பின்னுல் வந்தவர்களில் பரசுராமப்பிள்ளை என்பவர் சிறந்தோங்கி விளங்கினுர். ஆதலால் இவரை அரும்பாத்தை பிள்ளை என்றே அழைத்தனர், அவர் பெயரால் அவர் வாழ்ந்த ஊர் அரும்பாத்தபுரம் என்று நிலைபெற லாயிற்று.

அந்தவூர் இவர் குடிப்பெயரால் வழங்குவது தான் என்பதை மெய்ப்பிக்கும் வகையில் புதுவைக்கு 6.8 கி.மீட்டர்

தொலைவில் இருந்து 7.4 கி.மீட்டர் வரையுள்ள நெடுஞ்சாலைப் பகுதியை அங்குள்ள மாவடை மரவடைகளை அனுபவித்துக் கொள்ள உரிமைச் சாசனம் வழங்கப்பெற்றுள்ளது. இன்றளவும் அவர் பரம்பரையினர் அனுபவத்தில் இருந்து வருகிறது.

1772-ல் அரசுக்குக் கொடுத்த பணத்தை அரும்பாத்தை பிள்ளை திரும்பக் கேட்டபொழுது பிரஞ்சு அரசால் கொடுக்க முடியவில்லை. அப்பணம் பலரிடம் கடனாக வாங்கித் தந்தது, ஆதலால் கடன்காரர்கள் அரும்பாத்தை பிள்ளை சொத்தை ஏலத்திற்குக் கொண்டு வந்தனர். சில சொத்துக்கள் ஏலத்திற்குச் சென்றன. இவர் அரசிடம் முறையிட்டதின் பேரில் அரும்பாத்தைப் பிள்ளையிடம் உள்ள மீதி சொத்துக்களை ஏலம் போடக்கூடாது என்று ஆணை பிறப்பித்ததோடன்றி அச் சொத்துக்களை அரசே மானியமாக வழங்கியுள்ளதாக அறிவித்தது. 1789-ம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 29-ம் நாள் இட்டு அனுப்பிய உத்தரவு அக்குடும்பத்தினரிடம் உள்ளது.

1815—16-ல் கடற்படை, தரைப்படையினர்க்கு உணவும் உடையும் வழங்குவதற்கு அரும்பாத்தைப் பிள்ளை ஒப்பந்தம் செய்து கொண்டார். அதன்படியே பொருள்களை அவர்கள் வேண்டும்பொழுது தடையின்றி உதவினார். இந்த உதவியைப் பாராட்டுப் வகையில் 1817-ம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் முதல் தேதி "ஆந்திரே முனியேன் கோந்து துய்ப்பி" என்ற கவர்னர் செயின்ட் லூயி கோட்டையின் சின்னம் பொறித்த தங்கப்பூண் பொருந்திய ஒரு கோலும், இவரது வீரத்தைப் பாராட்டி மேல், உடை, கீழ் ஆகிய மூவிடங்களிலும் மூவகைப் பாடாணங்களால் அமைக்கப்பெற்ற ஒரு கட்டாறியும் தந்து சிறப்பு செய்துள்ளார்.

1825-ம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 11-ஆம் தேதி பிள்ளையவர்களால் தமக்குச் சேரவேண்டிய 2,46,024 ரூபாய் 1 பணம் 14 காசுகள் பாக்கி வரவேண்டும் என்று அரசிடம்

கேட்கப்பெற்றது. அத்தொகையை அப்பொழுது இருந்த அரசால் திருப்பித் தர முடியவில்லை. அதற்கு ஈடாக புதுவையில் உள்ள வணிகர்களிடம் மகமை வசூலித்துக் கொள்ள உத்தரவு பிறப்பித்தது. ஆனால் அரும்பாத்தைப்பிள்ளை மகமை வாங்குவதை மறுத்துவிட்டார்.

1873 ஜுலை 21-ல் அத்தொகைக்குப் பதிலாக ஆண்டு தோறும் 2,000 பிரான் கொடுத்து விடுவதாக பாரிசு சட்ட சபையில் அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

அரும்பாத்தைப்பிள்ளை குடும்பத்தினர் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கும், ஆற்காட்டு நவாப்புகளிடத்திலும் நன்னம்பிக்கையுடன் பல்லாற்ருனும் பொருளுதவி செய்து வந்தனர். டுப்ளேயிக்குப் பின் வந்த கவர்னரிடம் முழு நம்பிக்கை பெற்றவராக அரும்பாத்தைப் பிள்ளை அவர்கள் விளங்கி இருக்கிருர்கள்.

பின்னர் வந்த தோமாஸ் அர்த்துயர் தெ லல்லி கவர்னர் இவர் பட்ட கடன்களுக்கு இவரது சொத்துக்களை ஜப்தி செய்யக்கூடாது என்று ஆணை பிறப்பித்துள்ளார். நாட்டிற்குச் செய்த சேவையை வெகுவாகப் பாராட்டியிருக்கிருர்.

வேதவிநாயகர் கோவில்: அரும்பாத்தபுரத்தில் அரும்பாத்தைப் பிள்ளை ஒரு சத்திரம் கட்டியிருந்தார். அது நெடுஞ்சாலையை ஒட்டியே இருந்தது. செஞ்சியை ஆண்ட தேசிங்கு மன்னரின் தந்தையார் காலத்தில் செஞ்சியிலிருந்து கொண்டு வந்த விநாயகர் சிலையை அரும்பாத்தைப்பிள்ளை தம் ஊரில் பிரதிட்டை செய்து சிறப்புடன் வழிபாடும் ஆற்றி வந்தார். அன்று முதல் அரும்பாத்தை விநாயகம் பிள்ளை என்றும் இவரை அழைப்பர். இவரது பரம்பரையினரில் மூத்த மைந்தனை அரும்பாத்த விநாயகம் என்ற பெயராலே அழைத்து வருகின்றனர்.

1748-ம் ஆண்டு ஆனந்தரங்கப் பிள்ளை தமது நாட் குறிப்பில் அரும்பாத்தபுரத்தில் வேத விநாயகர் ஆலயம் இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். அக்கோயிலுக்கு மானியமும் உண்டு. அக்கோயிலில் இன்றளவும் அரும்பாத்தை வழித் தோன்றல்களின் மேற்பார்வையில் வழிபாடு நடந்து வருகின்றது. 1971-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் தேதி புதுவையின் துணைநிலை ஆளுநராக இருந்த மேதகு ஜாட்டி அவர்களின் முன்னிலையில் குடமுழுக்கு விழா சிறப்பாக நடந் தேறியது.

அரங்கப்பிள்ளை நாட்குறிப்பு: 1753 டிசம்பர் 8-ந் தேதி சனிக்கிழமை அன்று எழுதிய ஆனந்த ரங்கப்பிள்ளை நாட் குறிப்பில் 'அரும்பாத்த பரசுராமப்பிள்ளைக்கு பிரஞ்சுப்படை அதிகாரிகள் 500 குதிரைகளையும் 300 வீரர்களையும் பத்தா யிரம் ரூபாயும் உடனே தேவை என்று ஆள் அனுப்பினர். முகுந்தராவிடம் பத்தாயிரம் ரூபாய் கொடுத்து என்ன செய்ய வேண்டும் என்று முராரிராவுக்குச் சொல்லப்பட்டது. சிவாஜீ கோத்பாதே என்பவர் இரகசியமாக அரும்பாத்தைபிள்ளை சத்திரத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார். விநாயகம் பிள்ளை இரவு தூங்கும் பொழுது ஒரு மைல் தொலைவில் 500 குதிரைகள் வந்திருப்பதாகப் பிள்ளையிடம் தெரிவிக்கப் பட்டது.

குதிரைப்படை ராம்பாக்கம் போனதும் 300 வீரர்கள் படையுடன் சேர்ந்து கொண்டனர், அவர்கள் திட்டக்குடி, பெண்ணாடம் போய்ச் சேர்ந்தனர். இச்செய்தி ஆனந்த ரங்கப்பிள்ளை நாட்குறிப்பில் இருப்பதைக் கொண்டு அரும் பாத்தைப்பிள்ளை ஒரேநாளில் 500 குதிரைகளையும் 300 வீரர் களையும் பத்தாயிரம் ரூபாயையும் சேர்த்துக் கொடுக்கும் அளவுக்கு செல்வாக்குப் பெற்று பிரஞ்சுக் கவர்னருக்குத் தக்க சமயத்தில் உதவிபுரியும் ஆற்றல் உடையவராக விளங்கி யுள்ளார் என்பது தெரிகிறது. "இதனை இதனால் இவன்

முடிக்கும் என்று ஆய்ந்து" அதனை பிள்ளையவர்களிடம் விட்ட பாங்கை பிரஞ்சுக் கவர்னரிடம் நாம் கண்டோம்.

சிறப்பியல்புகள்: 1666 முதல் 1917-ஆம் ஆண்டு வரை அரும்பாத்தை குடும்பத்தினர் பிரஞ்சு கவர்னர்களின் நம்பிக்கைக்குரியவர்களாக இருந்தனர். அரும்பாத்த விநாயக பரசுராமப் பிள்ளையவர்கள் சிறந்த தெய்வ பக்தியும். பிறர் நலம் காக்கும் பண்பாளராகவும், நாட்டிற்கு நற்றொண்டு புரிந்த நல்லோராகவும் விளங்கியுள்ளார்.

இவரது உருவம் கம்பீரத் தோற்றமும் தலைப்பாகையும் நீறணிந்த நெற்றியும் இடையில் கட்டாறியுடனும் தோற்ற மளிக்கிறது.

இவரது வழித்தோன்றல்கள் கட்டாறி பொன் பூண் அமைத்த கோல் அரசு வழங்கிய ஆணை ஏடுகள் முதலிய வற்றை பாதுகாவலுடன் வைத்துப் போற்றி வருகின்றனர்.

இவ்வாறு புதுவையின் பெருமைக்கும், புதுவை பிரஞ்சுக் காரர்களால் ஆளப்பட்டபொழுது அவர்களின் உயர்வுக்கும் தக்க பாதுகாவலராக விளங்கியவர் அரும்பாத்த விநாயக பரசுராமப் பிள்ளையவர்கள். ஆனால் இன்று அவரது வழித் தோன்றல்கள் ஏழ்மையின் உறைவிடமாக வாழ்ந்து வருகின் றனர். மாதம் ஒன்றுக்கு 62 ரூபாய் 50 காசுகள் தற்பொழு துள்ள அரும்பாத்த விநாயகம் என்பவருக்கு உதவித் தொகை யாக அரசிடமிருந்து கிடைத்து வருகின்றது.

புதுவைக்குப் புகழ்சேர்த்த சான்றோர்களைப்
போற்றுவோம்,

நல்லோர்வாழ் நலம்பல பெற்று வாழ்க!

நன்றி : புதுவை வானொலி.

## திரு ஜகனு தியாகு
### சிறப்பு அரசு வழக்கறிஞர்

---

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலால்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

என்று கூறினார் வள்ளுவர். உலகத்தில் புகழோடு வாழ வேண்டும். புகழுக்குரிய செயல்கள் புரிய வேண்டும். பிறர் புகழ்ந்து பேசுவதற்காகக் காரியத்தைச் செய்வது சிறப்பன்று. ஒருவன் செய்யும் நற்காரியந்தால் புகழ் தானே உண்டாகும். புதுவைப் புகழ் மணிகள் என்ற வரிசையில் இன்று நாம் அறிந்து கொள்ளப் போகும் பெரியார் தியாகு முதலியார் ஆவார்.

புதுவை நகரின் புகைவண்டி நிலையத்திற்குத் தென் கிழக்கில் உப்பளம் சாலையில் செல்லுகையில் வலது புறத்தில், மேற்கத்திய கட்டிடப் பாணியில் கட்டப்பட்டுள்ள ஓர் அழகிய கட்டிடத்தைக் காணலாம். அக்கட்டிடம் தியாகு முதலியார் பூங்காவில் அமைந்துள்ளது. அதுதான் அரசினர் சுற்றுலா விடுதி. இதன் பிரதான வாயிலின் நடுவில் ஒருவரது கம்பீரமான உருவச்சிலை ஒன்று இருப்பதைப் பார்க்கலாம். கம்பீரமான அந்த மனிதரின் தலையை அலங்கரித்திருக்கும் தலைப்பாகை அவரின் உருவத்திற்கு ஓர் எடுப்பான தோற்றத்தை அளிக்கிறது. இவர்தான் புதுவையின் புகழ்

மணிகளுள் ஒருவராகக் கருதப்படும் தியாகு முதலியார் அவர்கள். இவர் புதுவையில் பழம் பெருங் குடியில் 11-2-1980-ல் பிறந்தார். தன் திறமைக்கேற்ப நல்லதோர் வாழ்வினை அமைத்துக் கொண்டு 69 வருடங்கள் தன் குடும்பத்திற்கும் ஊருக்கும் நாட்டிற்கும் சிறந்த மகனாக வாழ்ந்தார். நாம் அவரை மறக்க இயலாது. அத்துணைப் புகழ் வாய்ந்தவர்.

புதுவையின் புகழ் மணிகளுள் ஒருவராகக் கருதப்படு மளவிற்கு, அன்னார் புதுவைக்கு என்ன செய்திருக்கிறார் என்ற கேள்வி அடுத்ததாக நம் மனத்துள் எழுகின்றது 126 ஆண்டு களுக்கும் மேலாக புதுவை நகரின் பெரியக் கடை நடுவில் வானோங்கி நிற்கும் மணிக்கூண்டு தியாகு முதலியார் செலவில் கட்டப்பட்டது. அதில் இயங்கும் கடிகாரமும் அவர் தானமாக அளித்தது ஆகும். அதன் மணி ஓசை, ஸ்தாபகர் தியாகு முதலியாரின் பொது நலத்தொண்டினை நமக்குச் சதாகாலமும் நினைவு கூறுகின்றது அவ்வோசையின் ஒலி அலைகள் அவரின் புகழை, ஆகாயத்தில் வியாபித்து மக்கள் நெஞ்சிற் கொண்டு செல்கின்றன. மேற்கூறிய மணிக்கூண்டு ஒன்றை நிறுவி யதின் மூலம் புதுவையின் வரலாற்றில் தமக்கு ஓர் அழியாத இடத்தைத் தேடிக்கொண்டாரென்று சுருங்கக் கூறலாம்.

இந்த மணிக்கூண்டு புதுவையில் வரலாறு படைத்திருக் கிறது. அந்த ஒரே காரணத்திற்காக மட்டுமே, அவரை வரலாறு படைத்த மனிதர் என்று கூறி விடலாம். ஆயினும் அம்மணிக்கூண்டு, தோன்றுவதற்குக் காரணகர்த்தாவாக விளங்கிய அப்பெரியாரின் வாழ்க்கை வரலாற்றோடு, சம்பந்தப் பட்ட பல நிகழ்ச்சிகளையும், புதுவை வாழ் மக்கள் மறந்து விட்டிருக்கிறார்கள். பொதுவாக நம் மக்களிடையே, தமது மூதாதையர் பற்றிய நினைவுக் குறிப்புகளைப் பேணும் பழக்கம் சமீப நூற்றாண்டுகளில் மறைந்து வருவதை இது சுட்டிக் காட்டுகின்றது.

தியாகு முதலியாரின் குடும்பம் 17-ம் நூற்றுண்டின் பிற் பகுதியில் அதாவது 1674-ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 15-ம் நாள் தமிழகத்திலிருத்து புதுவையில் வந்து குடியேறிய முக்கியமான குடும்பமாகும். தமிழகத்தில் சென்னைக்கு அருகாமையில் பூந்தமல்லி என்றொரு ஊர் இருக்கின்றது. அந்த ஊரைச் சேர்ந்தவர் லஜாரோ தெமோத்தா என்ற தானப்ப முதலியார், 1674-ம் ஆண்டில் புதுவைக்குப் பிரான்சுவா மர்த்தேனுடன் வந்தபோது, புதுச்சேரியில் மீனவர்கள் குடிசை வீடுகள் மட்டும் சில இருந்தன. பிரான்சுவா மர்த்தேனுடன் சேர்ந்து புதுச்சேரியைச் சீர்பெறச் செய்தார். தியாகு முதலியார் மூதாதையர் லஜாரோ தெமோத்தா தானப்ப முதலியார். புதுவையில் நிர்மாணிக்கப்பட்டிருக்கும் முதல் கிருஸ்துவக் கோயில் ''செயின்ட் லஸார்'' கோயில். இது தானப்ப முதலியார் கட்டியது. தானப்ப முதலியாரும் அவர் குமாரர் அந்தோனியோ முத்தியப்ப முதலியாரும், கிழக்கிந்தியக் கூட்டு வணிகக் குழுவின் முன்னோடியாயிருந்தவர்கள். இவர்களுக்குப் பின் பெத்ரோ கனகராய முதலியார் அரசறிய வாழ்ந்து வந்த பெருமகனாராவர். அவர் தஞ்சாவூர் மன்னரிடம் சென்று தூது பேசி காரைக்காலைப் பிரெஞ்சுக் காரர்களுக்குத் தரும்படி 1739-ல் செய்தார். தியாகு முதலியார் தகப்பனார் தைரியநாத முதலியார் புதுவை சாவடி நீதி மன்றத்தின் தலைமைத் தமிழ் மொழி பெயர்ப்பாளராக அலுவல் செய்தார். தியாகு முதலியார் 1780-ம் வருடம் பிப்ரவரி மாதம் 11-ம் தேதி பிறந்தார். 7 நாளைக்குப் பிறகு கர்ரே என்கிற சாமியாரால் ஞானஸ்நானம் பெற்றார். ஞானஸ்நானப் பத்திரத்தில் கண்டிருப்பதாவது; தைரியநாதன் ஞானப்பூம்மாள் குமாரன் யாகப்பன் 7 நாள் வயதுடையவன். முதலியார் சாதி, கர்ரே சுவாமியாரால் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டான். சாவடி நீதிமன்றமாயிருந்து பொலீசு நீதி மன்றமாய் மாற்றப்பட்ட நியாயஸ்தலத்தின் தலைமை மொழி பெயர்ப்பாளராய் தன் தகப்பனருக்குப் பதில் 1816-ம் வருஷம் வரையில் அலுவல் பார்த்ததாக தஸ்தாவேசுகள் குறிக்கின்றன.

1816 முதற்கொண்டு புதுச்சேரியின் மாவட்டத்தில் தாஸில்தாராகப் பணிபுரிந்து வந்தார். 5-8-1824ல் தியாகு முதலியார் தன்னால் தாஸில்தார் அலுவல் பார்க்கத் தன் உடல்நிலை இடம் கொடுக்கவில்லை என்ற காரணத்தால்தான் ராஜினாமாவை கிஷார்த் தே மோன்கர் என்ற கலெக்டரிடம் சமர்ப்பித்தார். மீண்டும் 27-9-1824-ல் கிஷார்த் என்ற கலெக்டரிடம் தன் ராஜினாமாவை ஊர்ஜிதம் செய்தார். அதன் பேரில் கிஷார்த் என்பவர் கவர்னரிடம் தியாகு முதலியார் ராஜினாமாவை ஏற்றுக்கொள்ளும்படி சிபாரிசு செய்தார். தியாகு முதலியார் பிரிட்டிஷ் ராஜ்யத்தில் கடலூரில் கலெக்டர் அலுவலகத்தில் டிஸ்ட்டிரிக்ட் சரிஸ்நாதாரராகச் சேவை செய்தார். கடலூரில் உத்தியோகம் செய்த கலெக்டர்மார் களுக்கும் தன்னுடைய சுறுசுறுப்பினாலும், வேலையில் ஜாக்கிரதையாலும் எஜமானர்களின் நம்பிக்கையைப்பெற சதா முயற்சியாலும், நம்பிக்கையுடையவரானார். விசேஷமாய் ஜான்துத் என்ற கலெக்டரின் நண்பராய் விளங்கினார். இந்த ஜான்துத், தியாகு முதலியார் பேரில் எவ்வளவு விசுவாசமும், பட்சமும் வைத்திருந்தாரென்றால் தியாகு முதலியாருடன் தான் ஆபீஸ் வேலை செய்யும் பொழுது இருப்பதுபோல் படம் எழுதி அச்சிட்டு விநியோகம் செய்தது மட்டு மல்லாமல் அப்படியே சிலை செய்து அது இப்போதும் சென்னை தேனாம் பேட்டை கோவிலில் பெரிய வாசற்படியின் வலது பக்கத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

தியாகு முதலியார் அவர்கள் பிறசமயத்தாரிடம் மிகுந்த நட்புணர்வோடு வாழ்ந்திருக்கின்றார். புதுவை நகரின் புகை வண்டி நிலையத்திற்குத் தென் கிழக்கில் உப்பளத்தில் ஒரு பயணிகளின் விடுதி ஒன்று 1847-ல் இவரது கொடைத்திறத் தால் உருவாயிற்று. 1967-ல் இவர் வாரிசு புதுவை அட்வ கேட் கோழந்தே தைரியநாத முதலியார் அவர்கள் தன் முன்னோர் தியாகு முதலியாரால் கட்டப்பட்ட அந்தப் பயணி கள் விடுதியையும் அதைச் சுற்றியுள்ள இடத்தையும் புதுவை அரசுக்குத் தானமாகக் கொடுத்தார். அதே இடத்தில் புதிய

பயணிகள் விடுதி ஒன்றை அரசு கட்டியுள்ளது. தியாகு முதலியார் உள்ளூரிலும் தமிழ் நாட்டிலும் சத்திரம் சாவடிகள் கட்டினார். அவைகளில் இன்றும் நல்ல நிலையில் இருப்பது 1830-ல் கட்டப்பட்ட கடலூர் சத்திரம். தற்போது கலியாணக் கூடமாகத் திகழ்கின்றது. மேலே சொல்லப்பட்ட கோயில் களும் கட்டிடங்களும் தியாகு முதலியார் வள்ளல் தன்மைக்கு ஓர் எடுத்துக் காட்டாகும். தியாகு முதலியார் பெயரால் புதுவையில் ஒரு வீதி உள்ளது. தியாகு முதலியாரின் வாரிசு கொழந்தை தைரியநாத முதலியார் அவர்கள் 1969-ல் புதுவை அரசுக்கு முதலியார் பேட்டை ஜீவானந்தம் உயர் நிலைப்பள்ளி நிருவப்பட்டிருக்கும் சுமார் 2 ஹெக்டேர் நிலத் தைக் கொடுத்தார். மேலும் கடலூர் புதுப்பாளையத்திலிருக்கும் உயர்நிலைப்பள்ளி முனிசிப்பல் ஆபீஸ், அங்காடி முதலிய இடங்களும் தியாகு முதலியாருக்குச் சொந்தமான இடங் களாகும். இவைகளை அவர் வாரிசுகள் அரசுக்கு அளித்தார் கள். இத்தகைய அரும்பெரும் சாதனைகளால் தான் பலவகை யிலும், புதுவையின் வளர்ச்சிக்கும், வளத்திற்கும் வழி கோலப்பட்டது. எனவே இத்தகைய அரும்பெரும் ஸ்தாப கரும் போஷகரும் கொடை வள்ளலுமாகத் திகழ்ந்த தியாகு முதலியார் அவர்களை இன்றும், புதுவையில் புகழ் மணிகளுள் ஒருவராக ஏற்றிப் போற்றுகின்றோம். இவர் வாரிசு அப்பாவு பெல்வெந்திரசாமி தியாகு புதுவையில் முதன்முதலாகப் பிரெஞ்சு நாட்டுக் குடியரசுத் தலைவரால் நொத்தேராக நியமனம் செய்யப்பட்டார். மேலும் அவர் புதுவையின் துணை மேயராகவும் சட்ட மன்றத்தின் அங்கத்தினராகவும் பதவிகள் வகித்தார். இவர் குமாரர் ஞானுதியாகு முதலியார் மாபெரும் சட்டமேதையாகவும் பேரறிஞராகவும் அரசியல் தந்திரி யாகவும் திறமை மிகு வழக்கறிஞராகவும் விளங்கினார். புதுவை அறிஞர் புதுவை பெரியார் தியாகு முதலியாரின் பெயரும் புகழும் புதுவையுடன் என்றென்றும் இணைந்து நிலைத்து நிற்கும்

நன்றி: புதுவை வானொலி

## சின்ன சுப்பராயப்பிள்ளை

### அரங்கநாத பரமதயாளன்

---

மண்ணில் இதுபோல் நகரில்லை என்னும்படியான பெருமை வாய்ந்த புதுவை மாநகர் புதுமைக்கும் புதுமையாய்ப் பழமைக்கும் பழமையாய்ப் பொலிந்து விளங்குவது; கடற்கரையை அடுத்துள்ளது; கண்டார் மனத்தைக் கவர்வது; ஒழுங்கான வீதிகளையுடையது; பல்கலை மக்களும் குறவிளங்குவது; கோயில்கள் பலவாற்றுனும் குலவுவது; அறிஞரும் அன்னிய நாட்டினரும் ஆர்ந்த சிறப்பினது; சரித்திரச் சான்றுடையது,

அத்தகு சீர்மல்கும் புதுவை மாநகரின் கண் பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்வாங்கு வாழ்ந்த பெரியோர்களுள் தலை சிறந்து விளங்கியவர் ஸ்ரீமான் சின்னப்பிள்ளை என்னும் பெரியோர் ஆவர். ஸ்ரீமான் பிள்ளை அவர்களும் அவர்தம் நல்லற மனைவி ஆனந்தாய் அம்மாள் அவர்களும் அருந்தவப் பயனுல் ஈன்றெடுத்த புதல்வர் அறுவர்; அவர்களுள் மூத்தவர் அப்பாசாமிப்பிள்ளை, இரண்டாவது சுப்பராயப்பிள்ளை; மூன்ருவது தில்லை கோவிந்தப்பிள்ளை; நான்காவது ராமசாமிப்பிள்ளை; ஐந்தாவது முத்துசாமிப்பிள்ளை; ஆருவது திருவோங்கடம் பிள்ளை.

இவர்களில் முதல்வரான ஸ்ரீமான் அப்பாசாமிப்பிள்ளை அவர்கள், முறையே கற்பன கற்றுக் கேட்பன கேட்டுப் பெரும்புலவராய்த் திகழ்ந்த திறத்தினை அறிந்த பிரஞ்சு அரசாங்கத்தினர், இவர்களுக்கு நகரதிகாரி (பாளையக்காரர்) என்ற பதவியை அளித்துப் பல விருதுகளும் வழங்கினர்.

இரண்டாவது குமாரர் திரு. சின்ன சுப்பராயப்பிள்ளை அவர்கள் தம் தந்தையாரால் நடைபெற்று வந்த பண்ட வாணிகத் தொழிலைத் தந்தையாருடன் இருந்து நடத்தி வந்தனர். அது சமயம் பிரஞ்சு நாட்டிலிருந்து 1838-இல் ஒரு வெள்ளையர் வந்து, புதுவைக்கும் பிரஞ்சு நாட்டுக்கும் இடையே வாணியம் நடத்த வேண்டும் என்பதைச் சின்னப் பிள்ளையவர்களிடம் தெரிவித்தார்; அதனைத் திரு. சின்னப் பிள்ளையவர்கள், அப்பாசாமிப் பிள்ளையவர்களின் முதல் மகன் திரு. லோகநாதப்பிள்ளையிடம் தெரிவித்தார். அவர் தம் சிறிய தந்தையார் சின்ன சுப்பராயப்பிள்ளையவர்களிடம் துரையவர்களின் கருத்தை அறிவித்தார். அண்மையில் உள்ள கிராமங்களில் அவுரி என்னும் செடிகளில் இருந்து எடுக்கப்படும் நீலங் சாயங்களையும் கோடிடாமல் கைத்தறியில் நெசவாகும் காடா துணிகளையும் சேகரித்துப் பிரஞ்சு நாட்டிலுருந்து வரும் துய்ப்ளேக்ஸ் என்னும் கப்பலில் மாதம் ஒருமுறை அனுப்ப வேண்டுமென்று துரையவர்கள் கேட்டுக்கொண்ட வண்ணமே செயல்படத் தொடங்கினர். அன்று முதல் ஸ்ரீமான் சின்ன சுப்பராயப்பிள்ளை, தம் தந்தையாருடன் இருந்து வியாபாரத்தைக் கவனித்து வந்தார். பின்னர் 1840-ஆம் ஆண்டு பிரஞ்சு நாட்டில் சண்டை ஏற்பட்டது. அது சமயம் புதுவையிலிருந்து அனுப்பப்பட்ட நீலச் சரக்கும் துணியும் அளவில் அதிகமாகத் தேவைப் பட்டது. அம்முறையில் வியாபார வளர்ச்சியும் பணப் பெருக்கமும் ஏற்பட்டது. இம்முறையில் சிறப்புற்று விளங்கிய வியாபாரம் பத்து ஆண்டுகளின் பின்னர், அதாவது 1851-ஆம் ஆண்டில் காட்டப்பட்டுள்ள கணக்கின்படி சுமார் ஐந்து இலட்சம் ரூபாய்க்கு மேல் பவுன் நாணயமாக இலாபம் கிடைத்ததை அறிந்தனர்.

அதன்பின்னர், ஸ்ரீமான் சின்னுப்பிள்ளையவர்கள் 1860-ல் இறைவனடி அடைந்தார். அன்றுமுதல் தந்தையாரால் நடத்தப்பெற்று வந்த வியாபாரத்தைச் சின்னு சுப்பராயப் பிள்ளையவர்கள் தானே முன்னிருந்து நடத்தி வந்தனர். அது சமயம் பிரஞ்சு வருவாய்த்துறை அலுவலகத் தலைமையதிகாரி யாக இருந்த தம் பெரிய தந்தையார் குமாரர் திரு. லோக நாதப்பிள்ளை 1870-ஆம் ஆண்டு திடீரென இறைவனடி அடைந்தனர். இந்நிலை பிள்ளையவர்களுக்கு ஒன்றுடன் பற்று இன்றி உலகைத் துறக்கும் நிலையினைப் பெற்றுச் செல்வத்தின லாவது இனியொன்றுமில்லை என்று 1873-ஆம் ஆண்டில் தமக்குச் சொந்தமாயிருந்த வில்லுயனூர் ராஜவீதியில், இன்று சுதேசி காட்டன் மில் எதிரில் உள்ள திடலில் அறச்சாலை ஒன்று அமைத்து, ஏழைகளுக்கும் அங்கா கீனம் உள்ளவர் களுக்கும் பகலுணவு அளித்து வந்தனர். இச்செயலே தமக் குரியமன அமைதியையும் சாந்தத்தையும் அளிக்கவல்லது ஒன்றெண் ணிச் செயல்பட்டு வந்தார்.

இவ்வண்ணமாக நமது புதுவைப் புகழ்மணி பிள்ளை யவர்கள் இரண்டு ஆண்டுகள், தாமே நடத்தி வந்தார். ஆயினும் ஸ்ரீமான் லோகநாதப்பிள்ளை அமரத்துவம் பெற்றதை மறப்பதற்கு இயலாது துன்புற்றனர். மேலும் ஸ்ரீமான் சின்னு சுப்புராயப்பிள்ளையவர்களின் ஏக குமாரத்தி வேதவல்லி நாச்சியார். வைசூரி நோய்க்கு இலக்காகி மறைந்தார். இதனால் ஸ்ரீமான் சுப்பராயப்பிள்ளை அவர்கள் முற்றும் துறந்த நிலையினை அடைந்தார். உடனே அவர்தம் சகோதரர் நால்வரையும் அழைத்து, அவரவர்கள் வாழ்வதற்குரிய அளவில் பொருளளித்துப் பின்னர் தன் தமையனார் அப்பா சாமிப் பிள்ளையவர்களின் இரண்டாவது குமாரராகிய, பத்தொன்பது வயதுடைய திரு. துரைசாமிப் பிள்ளையவர் களிடம் தம் உளக்கருத்தினை இதமாக எடுத்துக்கூறி என்னுடைய சொல்லின் வண்ணம் செயல்பட வேண்டும் என்று தெரிவித்தார். துரைசாமிப் பிள்ளையவர்களும் "தந்தை

சொல்மிக்க மந்திரம் இல்லை'' என்ற ஆன்றோர் சொல்லிற் கிணங்க அவற்றை ஏற்றனர்.

சின்ன சுப்பராயப்பிள்ளை அவர்கள் 1875-ம் ஆண்டு ஜூன் மாதம் 5ம் நாள் மரண சாசனத்தைத் தம் கையால் (சொஸ்தலிகிதமாக) எழுதித் திரு. துரைசாமிப் பிள்ளையிடம் ஒப்புவித்துத் "தம் மரணத்திற்குப் பின்னர், என் கருத்தின் வண்ணம் நீ முன்னிருந்து நமக்குச் சொந்தமான சொத்துக் கள் அனைத்தையும் பொருளையும் பிரஞ்சு அரசாங்கத்தினரிடம் ஒப்படைத்து அதில் நீயும் ஒருவராக இருந்து சாசனத்தில் என்னால் குறிப்பிட்டப்பட்ட செயல்களை எழிலுறச் செய்வது உமது கடமையாகும். அவ்வாறு செயல்பட்டால் உங்களை நமது வழிபடு தெய்வமாகிய லஷ்மிநரசிங்கப் பெருமான் காத்தருளுவார்'' என்று கூறித் தம் சாசனத்தை அரக்கினல் முத்திரையிட்டு அளித்த பதினைந்தாம் நாள் 20—6—1875-ல் திருநாடு அலங்கரித்தனர்.

பின்னர், தம் சிறிய தந்தையாரது கருத்தின் வண்ணம் திரு. துரைசாமிப் பிள்ளையவர்கள், மேற்படி சாசனத்தைப் புதுவை நீதிஸ்தலத்திற்குச் சென்று நியாயாதிபதியிடம் ஒப்பு வித்து, அதனைத் திறந்து நீதிஸ்தலத்தார் பார்வையிட்ட போது, தாம் உடனிருந்தும் கையொப்பமிட்டும். அவற்றில் கண்டுள்ள அசையும் பொருட்கள் அசையாப் பொருட்கள் அனைத்தையும் அரசாங்கத்திடம் ஒப்புவித்தனர். மேற்படி மரணசாசனத்தை, அக்காலத்தில் வாழ்ந்த நொத்தேர் "குருவப்பா'' என்னும் பதிவாளரிடம் ஒப்புவித்துப் பிரெஞ்சு மொழியாக்கம் செய்து அதில் கண்டவண்ணம் வேதவல்லி நாச்சியாருக்கு ஆலயம் அமைத்து அதற்கு எதிரில் திருக்குளம் எடுத்து, நாள்தோறும் பிள்ளையவர்களின் கருத்திற்கேற்ப ஏழைகளுக்கு உணவு வழங்குவதற்குரிய ஏற்பாடு செய்தனர். இவையனைத்தும் செயல் படும்போது துரைசாமிப் பிள்ளை அவர்கள் உடனிருந்து தம் சிறிய தந்தையார் கருத்துக்கு

மாறுபடா வண்ணம் நடைபெறச் செய்து வந்தார். வேதவல்லி நாச்சியாரின் புகைப்படத்தைப் பிரஞ்சு நாட்டிற்கு அனுப்பி வைத்தார். அங்கிருந்து தருவிக்கப்பட்ட பஞ்சலோகத்தின லான திருவுருவமே இன்று அறச்சாலையில் கோயில் கொண் டுள்ளது.

இத்தகைய செயற்கரிய அருஞ்செயலினைத் துரைசாமிப் பிள்ளையவர்கள் செய்யவில்லையென்றால் இவ்வறச் சாலையினை இன்று காண இயலாது. அத்தகைய செயற்கரிய செயல்புரிந்த பெருந்திருவாளரின் நேர்மையை நேருறக்கண்டுகளித்து வியந்த பிரஞ்சு அரசாங்கத்தினர், அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து கௌரவித்தனர். அவர்களின் சந்ததியார் களுக்குத் தொடர்ந்து உதவி புரிந்து வந்தனர்.

இச்சாசனத்தைச் சிறப்புற நடைபெறச் செய்த துரை சாமிப்பிள்ளை அவர்கள் 1914-ஆம் ஆண்டில் விண்ணுல கெய்தினர்.

இவ்வறச்சாலையில் நாள் ஒன்றுக்குச் சுமார் 260 நபர் களுக்குப் பகல் நல்லுணவு அளிக்கப்பெறுகிறது. அடுத்துத் தன்மானத்தோடு வாழும் ஏழை மக்களுக்கு மாதம் ஒன்றுக்குச் சுமார் ஆறு லிட்டர் விழுக்காடு அரிசியாக 600 பேருக்கு வழங்கப்பெறுகிறது. இதனையும் பெறுவதற்கு இயலாத நிலையில் உள்ள மக்களுக்கு மாதம் ஒன்றுக்கு ஐந்து ரூபாய் முதல் இருபத்தைந்து ரூபாய் வரையில் உபகாரச்சம்பளம், சுமார் 400 பேர்களுக்கு வழங்குகின்றனர்.

இவ்வற நிலையம் 1875-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 5-ஆம் நாள் முதல் பிரஞ்சு அரசாங்கத்தாரால் நடத்தப்பெற்று வந்துள்ளது. பின்னர் 1916-ஆம் ஆண்டு புதுவை நகராட்சித் தலைவர் தலைமையில் வள்ளல் சின்ன சுப்பராயப் பிள்ளை அறநிலையக் குழுவினரால் இதுவரையில் நிருவகிக்கப் பெற்று வருகிறது.

பிள்ளையவர்களின் அறச்செயலினைக் குறித்து அக்காலத்தில் வாழ்ந்த புலவர் பெருமக்கள் பல பாடல்கள் பாடியுள்ளனர். அவர்களில் குறிப்பிடத்தக்க புலவர் திரிசிரபுறம் மகாவித்வான் மீனுஷிசுந்தரம் பிள்ளை ஒருவர்.

பிள்ளையின் அதநிலைய உதவியால் நடைபெற்று வரும் சில பள்ளிக்கூடங்களும் மருத்துவமனைப் பகுதியும் புதுவையில் அமைந்துள்ளன. இவரது பெயரால் ஒரு வீதியும் இங்கு அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறு நிலையத்தில் ஆண்டுவிழா ஆண்டுதோறும் பிள்ளையவர்களின் குடும்பத்தினரால் நடத்தப் பெற்று வருகிறது.



# கலவை சுப்புராயர்

சிரில் அந்தோனி
**கீழ்நிலைச் செயலர், கல்வித்துறை, புதுவை.**

---

புதுவை நகரின் முக்கியமான வீதிகளில் ஒன்ருன மிஸ்யோன் வீதி வழியாக வடக்கு நோக்கிச் செல்வோர், தற்போது அரவிந்தர் வீதி என அழைக்கப்படுகின்ற கோமுட்டி செட்டி வீதியைத் தாண்டிச் செல்லுகையில், வலதுகைப் பக்கவாட்டில் உயரமும் பருமனுமான முகப்புத்தூண்களோடு மேற்கத்திய கட்டிடப் பாணியில் கட்டப்பட்டுள்ள ஓர் அழகிய கட்டிடக்கைதக் காணலாம். அக் கட்டிடத்தின் முகப்பிலே 'College Calve' Soupraya Chettiar என்று பிரஞ்சு மொழியிலும், 'கலவை சுப்புராய செட்டியார் கல்விச்சாலை' என்று தமிழிலும் எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். மேலும் நகர்ந்து, அகலமான அதன் படிக்கட்டுகளின் வழியாக ஏறிச் சென்று அக்கல்விச்சாலையின் பிரதான வாயிலின் இடது புறத்தில் ஒருவரது கம்பீரமான உருவச்சிலை ஒன்று இருப்பதைப் பார்க்கலாம். அக்கம்பீரமான மனிதரின் பரந்த நெற்றியிலே இப்போது விபூதி பூசப்பட்டிருக்கிறது. அன்னுரது தலையை அலங்கரித்திருக்கும் தலைப்பாகை அம்மனிதரின் உருவத்திற்கு ஓர் எடுப்பான தோற்றத்தை அளிக்கிறது. இவர்தான் புதுவையின் புகழ்மணிகளுள் ஒருவராகக் கருதப்படும் கலவை சுப்புராய செட்டியார் அவர்கள்.

புதுவையின் புகழ்மணிகளுள் ஒருவராகக் கருதப்படுமளவிற்கு அன்னுர் புதுவைக்கு என்ன செய்திருக்கிருர் என்ற

கேள்வி அடுத்ததாக நம் மனத்துள் எழுகின்றது. நூறு ஆண்டுகளுக்கும் மேலாக புதுவை நகரில் கல்வி மணம் பரப்பிவரும் கல்விச்சாலை ஒன்றை நிறுவியதன் மூலம் புதுவையின் வரலாற்றில் தமக்கு ஓர் அழியாத இடத்தைத் தேடிக் கொண்டார் என்று சுருங்கக் கூறிவிடலாம். அக் கல்வி நிலையம் புதுவையில் வரலாறு படைத்திருக்கிறது. அந்த ஒரே காரணத்திற்காக மட்டுமே அவரை வரலாறு படைத்த மனிதர் என்று கூறி விடலாம்.

ஆயினும், அக் கல்வி நிலையம் தோன்றுவதற்குக் காரண கர்த்தாவாக விளங்கிய அப் பெரியாரின் வாழ்க்கைக் குறிப்புகள் பலவும், தடயங்கள் எதுவும் இன்றி மறைந்து போய் விட்டன. எனவேதான் அன்னாரின் வாழ்க்கை வரலாற்றோடு சம்பந்தப்பட்ட பல நிகழ்ச்சிகளையும் புதுவை வாழ் மக்கள் மறந்து விட்டிருக்கிறார்கள். சொல்லப்போனால், அவரது வாரிசுகளாக வந்துள்ள அவரது குடும்பத்தினருக்கே அவரது பூர்வீகம், பிறப்பு, வளர்ப்பு, உடன்பிறந்தோர், பெற்றோர், கல்வி, தொழில் பற்றிய பல விவரங்கள் அதிகமாகத் தெரியவில்லை. பொதுவாக நம் மக்களிடையே, தமது மூதாதையர் பற்றிய நினைவுக் குறிப்புக்களைப் பேணும் பழக்கம், சமீப நூற்றாண்டுகளில் மறைந்து வருவதை இது சுட்டிக் காட்டுகின்றது.

கலவை சுப்புராய செட்டியாரின் குடும்பம், 19-ம் நூற்றாண்டின் முற்பகுதியில், அநேகமாக 1840-ம் ஆண்டு வாக்கில், தமிழகத்திலிருந்து புதுவைக்குக் குடியேறிய முக்கியமான வணிகக் குடும்பங்களில் ஒன்றாகக் கருதப்படுகின்றது. தமிழகத்தில், வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள செய்யூர் என்னும் ஊருக்கருகில் 'கலவை' என்றொரு ஊர் இருக்கின்றது. அதுபோல தென் ஆற்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திற்கு அருகாமையிலும் 'கலவை' என்று மற்றோர் ஊர் இருக்கின்றது. இவ்விரண்டினுள் நமது சுப்புராய செட்டியார்

அவர்கள் எந்த ஊரைச் சேர்ந்தவர் என்ற கேள்வி எழுகின்றது. சிதம்பரத்திற்கு அருகாமையிலுள்ள 'கலவை' என்ற ஊரிலிருந்து புதுவை வந்து குடியேறியவர்கள் என்றே அவரது வழித் தோன்றல்களாக இன்னும் புதுவையில் வாழ்ந்து வரும் அவரது குடும்பத்தினர் கூறுகின்றனர். மாருக, வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள 'கலவை' என்ற ஊரிலிருந்து வத்து குடியேறியவர்கள் என்றும் சிலர் கூறுகின்றனர். சிதம்பரத்திற்கு அருகாமையிலுள்ள 'கலவை' என்ற ஊரிலிருந்து வந்து குடியேறியவர்கள் என்ற கூற்றுக்கே அதிக ஆதாரங்கள் இருப்பதாகத் தெரிகின்றது. இன்றளவும், இக் குடும்பத்தினர் சீர்காழி, சிதம்பரம் போன்ற ஊரிலுள்ள தங்கள் குடும்பத்தாருடன் தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதால் சுப்புராய செட்டியார் குடும்பத்தினரும், தென் ஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த 'கலவை' என்ற ஊரிலிருந்து வந்தவர்களாக இருத்தல் வேண்டும். இக் குடும்பத்தினர் 'கலவை' ஊரிலிருந்து வந்த காரணத்தினுலேயே தங்கள் பெயருக்கு முன்பாக 'கலவை' என்ற குறிப்புப் பெயரையும் சேர்த்துக்கொண்டிருக்கின்றனர்.

இவர்கள் வணிகத் துறையில் பெரும் ஈடுபாடு கொண்ட கோமுட்டிச் செட்டியார்கள், சில நூற்ருண்டுகட்கு முன்னர், ஆந்திரப் பிரதேசத்திலிருந்து தமிழகத்தில் வந்து குடியேறியவர்கள் ஆவர். இன்னமும் இவர்களது தாய்மொழி தெலுங்கு மொழியாகவே வழங்கி வருகின்றது. இன்றும் அவர்களது வீடுகளில் அவர்கள் தெலுங்கு மொழியிலேயே உரையாடி வருகின்றனர்.

ஆந்திர நாட்டில், விஜய நகர மன்னர்கள் காலத்தில் வைணவம் தழைத்தோங்கியிருந்த போதிலும், கலவை சுப்புராய செட்டியாரின் குடும்பத்கினர் சைவ சமயத்தவராகவே விளங்குகின்றனர். கலவை சுப்புராய செட்டியார் அவர்கள் சமயத்தால் சைவராயிருந்த போதிலும், பிற சமயத்தாரிடம், மிகுந்த நட்புணர்வோடு வாழ்ந்திருக்கின்ருர் என்பது புலனு

கின்றது. புதுவையிலுள்ள வரதராஜப்பெருமாள்கோவிலில்திரு வெண்ணாழி மண்டபம் இவரது கொடைத் திறத்தால் உருவா யிற்று என்று தெரிகின்றது. அதுபோலவே மற்றொரு வைணவ ஆலயமான திருவகீந்திரபுரம் கோவிலுக்கு எதிரேயுள்ள சிறு குன்றின்மேல், கிணறு ஒன்று அமைப்பதற்கும் இவர் உதவி யுள்ளார் என்று தெரிகின்றது. எனவே, இவர் பரந்த சமய நோக்குடையவர் என்பது இதனால் நமக்கு நன்கு புலனா கின்றது.

செட்டியார் அவர்கள், தமது வணிகத் தொழில் மூலம் வாழ்க்கையில் முன்னேறியவர். புதிதாக நெய்யப்பட்ட ஆடைகளைத் துவைப்பதற்குத் தேவையான Indigo எனும் நீலநிறச் சாயம் சம்பந்தமான வாணிபத்தில் இவர் ஈடுபட்டி ருந்ததாகவும் தெரிகின்றது. வாணிகத்தின் மூலம் செல்வம் பெருகப் பெருக வட்டிக்குப் பணம் கொடுக்கும் வங்கித் தொழிலிலும் அவர் ஈடுபட்டதாகத் தெரிகின்றது.

வணிகத்தின் மூலம் பெரும் செல்வத்தை ஈட்டிய செட்டி யார் அவர்கள், தமது செல்வத்தில் ஒரு பகுதியைந் தான தருமங்களுக்காகவே செலவு செய்திருக்கின்றார். ஆலயத் திருப்பணிகளுக்கெனவும் சமுதாய நலனுக்காகவும் சமூக மேம்பாட்டிற்காகவும் இவர் தமது செல்வத்தைச் செலவிட்டி ருக்கின்றார். கலவை சுப்புராய செட்டியார் கல்விச்சாலையே இதற்கோர் அழியாதசான்றாக விளங்குகின்றது. எனவேதான் புதுவையின் கொடை வள்ளல்களுள் ஒருவராகக் கருதப்படுவ தற்குரிய தகுதி படைத்தவர் எனலாம்.

கலவை சுப்புராய செட்டியார் அவர்களுக்கு இரண்டு மனைவியர். முதல் மனைவியாருக்கு இரண்டு பிள்ளைகளும், ஐந்து பெண்களும், இரண்டாம் மனைவியாருக்கு இரண்டு பெண்களும் இருந்ததாகத் தெரிகின்றது. முதல் மனைவியா ருக்குப் பிறந்த இரு புதல்வர்களும் முறையே சதாசிவ செட்டி யார் மற்றும் சாம்பசிவ செட்டியார் ஆவார்கள். இவர்களும்

தங்கள் தந்தையார் காட்டிய வழியே சிறந்த கொடையாளர்களாக விளங்கியதாக நமக்குத் தெரிகின்றது. இவர்களது வம்சத்தினர் பலரும் பரம்பரையாக இன்னும் புதுவையிலேயே வாழ்ந்து வருகின்றனர்.

புதுவையின் புகழ் மணிகளில் ஒருவரான கலவை சுப்புராய செட்டியார் அவர்களைப் பற்றிய இவ்வுரையில் அன்னாரது நினைவைப் புதுவை மக்களிடையே பறைசாற்றி நிற்கும் கல்விச் சாலையைப் பற்றியும் சில சொல்வது மிக ஏற்புடையதாகும் என்றே கருதுகிறேன்.

நதுவை நகரின்கண் வாழ்ந்து வரும் ஹிந்து சமயத்தவரின் குழந்தைகளது மேம்பாட்டிற்காகவே, அக்கல்விச்சாலை 1875-ம் ஆண்டு கலவை சுப்புராயசெட்டியார் அவர்களால் துவக்கப் பெற்றது. முதல் இரு ஆண்டுகளும், அதாவது 1875-ம் ஆண்டு முதல் 1877-ம் ஆண்டு வரை அரசு உதவி பெற்ற ஒரு தனியார் பள்ளியாக இது செயல்பட்டது. 1877-ம் ஆண்டு மே மாதம் 2-ம் தேதி பிறப்பித்த அரசு உத்தரவின்படி இப் பள்ளி அரசின் நேரடி நிர்வாகத்தின் கீழ் கொண்டு வரப்பட்டது. இவ்வாண்டில்தான் இக் கல்விச்சாலையின் கட்டிடமும் கட்டப்ப்ட்டது. இக்கட்டிடம் இங்கு கட்டப்படுவதற்குமுன்னர், இங்கு ஒரு கல்லறை இருந்ததாகத் தெரிகிறது. இக் கட்டிடப் பணி துவங்குவதற்கு முன்னர், இங்கிருந்த கல்லறைகள் யாவும், முத்தியால்பேட்டைக்கு மாற்றப்பட்டதாகவும் அறிய வருகின்றோம். மூன்றுண்டுகள் வரை இப்பள்ளியை ஒரு கிறிஸ்தவ சபையைச் சேர்ந்த குருமார்கள் நிர்வகித்து வந்தனர். பிரான்சு நாட்டில் மூன்றுவது குடியரசு நிலை நாட்டப்பட்ட பின்னர், கல்விச் சாலைகளின் பொறுப்பைச் சமய குருக்களின் பொறுப்பிலிருந்து விடுவிப்பதற்கான இயக்கம் பிரான்சு நாட்டிலேயே மேலோங்கியதை அடுத்து, புதுவையிலும் அதன் விளைவுகள் தொடர்ந்தன. இத்தகைய ஒரு சூழலில்தான், மீண்டும் அரசே இக் கல்விச்சாலையை நிர்வகிக்கும் பொறுப்பினை மேற்கொண்டது.

1880-ம் ஆண்டு, இக்கல்விச்சாலையில் ஆங்கிலப் பிரிவு ஒன்று துவக்கப்பெற்றது. அதுகாறும் புதுவையில் பிரஞ்சு மொழியிலும் தமிழ் மொழியிலும் மட்டுமே கல்வி கற்பதற்கு வசதிகள் இருந்தன. பிரஞ்சு மொழி மற்றும் தமிழ் மொழியில் கல்வி கற்றோர் அனைவருக்கும் வேலை வாய்ப்புகள் எளிதாக அமையவில்லை. ஏனெனில், அன்றைய பிரஞ்சுப்பகுதிகளான, பாண்டிச்சேரி, காரைக்கால், சந்திரநாகூர், மாஹே, ஏனாம் ஆகிய இடங்களிலோ அல்லது பிரஞ்சு காலனிகளிலோ மட்டுமே அவர்களுக்கு வேலை கிடைக்கும் வாய்ப்புகள் இருந்தன. மாறாக, ஆங்கிலக் கல்வி கற்றால், பிரிட்டிஷ் இந்தியாவில் எங்கு வேண்டுமாயினும் சென்று வேலை பார்க்கும் வாய்ப்புகள் இருந்தன. இதை உணர்ந்ததே ஏறத்தாழ நூற்றாண்டுகட்கு முன்னரே, ஆங்கில மொழிக் கல்விக்கான வித்து முதன் முதலாகப் புதுவை நகரில் அமைந்த கலவை சுப்புராய செட்டியார் கல்விச் சாலையில் இடப்பட்டது. இங்கு படித்த மாணவர்கள், சென்னை பல்கலைக் கழகம் நடத்தும் மெட்ரிக்குலேஷன் தேர்வுக்குச் செல்லும் வசதியும் செய்யப் பட்டது.

1885-ம் ஆண்டு ஜனவரி மாதம் 24-ம் தேதியன்று கலவை சுப்புராய செட்டியார் அவர்களது வாரிசுதாரர்களோடு ஏற்பட்ட ஓர் உடன்பாட்டின் அடிப்படையில் இக் கல்வுச் சாலையானது புதுவை அரசின் வசம் ஒப்புவிக்கப் பட்டது. அதை அடுத்து எல்லா சாதியைச் சேர்ந்த மாணவர்களுக்கும் இப்பள்ளி திறந்துவிடப்பட்டது.

புதுவையில் தொழில் கல்விக்கான முயற்சிகள் முதன் முதலாக 1838-ம் ஆண்டில்தான் மேற்கொள்ளப்பட்டன. ஏனெனில் இவ்வாண்டில்தான் புதுவையில் சட்டப்படிப்பிற்கான உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஆனால் தொழில் நுணுக்கப் படிப்பிற்கான ஆரம்ப முயற்சிகள் 1826-ம் ஆண்டிலேயே மேற்கொள்ளப்பட்டதாகத் தெரிகின்றது. ஏனெனில் 1826-ம் ஆண்டிலேயே தெய்யாளின் தெரிஷ்மோன் என்ற

கவர்னர், ஏழைகளுக்கு தொழில் நுணுக்கங்களைக் கற்றுக் கொடுப்பதற்கான பட்டறை ஒன்றை ஏற்படுத்தும் பணியை மேற்கொண்டார் என்று வரலாற்றிலிருந்து தெரிகிறது. எனினும் இம்முயற்சிகள் பெருமளவில் வெற்றி பெறவில்லை.

பின்னர் அதாவது 1872-ம் ஆண்டு Services des Ponts et Chaussees என்ற நெடுஞ்சாலைப் பராமரிப்புத் துறையின் ஆதரவில் தொழில் நுணுக்கப் பள்ளி ஒன்றினை நடத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இம்முயற்சிகளும் ஈடேறவில்லை. மீண்டும், 1879-ம் ஆண்டு, அன்றைய பொதுப்பணித் துறையின் பணிமனைக்கு இணைப்பாகச் சிறிய தொரு தொழில் நுணுக்கப் பள்ளியினைத் துவக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. போதுமான இடவசதி கிட்டாத காரணத்தால் இம்முறையும் முயற்சிகள் பயனளிக்காமல் போய்விட்டன.

இம்முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்ற பின்னர், 1897-ம் ஆண்டில் கலவை சுப்புராய செட்டியார் கல்விச் சாலையில் தொழில் நுணுக்கப்பிரிவு ஒன்று துவங்கப்பெற்றது என்று அறிகின்றோம். ஆகவே இக்கல்விச்சாலையே புதுவை யில் தொழில் நுணுக்கக் கல்விக்கு ஓர் ஆரம்ப களமாக அமைந்திருக்கின்றது. 1907-ம் ஆண்டு, முறைப்படியாகத் தொழில் நுணுக்கக் கல்வி புகட்டுவதற்கென பிரத்தியேக "Ecole des Arts Metiers de Pondichery" என்ற பெயருடன் ஒரு பள்ளி துவக்கப்பெற்றபோது, கலவை சுப்புராய செட்டியார் கல்விச்சாலையில் அதுகாறும் செயல் பட்டுவந்த தொழில் நுனுக்கப்பிரிவானது மூடப்பட்டது. இவ்வாறாக, கலவை சுப்புராய செட்டியார் அவர்களால் துவக்கப்பட்ட கல்விச்சாலையில்தான் புதுவையின் முதல் தொழில் நுணுக்கக் கல்வி புகட்டப்பட்டது எனலாம்.

இத்தகைய அரும்பெரும் சாதனைகளால்தான், கலவை சுப்புராய செட்டியாரின் கல்விக்கூடம், பலவகையிலும், புதுவையின் வளர்ச்சிக்கும் வளத்திற்கும் வழிகோலியிருக்கின்றது. எனவே இத்தகைய அரும்பெரும் கல்வி நிலையத்தின் ஸ்தாபகரும் போஷகரும், கொடை வள்ளலாகவும் திகழ்ந்த கலவை சுப்புராய செட்டியார் அவர்களை இன்றும் புதுவையின் புகழ்மணிகளில் ஒருவராக ஏற்றிப்போற்றுகின்றோம்.

நன்றி: புதுவை வானொலி



# வழக்கறிஞர் பொன்னுத் தம்பிபிள்ளை

(K. பத்மநாபன்.)

---

பிரஞ்சுக்காரர்கள் 19ம் நூற்றுண்டின் இறுதியில் மிகவும் அதிகாரத்துடனும். மிடுக்குடனும் ஆண்ட காலம் அது. உயர் தர அரசு ஊழியர்களாக தமிழர்கள் அமர்த்தப்படுவது இல்லை. பிரஞ்சு அரசு நேரடியாக நடத்தும் பிரஞ்சு கல்லூரிகளில் கூட தமிழர்களின் பிள்ளைகள் படிப்பதற்கு அனுமதி மறுத்த நேரம் அது. இவ்வாறு தமிழர்கள் இழிவாகவும், (இரண்டாவது) மூன்ருந்தர குடிமகனுக கருதப்பட்டிருந்த காலம் அது.

அக்கால கட்டத்தில் பிரான்சு நாட்டில் 1848ஆம் ஆண்டில் பிரான்சில் தற்காலிக ஆட்சி ஏற்பட்டது அந்த தேசிய சபைக்கு பிரஞ்சு இந்தியாவிலிருந்து ஒரு பிரதிநிதியை தேர்ந்தெடுத்து அனுப்பும் உரிமையை வழங்கியது. ஆனல் அந்தப் பிரதிநிதியாக தேர்ந்தெடுக்கப்படுகிறவர் பிரஞ்சு இந்தியாவில் வசித்து வருவதற்கு அத்தாட்சி வேண்டும். 1849ஆம் ஆண்டு மார்ச்சு பதினைந்தில் ஏற்பட்ட சட்டம் (3ஆம் பிரிவி) பிரஞ்சு இந்திய பிரதிநிதி உரிமை விலக்கப் பட்டது பிரஞ்சு இந்தியாவிற்கு பிரதிநிதித்துவம் வழங்காம லிருப்பது சரியல்ல என்று தொடர்ந்து வற்புறுத்தி வந்தார். ஷெல்ஷேர் என்ற மாமேதை. பிரஞ்சு இந்தியா, பிரஞ்சு ஆப்ரிக்க நாடுகள் அத்தனைக்கும் பிரதிநிதித்துவம் மறுக்கம் பட்டது தகாது என்று முழக்கமிட்டவர் ஆவார். இன்றைய

அண்ணுதிடல் என்றழைக்கப்படும். இடத்தில் அன்னரின் சிலை இன்றும் இருக்கிறது. "ஷெல்ஷேர்" திடல் என்று அன்று அழைக்கப்பட்டது. பிரான்சில் மூன்ரும் குடியரசு மலர்ந்தபின், 1871ம் ஆண்டு ஏற்பட்ட சட்டப்படி தேசிய சபை ஒன்றும், முதியோர் சபை ஒன்றும், உருவாக்கப் பெற்றன. இவ்விரு சபைகளுக்கும் உறுப்பினர் ஒருவரை தேர்ந்தெடுக்கும் உரிமை, பிரஞ்சிந்திய மக்களுக்கும் வழங்கப் பட்டது. இவ்வாறு குடியேற்ற நாட்டு ஆலோசனை சபை ஒன்றும், உள்ளாட்சி ஆலோசனை சபையும் இங்கு ஏற்படுத் தப்பட்டது. பின்னர் 1879 ஆண்டு குடியேற்ற நாட்டு சபையை மாற்றி பொது ஆலோசனை சபை என்று ஏற்படுத் தப்பட்டது மேலும் 1880ம் ஆண்டு மார்ச்சுமாதம் 12ம் நாள் பிறப்பித்த சட்டபபடி பிரஞ்சு இந்தியாவிற்கு உள்ளாட்சித் தகுதி (உரிமை). வழங்கப்பட்டது இதன்படி 10 வார்த் தொகுதிகளாக பிரஞ்சு இந்தியா பிரிக்கப்பட்டது. உரிமை வழங்கப்பட்டாலும் இந்தியர்கள் மூன்ரும் தர வாக்காளர் களாகத்தான் கருதப்பட்டனர். பிரஞ்சுக்காரர்கள் முதல் தரமாகவும், பிராங்கோ இந்தியர்கள் இரண்டாவதாகவும், பொது ஆலோசனைச் சபை உறுப்பினர்களில் ஐரோப்பியர்கள் 14 பேர்களும், இந்தியர்கள் 11 பேர்களும் கொண்டதாக இருத்தல் வேண்டும் என்ற நிலைமை இருந்தது.

இந்த சூழ்நிலையில்தான் தமிழர்களின் பிரதிநிதியாக தங்களை அர்ப்பணித்துக் கொண்ட நாடு ஷண்முக வேலாயுத முதலியார்,இந்திய கிறிஸ்தவ பிரதிநிதியாக பொன்னு தம்பிப் பிள்ளை அவர்கள், இந்திய முஸ்லீம் சார்பாக காரைக்கால் தாவூது மரைக்காயர் அவர்களும் பிரஞ்சு இந்திய மக்களின் உரிமைகளை பெறுவதற்கு பாடுபட்ட வரலாறு இங்கு குறிப் பிடத்தக்கது. பொன்னுத் தம்பிபிள்ளை அவர்கள் சிறந்த வழக் கறிஞராக (B.L.) பணிபுரிந்தவர்; இவர் இந்திய உடை யணிந்துவழக்கம்போல மூலகச்சம், நெடு அங்கி, தலைப்பாகை யுடன் காலணி அணிந்து நீதிமன்றத்திற்கு வழக்காட

சென்றிருந்தார்கள். பிரஞ்சு நாட்டு நீதிபதி காலணி இல்லாமல் நீதிமன்றத்திற்குள் வரவேண்டும் என்று கட்டளையிட்டார். பிள்ளையவர்கள் மறுத்துவிட்டார்கள். ஒழுங்கு கட்டுப்பாட்டு முறையை பின்பற்றவில்லை என்று குற்றஞ்சாட்டி தண்டனையையும் பொன்னுத் தம்பிபிள்ளைக்கு வழங்கினர். இதை எதிர்த்துப் பிள்ளை அவர்கள் பிரான்சிலுள்ள உயர்நீதி மன்றத்தில் வழக்காடினர். பாரீசில் J. கொதேன் என்பவர் இந்த தண்டனை முறையற்றதும் மனிதத்தன்மைக்கு முரண்பட்டதும் குடியரசு சட்டத்திற்கு ஒவ்வாததும் ஆகும் என்று வாதாடி வெற்றி பெற்றார்.

இந்தியர்கள் இவ்வாறு ஒதுக்கப்படுவதும் கேவலப்படுத்தப்படுவதும் இனி நடக்கக்கூடாது என்று அதை மாற்றும் சூழ்நிலை வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டார் பொன்தம்பிப்பிள்ளை. பிரஞ்சுக்காரர்களோடு சரிநிகர் சமானமாக உத்தியோகங்கள் பெறவும், சமூக அந்தஸ்து அடையவும் என்ன என்ன காரியங்களைச் செய்தால் இந்தியர்கள் வாழ்வு மலரும் என்று சிந்திக்கலானார்கள். அதன் விளைவு குடியிருப்பு மாற்றம் (Renonounciation) என்ற ஒரு திட்டத்தை தயாரித்து இந்திய மக்களின் சார்பாக பிரான்ஸ் நாடாளுமன்றத்தில் அத்திட்டத்தை வெளியிட்டார்கள். "குடியிருப்பு மாற்றம்" இந்தியருக்கு வழங்குவது தேவை, அவசர அவசியமும் கூட என்று பெருநோக்கு கொண்ட மாமேதை தெபாசென்தெரிஷ்மோன் போன்றவர்கள் உணர்ந்தார்கள். 1881-ம் ஆண்டு செப்டம்பர் 2-ம் தேதி, பொன்னுத் தம்பிப் பிள்ளையின் இந்தத் திட்டத்தை ஒப்புக்கொண்டு அதனைச் சட்டமாக்கினார்கள். பிரஞ்சு இந்திய குடிமகனுக்கு தடை செய்யப் பட்டிருந்த உரிமைகள். பிரான்ஸில் பாரிஸ் டர், படிப்பதற்கும், உயரிய உத்தியோகங்கள் வகிப்பதற்கும் உயர் கல்விக்கும் வாய்ப்புகள் பிரஞ்சு நாட்டினர்போல வழங்கப்பட்டது. இதனல் புதுச்சேரி மாநிலத்து மக்கள் அனைவர் வாழ்விலும் மறுமலர்ச்சி ஏற்படலாயிற்று. குறிப்பாக, தாழ்த்

தப்பட்ட மக்களிடத்தில் குடி உரிமை மாற்றுச் சட்டம் ஒரு நல்ல வாய்ப்பை உருவாக்கியது; பொருளாதாரத் துறையிலும், கல்வித் துறையிலும், உத்தியோக உயர்விலும் அவர்கள் முன்னேறத் தொடங்கினர்கள். இத்தகைய மாபெரும் மாற்றம், பின்னர் 1885 ல் இந்திய தேசியக் காங்கிரஸ் ஆங்கிலேயர்களால் அமைக்கப் பெறுவதற்கு தூண்டுகோலாக விளங்கியது எண்றும் கொள்ளலாம். இன்றைய இந்திய அரசுரிமைச் சட்டத்தின் நிலைக்கள கொள்கையாக விளங்கி வருகிறது. இவ்வாறு வழக்கறிஞர் பொன்னுத்தம்பிப்பிள்ளை அவர்களின் உன்னதமான சேவை வாயில் கதவாக புதிய ஒளியைத் தோற்றுவித்தது என்ற பொருளில் லா-போர்த்து (La- porte) என்று சிறப்புப் பெயரிட்டழைத்தனர்!



## புலவர். ஜெய்னுலாபுதீன்

**M. M. உசேன்**

---

இப் புதுவையின் சிறப்பு, இது பாரத தமிழ்ப் பகுதியில் அடங்கியுள்ள ஓர் சிறிய மாநிலத்தின் சரித்திரப் பிரசித்திப் பெற்ற ஓர் பொன் நகர் என்பது மட்டுமல்ல.

அன்னியர் ஆட்சி புரிந்த காலத்தில், சுதந்திர எண்ணம் படைத்த பலரை அன்புடன் வரவேற்று அவர்கட்கு அடைக்கலம் தந்த நகர் புதுவை என்பது மட்டுமல்ல.

இந்திய தாயகத்தின் பற்பல இடங்களில் சாதி-மத மோதல்கள் ஏற்பட்ட காலத்திலும், புதுவை வாழ் அனைத்து மக்களும், ஒத்தோர்மித்து, சகோதர வாஞ்சையுடனும் சமத்துவ எண்ணத்தோடும் வாழ்ந்து வந்த, ஏன்-இன்றைக்கும் வாழ்ந்து வருகின்ற இடம் புதுவை என்பது மட்டுமல்ல. இந்து கிருஸ்துவ தெய்வ ஆலயங்களிலும், முஸ்லிம் வணக்கஸ்தலங்களிலும் அளவுக்குமேல் நின்றிலங்கும் புனித தலம் புதுவை என்பது மட்டுமல்ல. புதுவையின் தனித் தன்மை புதுவை வாழ் மக்கள், தமிழுக்கு தந்து வந்த சிறப்பிடமும் அம்மொழி வளர்ச்சிக்கு ஆற்றிய தொண்டுமே ஆகும்.

எனவேதான், எங்கோ பிறந்த தமிழ்ப் பேரறிஞர்கள், நாடக ஆசிரியர்கள், தங்கள் புதுமையை வெளிப்படுத்த,

புதுவை மாநகரை தன்னகமாக தேர்ந்து எடுத்து, அதில் வாழ்ந்தும், அதன் மண்ணில் மறைந்துமிருக்கின்றனர்.

புதுவையிலேயே பிறந்து, வாழ்ந்து, புதுவையிலேயே தங்கள் புலமையை வெளிப்படுத்தி, தங்க வானிலிலேயே தமிழ் மக்கள் மத்தியில் அறிமுகமாகி, சிறப்புடன் வாழ்ந்து வந்த ஒரு சில தமிழ்ப் பேரறிஞர்களைத் தவிர, எத்தனையோ புதுவையில் தோன்றிய தமிழ்வித்துவான்கள், மத்தியில் இன்னமும்அறிமுகப்படுத்தப்படாதவர்களாகஇருக்கின்றனர். இதற்குக் காரணம், இவர்கள் இயற்றியவைகளை அச்சிட்டு வெளியிட போதிய வசதி இவர்களிடம் இல்லாமலிருந்தி ருக்கலாம் என்பது ஒன்று. இவர்கள் படைப்புகளை இவர்கள் வாரிசுகளாலோ, சீடர்களாலோ பாதுகாத்து வைக்கப் படாதது மற்றொன்றாக இருக்கலாம்.

இத்தகைய புகழ் மணிகள் வரிசையிலே, புதுவையில் நூறு ஆண்டுகளுக்கு முன்னர் (1872 ல்) பிறந்து 30 ஆண்டு களுக்கு முன் மறைந்த பாட்சாமியான்சாயபு குமாரர் ஜெய்னு லாபுதீன் என்பவர் இடம் பெற்றுள்ளார்.

என் சம சகோதரரும், எங்கள் வட்டாரத்தில் வாழ்ந்த வருமான திரு. ஜெய்னுலாபுதீன் அவர்களின் வாழ்க்கை வர லாறு, அவர் புலமை ஆகியவற்றை அறிய வேண்டும். அன்ன வரை மற்றவர்களுக்கும் அறிமுகப்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தோடு, அப்புலவரைப்பற்றிய தகவல்களை சேகரிக்க முற்பட்டேன்.

ஜெய்னுலாபுதீன் அவர்கள், புதுவை பாதர் சாயபு வீதியில் தனக்குச் சொந்தமான வீட்டில் வாழ்ந்து வந்ததாக வும், தன் தந்தையர் புதுவை எனம் வெங்கடாசலப்பிள்ளை வீதியில் அமைந்துள்ள பஜனை மடத்து வாயிலில் வைதிருந்த தையல் கூடத்தில், தந்தைக்குத் துணையாக அவ்வேலைகளில் தனையனும் ஈடுபட்டிருந்ததாகவும், அதே பஜனை மடத்தில்

அப்போது நடைபெற்று வந்த தமிழ்ப் பள்ளியில், தமிழ் பயின்றதாகவும் கூறப்படுகிறது, தனது வாலிபப் பருவத்தில் தமிழ் வித்துவான்களிடம் அதிக தொடர்பு கொண்டிருந்த தாகவும், புதுவை மகாவித்துவான் பு. அ. பெரியசாமி பிள்ளையின் சிறந்த மாணவனுகத் திகழ்ந்ததாகவும், மகாகவி பாரதியார், புதுவை உப்பளத்தில் (இன்றைய நேத்தாஜி நகரம்) தங்கியிருந்தபோது அவருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததாகவும் தன்னைவிட வயதில் சிறுவர்கள் பாரதி தாசனுரோடும் நட்புறவு கொண்டதாகவும் பல முதியவர்கள் கூறுகின்றனர், மேலும், 75 ஆண்டிகளுக்குமுன், புதுவை முல்லா வீதியில் ஓர் இடத்தில் அமைக்கப்பட்டிருந்த ஓர் நாடக மேடையில் நாடகங்கள் பல நடத்தப்பட்டு வந்த தாகவும், திரு.ஜெய்னுலாபுதீன் குலேபகாவலி என்ற நாடகத் திற்கு பாட்டு வசனம் எழுதியும், தாஜீல்முல்க் என்ற முக்கியப் பாந்திரத்தை தாமே ஏற்று நடித்ததாகவும் தெரியவருகிறது. குலேபகாவலி என்ற நாடகமே, ஜெய்னுலாபுதீன் அவர்களின் முதல் படைப்பாக இருக்கவேண்டும்.

இன்நாடகத்தில், தாஜீல்முல்கின் தந்தையாக வழக்க மாக நடித்து வந்த ஒரு பெரியவரை நான் பல ஆண்டுகளுக்கு முன் கண்டதுண்டு. அவர் கூறுவார். "நான் குலேபகாவலி நாடகத்தில் தாஜீல்முல்கின் கண்ணிழந்த தந்தையாக நடித் தேன், நாள் அடைவில் என் கண்கள் உண்மையில் பார்வை. அற்றுப்போயின அப்படியிருந்தது. ஜெய்லாபுதீன் புலவ ருடைய சொல் வன்மை". என்று புன்னகையுடன் கூறுவார் அவ்வயோதிகர்.

திரு ஜெய்னுலாபுதீனைப் பற்றி மேலும் அறியவேண்டு மென்று பலரை அணுகியபோது. "அவரை நாங்கள் நன்கறி வோம். அவர் பாட்டு எழுதுவார். எத்தனையோ புராணக்கதை களை நாடகமாக அமைத்திருக்கின்றார், புதுவை கிருத்துவ வட்டாரத்தில் அவருக்கு பெருமதிப்பு இருந்தது எத்தனையோ கிறிஸ்துவர் திருமணங்களுக்கு அவர் வாழ்த்துப்பாடல் எழுதி

கொடுத்திருக்கின்றார், 'சின்னையா பிரஸிலோ, ஆனந்தா அச்சகத்திலோ அவைகள் அச்சிடப்பட்டிருந்ததை நாங்கள் கண்டதுண்டு; ஆனால் அக்கவிஞரின் படைப்பு எங்களிடம் ஏட்டில் எதுவுமில்லை என்ற பதில்தான் கிடைத்தது. அச்சடிக் கப்பட்டவை எங்கேயாவது கிடைக்காமல் போகாது என்ற நம்பிக்கையுடன் அவைகளைத் தேடியலைந்தபோது, அதிட்ட வசமாக திரு. ஜெய்னுலாபுதீன் எழுதிய திருமண வாழ்த்துப் பாடல் தொகுப்பு ஒன்றும், "சூசையப்பர் திருப்பாடல்கள்" "அந்தோனியார் தோத்திரக் கீர்தனங்கள்" என்ற தலைப்பு ஓர் கையெழுத்துப் பிரதியும் என் கரங்களில் சிக்கின, (இவை எவரெவரிடத்திலோ இருந்துவிட்டு இறுதியாக கவிஞரின் இளைய குமாரனிடமே அடைக்கலம் புகுந்ததாம்) கவிஞர், தனது 30வது வயதிலேயே திருமண வாழ்த்துப் பாடல்களை இயற்றத்தொடங்கியுள்ளார் என்பதை நாம் அறிய முடிகிறது. திருமண வாழ்த்துப் பாடல்கள் தொகுப்பில் அடங்கியுள்ள அனைத்துப்பாடல்களும் கிருஸ்துவ திருமணங்களில் பாடப் பட்டவைகளாகவே காட்சியளிக்கின்றன. மற்ற சமயத்தவர் தங்கள் சுப காரியங்களுக்கு இக்கவிஞரை அணுகியிராமல் இருந்திருக்க முடியாது. இவர், முஸ்லிம் திருமணங்களுக்கு எழுதியருளிய சோபனப்பாடல்கள் எக்காரணத்தினாலோ, இன்று கிடைப்பதற்கு அரிதாகிவிட்டது.

திருமண வாழ்த்துப் பாடல்கள் தொகுப்பின் முதலேடு களில், திரு. ஜெய்னுலாபுதீன், அன்னைலூர்து மாதாவின் பெயரில் கூறிய ஒரு திருப்பாடலைக் காண்கிறேன்:

அதன் வெண்பா

மாவாரும் லூர்து மரியனை மேனற் பதங்க
ணுவாரச் சொல்லி நலம்புதிய — தேவபரன்
கஞ்சமலர்த் தாளை கருணையுடனே போற்ற
நெஞ்சமே அஞ்சாதே நீ. —

இந்த வெண்பாவுக்குப் பின் பாட்டு தொடர்கிறது.

அன்னை மாமரி என்னும் அமலோர் பவக்கன்னியே
அடியார்களை நின் திருக் கடைக்கண் பார்த்தாள் வாயே
மங்குல் தவழும் லூர்து மலையில் நின் தரிசனம்
மாட்சிமையுடன் தந்தே மகிமையுற்ருய் முனம்.

திரு. ஜெய்னுலாபுதீன் பாடியுள்ள அனைத்து திருமணப் பாடல்களிலும், தொடக்கத்தில் நேரிசை வெண்பா, பின்னர் எண்சீர் விருத்தம், அதற்குப்பின் பாடல். — பாடலில் பல்லவி, அனுபல்லவி; பின்னர் சரணம், முடிவில் வாழி என்ற நெறியை ஒவ்வொரு வாழ்த்துப் பாடலிலும் விடாமல் கவிஞர் கடைபிடித்திருப்பதைக் காண முடிகிறது.

பல திருமண வாழ்த்துப் பாக்களின் நேரிசை வெண்பா வில், புதுவைச் சிறப்பிடம் தந்துள்ளார் கவிஞர் "சீர்வளருக் தென் புதுவை"; "மதி தவழ் சோலை வளர்வுதுவை"; "பூவார் பொழில் சூழ் புதுவை"; "பொன்னே பருவும் புதுவை" "மங்களமே மன்னும் வளர் புதுவை" குஞ்சலத் தோர் மன்னக் குலவும் புதுவை" என்றெல்லாம் புதுவையை வருணித்திருக்கிருர் திரு. ஜெய்னுலாபுதீன்.

வாழ்த்துப்பா ஆசிரியராக மாத்திரம் இம்புலிவரைக் காண என் மணம் நிறைவுபடவில்லை. எத்தனையோ நாடகங் களை சிலர் எழுதியிருப்பதாக கூறப்படுகிறதே, அவைகளில் ஏதாவதொன்று கிடைக்காமல் போகுமாக என்ற கொடுவாள் குறியோடு பலரை சந்தித்து ஏமாற்ற மடைந்த வனுக, புலவரின் இளைய குமாரனை இறுதியாக அணுகினேன். சிலர், தன் தந்தை எழுதிவைத்திருந்த அனைத்தையும் தன் மூத்த சகோரர் அயலூருக்கு எடுத்துச் சென்று விட்டதாகவும், அன்னவருப் இப்போது உயிருடன் இல்லை என்றும் கூறிவிட் டார். அண்ணன் எடுத்து போனது போக மீதி ஏதாவது வீட்டின் மூலை முக்கில் கிடக்கும் அது எந்த கோலத்தில்

இருந்தாலும், அதனை எப்படியாவது தேடித்தர வேண்டு மென்றேன் — எங்கே கிடைக்கப் போகிறது என்ற பதில் என்னை மேலும் ஏமாற்றியது.

சில தினங்களுக்கு முன், செல்லரித்தும், தண்ணீர்பட்டு கரை பிடித்தும், எழுத்துக்கள் கலைந்தும் கலையாததுமாக தோற்ற மளிக்கும் கந்தல் ஏடுகளை, கத்தையாக கட்டிக் கொண்டு என்முன் தோன்றினுக் கவிஞரின் மைந்தன். "இது தான் உண்டு வேறில்லை என்று கூறி விடை பெற்றுக் கொண் டார். குப்பைக் கூளமாக இருந்த தாள் கட்டை அவிழ்த்தேன் முதலில் என் கண்களில் பட்டது. "சீதா கல்யாணம் - பரசு ராமர் பங்கம் — பாதுகா பட்டாபிஷேகம் என்ற தலைப்புடன் செல்லரித்த சில ஏடுகள். தேடியதும் கிடைத்தது என்ற பூரிப்பில் கந்தல் ஏடுகளில் என்பார்வை ஆழச் சென்றது கலைந்த மேனியில் ஓர் வெண்பா என் கண்களைக் கவர்ந்து அதனை வாசிக்கத் தொடங்கினேன். —

சீரா ரவி குலத்துச் செம்மலாம் தாசரிதி
பேரார் சரித்திரத்தைப் பேசுதற்கு நீராருஞ்
செஞ்சடை யானீன்ற சிவகண நாதனிரு
கஞ்ச மலர் சேவடியே காப்பு. -

அடுத்து ஓர் போற்றி விருத்தம்:

அரனரி அயனுங்காணு அரும்பரஞ்சோதியான
கருணை வாழிதியே ஞானக்கரைக் கடந்தோர்க்கு முத்தித்
தருங் க்ருபா நிதியே - தூய தயாபரமான வொளியே
வரமருள் புரி வாயிந்த வையகம் வாழ்போற்றி.

இதனைத் தொடர்கிறது சுமந்திரர் விருத்தம் :

பொன்னகழ் நிகரயோத்தியா புரியினை யாளுமெங்கள்

மன்னவா நினது கீர்தி மகிமையை செப்பொணுதே
பன்னரும் புலியினேடு பசுவும் நீருண்டு வாழ
இன்னகழ் தன்னையாளும் எழில் தசர தேந்திரா
போற்றி

அயோதியாபுரிக்கு வருகை தந்திடும் விஸ்வாமித்ரர் மொழிகிருர் :

“வானவருமெனது வரவைக் கண்டாலே யஞ்சி
வணங்கிச் செல்வாராதலால் இணையிலா தோங்கும்
நாட்டி லெந்தனுடனே போட்டி செய்யவர்களை
வாட்டி என் வலுமையைக் காட்டி யன்னவர்களை
ஆட்டி இம்சைகள் செய்து ஓட்டி மகிழ்வுடனே
மேட்டிமையுடன் வாழும் தாட்டிகமுள...”

கதைத் தொடர்கிறது; தசரதர், இராமனை அயோத்தியா புரியை ஆள வேண்டுமென்கிருன். இராமனே இவ்வாறு மறுக்கின்ருன்.

“செங்கோல் பிடிப்பது வாய்ச்சொல்லாமோ—சிறு
செங்கலெல்லாம் மாணிக்கக் கல்லாமோ
எங்கோன் மகிமை யிதைப் போலாமோ
என்னுல் எடுத்துரைக்கவும் போமோ”—

தனக்குக் கொடுத்த வாக்குறிதியை நிறைவேற்ற வேண்டு மென்று வலியுறுத்துகிருள் கைகை, தசரதன் வேதனையோடு பதில் கூறுகிருன்:-

“சின்னஞ் சிறுவனன்றே இவன்தாண்டி—எங்கும்
சென்று மேதினி சுற்றி அறியாண்டி,

இன்னமு மழலைச் சொல் என்முன்னே ஆடுருண்டி
என்னமா உயிருடன் பிரிந்து நானிருப்பேனடி''...

வனத்திற்கு செல்லும் இராமன் சீதையிடம் விடைபெற்றுக் கொள்கிருன்.

''கண்மணியே தண்மையுள்ள காதலியே ஜானகியே
பெண்மணியே விண்ணமுதே பிரியசுக ரஞ்சனியே
உண்மையுள்ள தந்தை சொற்போல் ஓங்கும் வனத்திற் பரிவாய்
வண்மை தவம் புரிந்து வருவேன் விடையளிப்பாய்''

இன் நாடகத்தை 23 சீன்களாக பிரித்து எழுதியுள்ளார் திரு, ஜெய்னுலாபுதீன்.

செல்லரித்த தாள் குவியலை ஆயத் தொடங்கினேன். அதில் ''நல்ல தங்கை'' என்ற நாடகத்தின் சில ஏடுகளை கண்டெடுத்தேன்.

பஞ்சத்தால் பாதிக்கப்பட்ட நல்ல தங்கை, பசியால் வாடும் தன் குழந்தைகளுடன் தன் தமையன் இல்லத்தை நோக்கி வருகிருள்; வழியில் (தன் செல்வங்களை அணைத்துக்கொண்டு) அவள் புலம்புவதை காட்டுகிருர் கவிஞர்.

''பாழும் பஞ்சம் வந்ததாலே பரதேசி போலானேம்
சூழ்மிக்கானகத்திலே தொல்லைமிக வுறலானேம்
போகும் வழில் மக்காள் பொன்னம்மாள் வீடுண்டு
போயன்னம் புசித்திடலாம் புத்திரர்களே நாமின்று
கண்டவுடனேயுங்களை கவனமாய் வந்தேயழைப்பார்
கவலையுடையாமல் வாரீர் கண்ணியமோடவர் பால்

தாயும் பிள்ளைகளும் தன் வீட்டை நோக்கி வருவதைக் காணும் அவள் அண்ணி அலங்காரி, தன் தோழியிடம், தன் கசப்பை வெளிப்படுத்துகிருள்.

"ஆட்டு மந்தையைப்போல கூட்டங் கூட்டமாக
மேட்டிமையாய் வாராள்
நாட்டிலிவ்வனியாயம் நங்கையே கண்டதுண்டோ
வீட்டிலுள்ளதெல்லாம் கொள்ளையடிப்பதற்கோ?
ஒன்றிரண்டு மூன்ருனல் உலகத்திலுள்ளபடி
ஒற்றுமையாகு மென்பார்
பன்றி குட்டிகளைப் போல் பாரார் திகைத்திடவே
நன்ருய் பிறந்திட்டார்கள் நாட்டிற்கு சுமையாக"

இந்நாடகங்களைத் தவிர வேறுபல நாடகங்களையும், திரு ஜெய்னுலாபுதீன் எழுதியுள்ளார் என்பதற்கு, அவர் விட்டுச் சென்ற ஏடுகள் சான்ருக அமைகின்றன,

"கமலவதனு" என்னும் ஓர் நாவலை நாடக ரூபத்தில் அமைந்திருப்பதையும் "வனமாலிகா" என்னும் மற்ருேர் நாடகத்தையும் கவிஞரின் பழைய ஏடுகளில் காண முடிகிறது.

